

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர் களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலை யைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இது வாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச் சிற்பம்—கி.பி. இரண் டாம் நூற்றாண்டு.

பட உதவி : நேஷனல் மியூஸியம், புதுதில்லி.)

# கபீர் அருள்வாக்கு

தமிழாக்கம்;
தி. சேஷாத்ரி




சாகித்திய அக்காதெமி

*KABEER ARULVAKKU* (Hindi Poems : Kabir Vachanavali) translated by T. Seshadri with a special introduction by Hazari Prasad Dwivedi. Sahitya Akademi, New Delhi. 1989. Rs. 30



முதல் பதிப்பு : 1964

மறு பதிப்பு : 1989

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:
இரவீந்திரபவன், 35, ஃபெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி - 110001.

விற்பனை :

'சுவாதி, மந்திர் மார்க், புதுடில்லி -110001.

கிளை அலுவலகங்கள் :
பிளாக் V-B, இரவீந்திர சரோவர் ஸ்டேடியம்,
கல்கத்தா - 700029.

29, எல்டாம்ஸ் சாலை, தேனாம்பேட்டை,
சென்னை - 600018.

173, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய மார்க்கம்
தாதர், பம்பாய் - 400014

(கிளை அலுவலகங்களிலும் விற்பனை உண்டு)

ரூ. 30

மாருதி பிரஸ், 173, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14

# பொருளடக்கம்

## இரண்டாம் காண்டம்

# முன்னுரை

நம்முடைய இந்தப் புண்ணியப் பெருநாட்டில் இனம், வகை. குணம் குறியற்ற அந்த மெய்ப்பொருளை நேரில் கண்டு அப் பழக்கம் விளங்கத் தன் தீஞ்சொற்களால் அப் பொருளை மக்களுக்குக் காட்டித்தர முயன்ற பெரியார்களுள் கபீர் அவர் கட்கு உரித்தாய இடம் மிகவும் பெருமை நிறைந்த ஒன்றாகும். மக்களிடையே நிலவிவரும் பேச்சு வழக்கின்படி அவர் சிக்கந்தர். லோதி அரசாண்ட காலத்தில் வாழ்ந்திருந்தார். ஸ்ரீ ராமானந்த அடிகளிடம் தம் சிறு வயதிலேயே தீட்சை பெற்றார். இறக்கும் வேளையில் அவர் காசியை விட்டு மகஹர் என்ற இடத்துக்கு வந்துவிட்டார்.

சம்பிரதாயத்தினரிடையே (கபீர் நிறுவிய சமயக் கோட்பாடு களைப் பின்பற்றுபவர்களிடையே) நிலவிவரும் நம்பிக்கைப்படி அவர் ஓர் அந்தண விதவையின் மகவாவார். சமூகக் கொடுமைக்கு அஞ்சி அவர் தாய் தன் குழந்தையை 'லஹர் தாரா' என்ற குளத்தின் கரையருகில் எறிந்து விட்டாள். எதிர்பாராத பொருத்தமாய் நீரு என்கிற (ஜுலாஹா) முஸல்மான் சேணியன் ஒருவன் அவ் வழியே சென்று கொண்டிருந்தான். பச்சிளங் குழந்தையைக் கண்ட அவன் உள்ளத்தில் இரக்கம் பரிந் தெழுந்தது. குழந்தையை எடுத்து வந்து தன் வீட்டிலே சீராட்டி வளர்த்தான்.

காசித் தலத்தில் உடல் நீத்த உயிருக்குத் தானே வீடு கிடைக்கும் என்று ஒரு நம்பிக்கை உண்டு. கபீர்தாஸர் இப்படிப் பட்ட நம்பிக்கைகளின் வலையில் சிக்க விரும்பாதவர். அதனால் தான் மகஹர் வந்து அங்கே இறந்தார். அவர் மறைவு விக்கிரம ஆண்டு 1575, மார்கழி மாதம் வளர்பிறை ஏகாதசித் திதியன்று ஏற்பட்டது என்று சொல்லப்படுகின்றது. மக்கள் நம்பிவருகின்ற படி. கொண்டால் அவர் நீண்ட வாழ்நாளைப் பெற்றிருந்தார். அவர் பிறவி விக்கிரம ஆண்டு 1455-இல்; அதாவது,

கி.பி. 1398-ஆம் ஆண்டு ஏற்பட்டது. அது சரியாக இருக்கலாம். அப்படித்தான் அவருடைய கொள்கையினர் நம்புகின்றனர். அப்படிப் பார்த்தால் அவர் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு முழுமையும் அதற்கு மேலும் சில காலமும் வாழ்ந்திருக்கிறார்.

இந்திய வரலாற்றின் இந்தப் பகுதி சமயத் துறையில் பெரும் புரட்சிகளும், ஒன்றையொன்று ஒட்டிப் பல மாறுதல்களும் ஏற்பட்ட காலம். இதற்குச் சற்றேறக்குறைய நூறு ஆண்டு களுக்கு முன்னர்தான் கட்டமைப்பு வாய்ந்த முகம்மதிய மதம் இங்கு வந்து சேர்ந்தது. முகம்மதிய மதத்தின் சமூக அமைப்பு, இந்தியாவில் நீண்ட நெடுங்காலமாக வழக்கிலிருந்து, மாற்றமே ஏற்படாத ஒன்று என்று எண்ணப்பட்டு வரும் சாதிப் பிரிவினையை ஒத்துக்கொண்ட சமூக அமைப்புக்கு ஆட்டம் தரும் ஓர் அறை கூவலாக வந்து சேர்ந்தது.

முதல் நடவையாகப் பாரத நன்னாடு புதிய ஒரு சமயத் துடனும், புதிய ஒரு சமூக அமைப்புடனும் எதிர நேர்ந்தது. அவ் விரண்டுமே இந்நாட்டின் சமயம், சமூகம் இரண்டின் அமைப்புக்கு முற்றிலும் மாறுபட்டவையாய் இருந்தன. இதற்குமுன் நம் நாட்டுக்குள் வேறு சாதிகள் வந்தன வல்ல என்று சொல்ல முடியாது. உண்மையில் கவியரசரான இரவீந்திரநாத் தாகூர் சொல்லியுள்ளபடி 'இந்தியத் தொன்னாடு, பல்வேறு மக்கட் குலங்கள் கூடிய பெருங்கடலே' யாகும்.

இங்கே பரவி நிலைத்திருந்த சமய அமைப்பிலேயே பல சாதிகள் சேர்ந்திருந்தன என்றாலும் ஒரு சாதியினன் பிறிதொரு சாதிக்கு மாறமுடியாது. ஆனால் புதிதாக வந்த சமயத்தினரின் சமூக அமைப்பிலோ, நேர்மாறாக இருந்தது நிலை. இந்திய சமயப் பயிற்சிமுறையில் ஒரே சாதியில் உள்ளவர்கள் மாறு மாறாகக் கோட்பாடுகளை (சம்பிரதாயங்களை)ப் பின்பற்றலாம். அவற்றைப் பின்பற்றிக் கொண்டே அவர்கள் தங்கள் சாதியின் உறுப்பினராக இருக்கமுடியும். அந்தச் சாதியின் தனி மகன் தன் விருப்பப்படி வேற்றுப் பயிற்சி முறைகளை ஏற்றாலும் தன் சாதியை விட்டுப் பிரியமுடியாது. புதிதாக வந்த சேர்ந்த அமைப்பு முறையிலோ, அவன் பிரியலாம். ஆனால் அவனுக் கென்று தனியுரிமை ஒன்றும் கிடைக்காது.

முதல் வகை அமைப்பில் சாதியின் பேரால் கிடைத்த சிறப்பைக் காப்பாற்றி, விருப்பப்படி தடையில்லாமல் தனி முறை

யில் சமயப் பயிற்சியைச் செய்து வரமுடியும். புதிதாக வந்த அமைப்பிலோ சாதிச் சிறப்பு ஒழிந்துவிட்டது. சமூகமாகச் சேர்ந்தே சமயச் சாதனைகளை நடத்த நேரிட்டது. இந்தச் சூழ்நிலையில் முதல் முதலாக அந்த அமைப்பு இங்கே தலை காட்டிய போது ஒரு முணுமுணுப்பும் அமைதியின்மையும் இயல் பாகவே ஏற்படத்தான் செய்தன. சிறிது காலம் பாரதப் பழம் நாடு இதுவரை கைக்கொண்டிருந்த ஒழுக்க நலங்களையும், நெடுங்காலமாகக் குணம் குறியற்ற அருவ மெய்ப்பொருளுக்குக் கொடுத்து வந்த பெருமையையும் மறந்துவிடுமோ என்ற ஐயப்பாடு தோன்றிற்று.

இந்தத் தருணத்தில் தான் கபீர்தாஸர் பிறந்தார். அவர் நாட்டில் உண்டாகியிருந்த சலசலப்பையும், குலைவையும் பார்த் தார்; நிலைமையைப் புரிந்துகொண்டு மக்களின் கவனத்தை அந்த 'அடிப்படைப் பரம்பொருள்'பால் திரும்பச் செய்தார். அவர் சுட்டிய உண்மை இரண்டு சமயத்தினருமே ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இருந்தது. எனினும் இரு சமயத்தினருமே புறச் சடங்குகளுக்கு மிக்க ஏற்றம் கொடுத்து வந்ததனால் அவர் கள் பார்வை தெளிவற்று மங்கியிருந்தது. கபீர் அவர்கள் உரக்கக் கூவிச் சொன்னார்கள்:

'அடே, இந்த இரண்டு வழியிலுமே அவரை அடைய முடியாது.'

அவர்கள் மேலும் சொன்னார்கள்:

'நம்முடைய இராமர், ரஹீம், கரீம், கேசவன், அல்லா எல்லோருமே அந்த இராமர்தாம். ஐயத்தை ஒழி. ஈசுவரன் ஒருவரே, அவரே உலகம் தாங்கி. இரண்டாமவர் கிடையாது.'

கபீர் தாஸரைச் சீராட்டித் தாலாட்டி வளர்த்த முசல்மான் சேணியரின் சுற்றத்தில் ஒரு புறம், 'நாத' சம்பிரதாயத்தினரின் கோட்பாடுகள் இடம் பெற்றிருந்தன. மறுபுறம் முகம்மதியச் சமயத்தின் போக்குகளையும் ஏற்று அவற்றின்படி அவர்கள் நடந்து வரத்தொடங்கியிருந்தனர். நான்[1] எழுதியிருக்கும் கபீர் என்ற நூலில் இந்தச் சாதியினரின் முன்பின் நிலைகளையும் சமூகத்தில் அவர்கள் பெற்றிருந்த இடத்தையும்பற்றி விரிவாக ஆராய முயற்சி செய்திருக்கிறேன். ஈண்டு அவற்றைப்பற்றிப்

1. முன்னுரை எழுதிய ஹஜாரி பிரசாத் துவிவேதி

பேசத் தேவையில்லை. சுருக்கமாக இவ்வளவு விளக்கினால் போதுமானது.

இந்தியாவில் நெய்யும் தொழிலில் ஈடுபட்டிருந்த சாதியினர், முகம்மதிய சமயம் வருவதற்கு முன்னர் அருவ வழிபாட்டினரான நாத சம்பிரதாய யோகிகள் காட்டிய வழியைப் பின்பற்றி வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தனர். முகம்மதிய மதத்தை அவர்கள் தழுவியபோது நன்கு அமைந்த ஒரு சமூகத்தின் அமைப்புமுறையும் சமயத்துடன்கூட அவர்களுக்குக் கிடைத்தது. அவர்கள் படிப்படியாக முகம்மதியர்களாக மாறினர். அவர்களுள் சிலர் அப்பாலும் நாத சம்பிரதாயத்தையே பின்பற்றி வந்தனர். காசியில் கபீர் வளர்ந்து வந்த 'ஜுலாஹா' வமிசத்தினர் முகம்மதிய மதத்தைத் தழுவியவர். இருப்பினும் அவர்கள் நாத சம்பிரதாயத்தைப் பின்பற்றியதால் மேற்கொண்டிருந்த ஒழுக்கங்களை விட்டவர்களாக இல்லை. கபீர் தாஸருக்கு [1]நிர்க்குணமார்க்கத்தில் சிறுவயதிலேயே யோகப் பயிற்சி செய்யும் முறையைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்து விட்டிருந்தது. முகம்மதிய மதம் வளரும் திறம் கொண்ட ஒரு மதம். அதைத் தழுவும் வாய்ப்பும் கபீருக்கு ஏற்படவே அவருக்கு எல்லையற்ற ஒரு துணிவும், தன்னம்பிக்கையும் ஏற்பட்டுவிட்டன. இதனிடையே ஸ்ரீ இராமாநந்த அடிகளுடைய அருள் நோக்கும் ஏற்படவே அவருக்கு யோக வழியின் வறண்ட தன்மையும், பக்தி மார்க்கத்தின் கனிந்த ஈரத் தன்மையும் தெரியவந்தன.

அவருடைய இலக்கியத்தை 'யோகம்' என்ற பூமியில் 'பக்தி' என்ற விதை விழுந்து எழும்பி வந்த ஒரு கொடியுடன் ஒப்பிடலாம். அந்நாட்களில் வடக்கே உள்ள ஹட யோகிகளுக்கும், தெற்கேயுள்ள பக்தர்களுக்கும் இடையே அடிப்படையிலேயே பெரும் மாறுபாடுகள் இருந்தன. ஹடயோக சாதனை ஒடியும், வளைந்து கொடுக்காது. பக்தி வளையும், முறியாது. ஒன்று 'சமூகத்தில் ஏற்றம், தாழ்வு என்ற எண்ணம் இகழ்தற்குரியது. எதிர்ப்புக்கேற்றது' என்று எண்ணிற்று.

பக்தரோ ஏற்றத் தாழ்வு மாட்சியையும், சுறுசுறுப்பையும் ஏற்படுத்த வல்லது என்று எண்ணினார்கள். அதிலும் வேடிக்கையான முரண்பாடு என்னவென்றால் ஹட யோகத்தில் நம்பிக்கை உள்ளவர், சமூக ஏற்றத் தாழ்வுகள் முறையற்றவை என்று

---

1. கடவுள் அருவப் பொருளாக வழிபடும் முறை

எண்ணியும்கூடத் தனி மனிதனை மிகவும் உயர்ந்தவனாகக் கருதப் பின்வாங்கவில்லை. பக்தியிலோ ஒருவர் சமூகத்தில் சிறப்பான மதிப்புக்கு உரியவராயிருந்தும் தன்னைப் புல்லினும் புல்லியராகக் கருதி, அப்படிக் கருதுவதில்தான் தனக்குப் பெருமை எனவும் எண்ணினர். யோகி சாதி வேறுபாட்டை முழு மூச்சுடன் எதிர்த்தான்.

வெளிச் சடங்குகள், அவற்றின் மூலம் கிடைக்கும் பெருமை இவற்றையெல்லாம் சிறி உதறினான். ஆனால் ஒவ்வொரு யோகியும் மற்றக் கீழ் மக்களை விடத் தான் உயர்ந்தவன் என்று இறுமாப்புக் காட்டினான். மற்றவரெல்லாம் வெளி நோக்கு வாழ்க்கையே நடத்துகின்றனர் என்று இகழ்ச்சி கூறினான். மறைந்த பொருள் கொண்ட சிக்கலான பல பேச்சுக்களைப் பேசி அவர்களை நையாண்டி செய்தான்;[1] எல்லாவற்றிற்கும் மேலாகத் தான் செய்யும் விந்தைச் செயல்களைக் கண்டு மற்றவர் மூக்கில் விரல் வைத்து விம்ம வேண்டும் என்று விரும்பினான். பக்தன் சாதி வேறுபாடு, வருணாசிரம அமைப்பு, மேல் கீழ் என்ற நிலைகள் எல்லாவற்றையும் தலைமேல் வைத்து ஏற்றுக்கொண்டான். தான் பிறவிக் கடலில் அலைந்து உழலும் வழி தப்பிய பிராணி என்று எண்ணினான்.

தான் செய்த பாவத்துக்கு மீண்டும் மீண்டும் இரங்கி, நைந்து வருந்தினான். அந்தர்யாமியான கடவுள் அவன் உள்ளத்தையும், அவன் படும் துயரையும் உணர்ந்து அவனை உலகப் பிணைப்பிலிருந்து கண்டிப்பாய் விடுவிப்பான் என்று நம்பினான். யோகியோ தன் ஞானத்தில் செருக்குக் கொண்டு திரிந்தான். பக்தனோ, 'அறியாமையே எனக்கு வலிவு; கடவுளின் அருளைத் தேடித் தரும் ஒன்று' என்று நம்பினான். அவன் பிண்டத்தையே (உடலையே) பேருலகங்களாகக் கொண்டான். இவன் பிரும்மாண்டம் முழுவதையுமே பிண்டமாகக் கண்டான். யோகி தன்னை நம்பினான். பக்தன் ஸ்ரீ இராமபிரானுக்கு அடிமை பூண்டான், அவரை நம்பி வாழ்ந்தான். யோகி அன்பைப் பலவினம் என்று எண்ணினான். பக்தன் ஞானம் ஈரமற்றது, கல்லைப் போன்றது என்று கருதினான். அவன் யோகி, இறுமாப்புக் கொண்டான். இவன் பக்தன், வணக்கம் ஏந்தினான்.

பொதுவாக மக்களிடையே இவர்கள் இருவரும் இருவகைக் கருத்துக்களை ஊன்ற விட்டனர். அன்பும் நம்பிக்கையும்

---

1 தமிழ் நாட்டுச் சித்தர் பாடல்களைப் படித்தால் இந்தப் போக்கு நன்றாகப் புரியும்—தி.சே.

கொண்ட இல்வாழ்வான், யோகியைக் கண்டு அச்சமும் ஐயமும் கொண்டான். அவன் எண்ணினான்: மாயை பயங்கரமானது. இதிலிருந்து தப்புவது கடினம். சித்திக்கான வழி இடையூறு நிரம்பியது. யோகக் கிரியை இல்லாத மனிதன் என்ன என்ன சங்கடம் அடைவானோ?

எண்பத்து நான்கு லட்சம் வகை உயிர்களுள் எவ்வளவு நாள் திரும்பத் திரும்பப் பிறவி எடுத்துத் துயர்ப்பட வேண்டுமோ? உலகம் என்ற பின்னல் வலை மிகவும் வலிவானது, மாயைச் சக்கரம் முடிவற்றது. சாதனை மார்க்கம் (யோகப் பயிற்சி வழி) செல்ல மிகவும் கடினமானது. இடையூறுகள் அணிவகுத்து, வழியடைத்து நிற்கின்றன. இல்லறத்தான் இடிந்து நிற்கிறான். பக்தனோ அவனை எதையும் பொருட்படுத்தாதவனாக ஆக்கி விட்டான். தவறியேனும் சரி, ஒரு முறை ஹரியினுடைய பெயரைச் சொன்னால் போதும். பிறகு அவன் ஒன்றும் செய்யவேண்டிய தேவை இல்லை.

விஷ்ணுவின் திலகம் (திருமண்ணிடும் குறி) ஒரு முறை எப்படி யாவது நெற்றியில் ஏறி விட்டால் போதும், வைகுண்டத்தின் வாயில் திறந்து விடும். துளசி மாலை எப்படியாவது கிடைத்து விட்டால் போதும். கோலோகத்தில்[1] நிச்சயம் இடம் கிடைத்து விடும். கலியுகம் எல்லா யுகங்களைக் காட்டிலும் சிறந்தது. ஏன் என்றால் எண்ணத்தால் செய்த தீவினைக்குக் கெட்ட விளைவு ஒன்றும் கிடையாது. ஆனால் மனத்தாலும் செய்த புண்ணியத் திற்கு நல்ல பலன் கிடைத்து விடும். ராமன் பெயர் ராமனையும் விடப் பெரியது. அதனால் அச்சம் ஒன்றும் தேவை இல்லை.

யோகம் இல்வாழ்வானை அளவுக்கு மீறிச் சந்தேகப் பிராணியாக மாற்றி வைத்தது. பக்தி முழுவதும் நம்பிக்கை கொண்டு வாழ்பவனாக மாற்றிற்று. ஒன்று முக்தியை விலை யுயர்ந்த வாணிபப் பொருளாகக் காட்டிற்று; மற்றொன்று அதை மிகவும் மலிவான பொருள் என்று பேசிற்று. யோகத்தில் தழதழப்பு, ஈரம், கண்ணீர் ஒன்றுக்கும் இடம் கிடையாது. பக்தனை அடிக்கு அடி நடுக்கம், படபடப்பு, சடத்தன்மை (மயக்கம்), மயிர்ப் பொடிப்பு (உரோமாஞ்சலி) முதலிய நிலை களுக்கு அழைத்துச் செல்லும் பக்தியை யோகியின் விட்டண்டையே காண முடியாது. 'பாகம், விபாகம் எல்லாம் கற்பனையே; கற்பம் விகற்பம் எல்லாம் வீண், உலகம் கானல்

---

1 கோலோகம்—பக்தர்கள் அடைந்து மீண்டு வாராத பகவானின் இருப்பிடம்.

நீர், பரம்பொருள் விபாகம், அவிபாகத்திற்கு அப்பாற்பட்டது; சூட்சுமம், ஸ்தூலம் இரண்டையும் தாண்டியது. அது ஒரே நிலையானது. சமரஸம் கொண்டது-என்பனவெல்லாம் உண்மையானால் அழுவது எதற்காக?

'அகண்ட சைதந்ய ரூபமான (ஒரே உணர்ச்சித் தன்மை கொண்ட) மாயையற்ற அப்பெருந் தலைவனுக்கெதிரே இந்த ஓலம் ஏன்? குணமற்ற, மாற்றற்ற தயை, மாயை யற்றவனைப் பூசிப்பது என்ன? ஏத்தித் துதிப்பது என்ன?' என்று அவதூத கீதை பேசுகிறது. இரக்கமற்ற துணிவும், மாயையற்ற தன்மையுமே யோகத்தின் முதல் நிபந்தனைகளாம். ஆதலினால் தான் இது தன்னைப் பின்பற்றுகிறவர்களை ஒரு விறைப்புக் கொண்டவர்களாக ஆக்கி விடுகிறது. கபீர் தாஸருக்கும் இந்த விறைப்பு, தந்தை வழிச் சொத்தாக யோகிகளிடமிருந்து கிடைத்துவிட்டது.

உலகத்தில் உழன்று திரியும் சீவன்களைக் கண்டு அவர் கருணை கொண்டு கண்ணீர் மல்கிக் கலங்கியதில்லை. எதிர் மாறாக அவர் இன்னம் கடுமுகம் காட்டி உதறினார். ஆனால் இந்த விறைப்பு கபீர் தாஸருடைய முழுக் குணமாக இல்லை. அவர், 'அவதூ!' என்று அவதூதரையோ அல்லது யோகியையோ கூவிப் பேசும்போதுதான் விறைப்பு மிக ஓங்கி நிற்கிறது. அவர் யோகத்தின் அச்சுறுத்தும் உருவங்களை எடுத்துப் பேசுகிறார்; வெளி, வளி இவற்றின் புதிர்களை விடுவிக்கிறார். சூனியம், சகஜம்,[1] என்பனவற்றின் ரகசியத்தைக் கேட்டும் விளாசுகிறார். துவைதம், அத்துவைதம்[2] இவற்றின் உண்மை என்ன என்று சர்ச்சைசெய்கிறார். இவ்வளவும் செய்து அவதூதனின் அறியாமையை எள்ளி நகையாடிக் கோணற் சிரிப்புச் சிரிக்கிறார்.

ஆனால் அவர் உண்மையில் ஒரு 'பித்தர்'. தனிப்பட்ட கருத்தும் போக்கும் கொண்டவர். 'நல்லதோ கெட்டதோ, சரியோ தப்போ எதையாவது பிடித்துக் கொண்டால் வாழ்நாள் முழுவதும் அதனுடன் ஒட்டிக் கொண்டிரு' என்கிற அடிமைக் கொள்கை அவருக்குப் பிடிக்காது. அவர் உண்மையை அறிவதில் நாட்டம் கொண்டவர். எந்த வேட்கையும், விழைவும் அவரை அவர் வழியிலிருந்து அசைக்க முடியவில்லை. அவர் தம் வீட்டை எரித்துவிட்டுக் கையில் 'சுராடா'வை (எரிபந்தத்தை) எடுத்துக்

---

1 சூனியம், சகஜம்: உடலைக் கட்டும் பயிற்சிகளின் மூலம் யோகம் செய்யும் போது ஏற்படும் நிலைகள்.

2 துவைதம்—அத்துவைதம்: கடவுள் வேறு, உயிர் வேறு என்று பேசுவது துவைதம். இரண்டு இல்லை; ஒன்றே உள்ளது என்று பேசுவது அத்துவைதம்.

கொண்டு கிளம்பினார். தமக்குத் தோழனாக அவர் 'தன் வீட்டையும் எரிக்கச் சம்மதிப்பவனை'த் தான் ஏற்றுக்கொள்வேன் என்கிறார்.

"நாம் நம் வீட்டைக் கொளுத்தினோம், 'சுராடா' வைக் கையில் கொண்டோம். யார் நம்முடன் வருகிறானோ அவன் வீட்டையும் இப்பொழுது கொளுத்தி விடுவோம்."

அவர் 'உள்ளங்கால் முதல் உச்சந்தலை' வரை விடுதலை வெறி பிடித்தவர்; 'மத்த மௌலா.' சென்றதைச் சிந்திக்க மாட்டார்; நிகழ்காலமே எல்லாம் என்று கருத மாட்டார். வருங் காலத்தில் எல்லாவற்றையும் தட்டி உதறி விட்டுக் கிளம்பி விடுவார். அப்படிப்பட்ட வெறியர் அவர். செய்ததற்கெல்லாம் சுவடி வைத்திருக்கும் உலகியல்வாதி மத்தனாக ஆக முடியாது. சென்றதைச் சிந்திப்பவன் வருங்காலத்தில் புரட்சி காண முடியாது. அன்பில் வெறி கொண்டவன் உலகம் வைத்திருக்கும் அளவுகோலைக் கொண்டு தன் வெற்றி தோல்விகளைக் கணக்கிட மாட்டான். கபீர்தாஸர் சுதந்திர வெறியர். உலகின் கெட்டிக்காரத்தனத்துடன் அவருக்கு என்ன உறவு?

"நாம் அன்பு வெறி கண்டவர். நமக்கு விழிப்புத் தொல்லை ஏது? இந்த உலகத்திலிருந்து விடுபட்டு இருக்கிறோம். உலகத்துடன் உறவு ஏது?"

கபீர்தாஸர் பக்தனையும் பதிவிரதையையும் ஒரே தட்டில் வைத்துப் பார்த்தார்: இருவருடைய வழியும் கடினமானது. இரண்டு பேருடைய மனப்பாங்கும் பூப்போன்றது. இருவருக் கெதிரேயும் ஆசைகளின் வலிவான வலை விரிந்து கிடக்கிறது. இரண்டு பேருமே தங்கத் தாமரை மலரின் குணமுடையவர்கள். பார்ப்பதற்கு மெல்லியர், உள்ளே திண்மை கொண்டவர். வெளியே பட்டுத் தன்மை, உள்ளே சொர சொரப்பு. எல்லோருக் கும் பணி புரிந்துகொண்டே ஒருவனை மட்டும் கூடும் பதிவிரதையை அப்பக்தனுடன் தான் ஒப்பிடமுடியும். கற்புக் கரசியின் 'தலை வகிட்டுச் செந்தூரத்திற்கு'ப் பதில் கறுப்பு மையிட்டு எழுத முடியாது. கபீர் கண்களில் ராமன் அமர்ந்து விட்டான், களிநடம் புரிய வேறு யாரும் அங்கே புகமுடியாது.

பக்தன் செய்யும் பின்வரும் பிரார்த்தனை கற்புடைப் பெண்ணுக்குத்தான் பொலிவுறப் பொருந்தும்:

"கண்ணுக்குள்ளே வா, இமையை மூடிவிடுகிறேன். நானும் ஒருவரையும் பார்க்கமாட்டேன். உன்னையும் பார்க்கவிடேன்.

"என்னுள்ளே என்னது ஒன்றும் கிடையாது. இருப்பதெல்லாம் உன்னதே. உன்னதை உன்னிடம் ஒப்புவிப்பதால் எனக்கென்ன போயிற்று?"

தன்மேலும் தன் தலைவன் மேலும் அவர் கொண்டுள்ள இந்த அசாதாரண நம்பிக்கைதான் அவரிடம் தனியொரு ஆற்றலை நிரப்பிவிட்டிருக்கிறது. அவருடைய கருத்துக்கள் நேரே இதயத்திலிருந்து கிளம்புகின்றன; நேரே சென்று கேட்பவர்கள் உள்ளத்தைக் கவ்வுகின்றன; தைக்கின்றன.

பிறர் கொண்டிருக்கும் குருட்டு நம்பிக்கைகளைத் தகர்க்கும் போது அதட்டி அடிக்கும் அவர், அன்பு காட்டும் பொழுது அப்படியே உருகிவிடுகிறார். அன்பனிடம் உறுதியான ஈடுபாடு இருக்கிறது என்றாலும் இந்தக் காதல் ரசம் போதுமானதுதான் என்ற நம்பிக்கை ஏற்படவில்லை. 'அந்த அன்பனுக்கு எப்படிப் பேசினால் பிடிக்குமோ யார் கண்டது? எப்படி உடையணிந்தால் பிடிக்குமோ? ஐயோ, அந்த மத்தனான அன்பன், புதியவனான இனியன், எப்படி வந்து சேருவான்?'

'மனத்தில் காதல் ரசத்தில் நம்பிக்கை போதவில்லை. உடலிலும் (தோற்றத்திலும்) வளமை போதாது. அந்த அன்பனுக்கு எப்படி இருக்கவேண்டும், இருந்தால் பிடிக்கும் என்று என்ன கண்டேன்?'

-கபீர் சங்கிரஹம்

இதைக் கேட்டுக் கபீருக்குத் தம்மிடமே நம்பிக்கை இல்லை என்று கொள்வது தவறு. அன்பின் செறிவும், மனத்தில் ஏற்படும் ஆவலுமே இவ்விதம் வெளியாகின்றன. பக்தனுக்கு என்றுமே தன்னிடம் முழு நம்பிக்கை உண்டு. அன்பனின் உயர்வு, பெருமை ஆகியவற்றிலோ அவன் நம்பிக்கை அதனினும் மிக்கதாம். ஆட்டம் காணாத அன்பைக் கொண்டவன். 'என் காதலன் (பகவான்) அதிருப்தி அடைந்து திரும்பிவிடாமல் இருக்க வேண்டுமே!' என்று அஞ்சுகிறான். நிறைவில் குறைவு உண்டோ என்ற ஐயமும் ஆவலுமே அச்சத்துக்குக் காரணமாகின்றனவே தவிர, தன்னைப் பற்றிக் கொண்டுள்ள மதிப்பு அல்லது நம்பிக்கையின் குறைவு அல்ல.

கபீர் ஒரு புறம் அவதூதர் அல்லது சித்தர்களான யோகிகளைக் கடுமையாகத் தாக்குகிறார். அவர்களுடைய வறண்ட ஞானத்தை எள்ளி நகையாட ஏற்றதாகக் கருதி ஏசுகிறார். அதே போழ்தில் அவர் மறுபுறம் பண்டிதர்கள், சேக்குகள், காஜிகள்[1] ஆகியவர்களையும் விடுகிறாரில்லை. அடித்து விரட்டி விடுகிறார். அவர், 'சேக்கு' அல்லது 'பண்டித'ரைத் தாக்கும் போது, அவதூதர் அல்லது யோகியைத் தாக்கும்போது காட்டும் நிதானத்தைக்கூடக் காட்டுவதில்லை.

அதற்குக் காரணம் என்னவெனின் அவர் பண்டிதர் அல்லது சேக்கினுடைய ஞானக்களஞ்சியத்தை நெருங்கி, நுணுகி ஆராய்ந்து அறிந்தவர் அல்லர். அவதூதரின் சாதனையை அவர் அறிந்திருந்தார். அதனால்தான் அவர் அவர்கள் மேல் படையெடுக்கும்போது அவ்வளவு உக்கிரமாக ஆயுதம் வீசவில்லை. அவர் பண்டிதரையும் 'சேக்' கையும் கூவி அழைக்கும் போதோ ஏதோ மிகவும் புல்லிய பொருளை விளிப்பதுபோல் விளிக்கிறார்! 'புறச் சடங்குகளின் மூட்டைகள் பண்பு கெட்ட வழக்கங்களின் குழிகள்!'

சாதாரணமான ஹிந்து இல்லறத்தானைச் சமயம் வாய்க்கும் போது மிகவும் அலட்சியம் காட்டிப் பேசுகிறார். அதனால் பராமுகம் நிறைந்த ஓர் ஏளனப் புன்னகை அவருடைய உதடுகளில் விளையாடிக் கொண்டிருக்கிறது. இவர்கள் அடிபடக் கூடத் தகுதியற்றவர்கள் என்று அவர் இவர்களைப்பற்றிக் கருதுகிறாரோ என்று தோன்றும்படி.

ஆனால் பொருட்படுத்தாத இந்தக் கருத்தின் காரணமாகவே இந்த அடிகளில் ஓர் இயல்பான கருத்துத் தெளிவுடன் உயிருள்ள கவிதையும் உருப்பெற்று எழுந்துவிட்டது. இந்த அலட்சியம் தான் கபீர்தாஸரின் பகடிப் பேச்சின் உயிர். உண்மையில் இதுவரை இப்படிக் கிண்டல் செய்யும் எழுத்தாளர் ஹிந்தியில் பிறந்ததேயில்லை; நேராகவும் அழகாகவும் பாய்ந்து தைக்கும் அவர் மொழி, சொல்லாமலேயே எல்லாவற்றையும் சொல்லி விடும் அவர் நடை மிகவும் எளியதாகவும், ஆனால் மிகவும் ஒளி பொருந்தியதாகவும் உள்ள அவர் கருத்து வெளியீட்டுமுறை இவை வேறு எங்கும் பொதுவாகக் காணக் கிடைக்காதவை.

புறச்சடங்குகளைத் தாக்கிப் பேசும் பெரியார்களுக்கும், யோகிகளுக்கும் இந்த நாட்டில் இதற்குமுன் குறைவொன்றும் இருந்ததில்லை. ஆனால் எளிய நேரான முறையில் இவ்விதம் பொடிப்

---

1. சேக்கு, காஜி: முஸல்மான் பெரியார்கள்.

பொடியாகச் சிதறவைக்கும் மொழியாற்றல் கபீருக்கு முன் மிகவும் காணக் கிடைக்காதது. சொல்கிறவன் உதட்டுக்குள் சிரிக்க வேண்டும். அதுதானே பகடியாகும். கபீர் சொல்லும் சொல் அப்படித்தான் இருந்தது.

உன் தலைவன் (கடவுள்) எப்படிப்பட்டவன்? தெரிய வில்லையே! மசூதியின் உள்ளேயும் முல்லா கூவுகிறானே!

உன் தலைவன் என்னடா செவிடா? எறும்பின் காலில் சிலம்பு ஒலித்தாலும் அவன் கேட்டுவிடுவானே.

பண்டிதனாகி ஆசனம் போடுகிறாய்! நீண்ட மாலையை வைத்துக்கொண்டு ஜெபம் செய்கிறாய். ஆனால் உன் உள்ளே இருப்பதோ வஞ்சனைக் கத்தரி. அதையும் அவன் பார்க்கிறான்.

ஆழமாக அடியிட்டு உயரமும் தாழ்வுமான அரண்மனை கட்டுகிறாய். போகிற எண்ணமே இல்லாமல் இருக்கத் திட்டம் போடுகிறாய். சல்லி சல்லியாகச் சேர்த்து, மாயையைப் பூமியில் புதைத்து வைக்கிறாய். கிடைக்க வேண்டியவன் எடுத்துக்கொள்வான்! நீ சேர்த்துச் சாகிறாய்! பாவி!

கற்புடைய மகளிர்க்கு ஒரு கெஜம் (இரண்டு முழம்) துணி கிடைப்பதில்லை. வேசையரோ சிறந்த உடை அணிகின்றனர். சாதுக்குப் பிச்சை கிடைக்காத இடத்தில் படவா[1] 'பதாஸா[2]' உண்கிறான். வைரம் கிடைத்தது. மதிப்பிடத் தெரியவில்லை, செப்புக்காசை மதிக்கிறாய்! கபீர் 'சொல்கிறார்; சாதுவே கேள். ஹரி எப்பொழுதும் போல்தான் இருக்கிறார்-அவரவருக்குத் தக்கபடி.'

கபீர் வசனாவளி, 143-ஆம் பாட்டு.

இந்தப் பேச்சின் மொழி ஆளை உலுக்கிவிடும். பார்ப்பதற்கு எவ்வளவு எளிமையாய் இருக்கிறதோ அவ்வளவு கூர்மை நிறைந்தது. படிக்கும்போதே பேசுகிறவர் எவ்வளவு தன்னம்பிக்கை கொண்டு பதற்றமே இல்லாமல் இருக்கிறார் என்பது தெளிவாகிறது. அப்படி இல்லை என்றால் இப்படிச் சொல்லம்பைக் குறியதிர எறிய முடியுமா?

கபீர்தாஸருக்கு ஈசுவரபக்திதான் எல்லாமாக இருக்கிறது. வேதம் அல்ல, சாஸ்திரம் அல்ல, குரானும் அல்ல. ஜெபமாலை,

---

1 படவா-சேர்த்தா நடத்தை கொண்டவன்.
2. பதாஸா சீனிப்பாகில் செய்யும் இனிப்புத் தின்பண்டம்.

தஸ்பீஹ்[1], கோவில், மசூதி, அவதாரம், நபி, பீர், பைகம்பர் யாரையும் எதையும் பற்றி அவருக்கு அக்கறை இல்லை. இந்தக் காதல் (கடவுள் அன்பு) எல்லாப் புறச் சடங்குகளும் அடைவிக்கும் பயனுக்கும் மேற்பட்டது. எல்லாம் பண்புப் பழக்கங்களும் காட்டும் பொருளைக் காட்டிலும் சிறந்தது. அந்தக் காதல் பாதையில் குறுக்கிடுவது எல்லாமே கடையதே; புல்லியதே.

அவர் விரதங்கள், தீர்த்தங்கள், பட்டினி, நோன்புகள் எல்லாவற்றையுமே ஒரேயடியாக வீண் என்று சொல்லிவிட்டார். அவற்றைச் சரி என்று சொல்லி எதை, யார், எப்படிச் செய்யலாம் என்று முறை வகுத்துக் கொடுத்து அவற்றையெல்லாம் உலகம் போற்றிக் கடைப்பிடிக்கச் செய்ய எடுத்துக்கொள்ளும் முயற்சி எல்லாம் வீண் வேலை என்று அவர் கருதினார். ஒரே அல்லா(ஹ்) நிரஞ்சனர்; எதனாலும் திரிபடாதவர். அவரிடத்தில் ஈடுபட்டிருப்பதே தம்முடைய குறிக்கோள் என்று அவர் எல்லோருக்கும் கூறி விட்டார். ஈடுபாடு அல்லது பக்தியே வழி. அதுவே முறை. அதுவே முடிவும். அதற்கென வேறு ஓர் இடைவழி, சாதனையும் கிடையாது. அவர் அப்படி உண்டு என்று ஒப்புக்கொள்ளவே மறுத்துவிட்டார்.

அன்பே குறிக்கோள், அன்பே வழியும் விரதம். முஹர்ரம்[2] பூஜை, ஹஜ்[3], தீர்த்த யாத்திரை ஒன்றுமே வழியாகாது. நிரஞ்சனனான (மையற்ற) ஒரே அல்லாதான் என்னுடையவர். ஹிந்துக்கள், துருக்கர்கள் இருவருமே அவரை நெருங்கவில்லை. நான் விரதத்தையும் ஏற்பதில்லை: முஹர்ரத்தையும் அறிந்ததில்லை என்னை விட்டுப் பிரிந்தவரையல்லவா (பிரிந்திருந்தால் அல்லவா) நான் நினைவிருத்திக்கொள்ள வேண்டும்! பூஜை செய்ய மாட்டேன், நமாஸ் படிக்க மாட்டேன். உருவற்ற ஒன்று; அதன் உருவத்தை இதயத்தில் 'பெயராக' ஏற்றுக் கொள்வேன்.

ஹஜ் யாத்திரை, புண்ணியத்தல யாத்திரை, பூசனை ஒன்றையும் ஏற்றுக்கொள்ளவே மாட்டேன். பிரிந்திருக்கிறேனா, இரட்டையாவதற்கு? கபீர் சொல்லுகிறார் : மயக்கம் எல்லாம் பறந்தோடிவிட்டது. நிரஞ்சனரான ஒருவரிடமே மனம் ஈடுபட்டு நிற்கிறது.

கபீர் கிரந்தாவளி, 238-ஆம் பதம்.

---

1. தஸ்பீஹ்—முஸ்லிம்களின் ஜெபமாலை.
2. முஹர்ரம்-முசல்மான்களின் விரதப் பருவங்களுள் ஒன்று.
3. ஹஜ்-அரபு நாட்டிலுள்ள மெக்காவைத் தரிசனம் செய்ய முகம்மதியர்கள் செல்லும் பயணம்.

பீர். பைகம்பர், காஜி, ரோஜா; (பட்டினி நோன்பு) நமாசு முதலிய மேற்கத்திய (முசல்மான் நாட்டுப்) பக்தி முறை எல்லாம் தப்பு என்றே அவர் எண்ணினார். அதே விதமாகத் தேவர், பிராமணர், ஏகாதசி, தீவாளி முதலிய கீழை நாட்டின் பக்தி முறைகளையும் சரியல்ல என்று எண்ணினார். ஹிந்துக் களின் ஆண்டவன் கோயிலில் இருந்து ஆண்டு கொண்டிருக்கிறார். முசல்மான்களின் 'குதா'[1] மசூதியில் குடியிருந்து ஆளுகிறார். சரியே! ஆனால் கோயிலோ, மசூதியோ இல்லாத இடங்கள் இருக்கின்றனவே, அங்கே எவருடைய ஆட்சி நடைபெறுகிறது? அதனால்தான் கபீர் தாஸர் அதை எல்லாம் மறுத்துப் புறக் கணித்தார். அப்படியே அவற்றை எல்லாம் கண்ணை மூடிக் கொண்டு நம்புபவர்களையும் ஒதுக்கித் தள்ளினார் அவர். தம்முடைய 'ஆத்மா' ராமனையே தோழனாகக் கொண்டு கிளம்பினார்.

அவர் சொன்னார்-"ஏ, பக்கிரி, நீ உன் வழியே செல். கோயிலுக்குள்ளும் செல்லாதே. மசூதிப் பக்கமும் திரும்பிப் பார்க்காதே! ஏன் இந்த வம்பில் சிக்குகிறாய்! ராம், ரஹீம் கேசவன், கரீம் இவர்களுக் கிடையே ஒரு மாறுபாடும் இல்லையே. உனக்கு இருவரும் ஒன்று தானே—'ஏக மேவ நத்விதீயம்': ஒன்றே உண்டு. இரண்டாவது கிடையாது.

"நம்முடைய ராமன் ரஹீமே; கரீம் தான் கேசவன், அல்லாவும் அதே ராமனே. ஐயத்தை ஒழி. விசுவம்பரர் (உலகத்தைத் தாங்குபவர்) ஒருவரே. இரண்டாமவர் வேறு ஒருவரும் கிடையாது.

"காஜி, முல்லா, பீர், பைகம்பர், ரோஜா, நமாஸ் முதலிய மேற்கத்திய முறைகள் அவருடையன.

தேவன், அந்தணன், பூஜை, ஏகாதசி, கங்கை, தீபாவளி ஆகிய கிழக்கத்திய முறைகள் இவர்களுடையன.

துருக்கன் மசூதியிலும், ஹிந்துவின் கோயிலிலும் 'குதா'வும் ராமனும் இருக்கிறார்கள். மசூதியோ, கோயிலோ இல்லாத இடத்தில் யாருடைய ஆட்சி நடைபெறுகிறது? ஹிந்துவும், துருக்கரும் பிளந்து பிரிந்து நிற்கின்றனர். காதைப் பிடித்துக் கொள்கின்றனர். பூசலிடுகின்றனர்- அங்கே, இங்கே, பத்துத் திக்கிலும் 'ராஜா ராமன்' நிறைந்திருக்கிறார். கபீர்தாஸர் சொல்கிறார் : "பக்கிரி, நீ உன் வழியே செல்! ஹிந்து, துருக்கர்

1 குதா : ஆண்டவனுக்கு முசல்மான்கள் இட்ட பெயர்.

இவருடைய 'கர்த்தா'வும் (படைப்பாளியும்) ஒன்றே. அவருடைய போக்கு அறியற் பாலதன்று."

கபீர் கிரந்தாவளி, 58-ஆம் பக்கம்.

கபீர்தாஸர் இத்துடன் நின்றரா? அல்லா என்ற சொல் முஸ்லீம் மதத்தை மட்டும் தான் குறிக்கும். ராமன் என்ற சொல் ஹிந்துப் பண்பாட்டைத்தான் குறிக்கும், என்றால் சரி. அந்த இரண்டுக்குமே தொலைவில் இருந்து வணக்கம் செலுத்தி ஒதுங்க முனைந்து நிற்கிறார் அவர். என்றாலும் ஏதாவது ஒரு சொல்லை ஏற்று அதை நடைமுறையில் பயன்படுத்தித் தானே ஆக வேண்டும்? அரபுச் சொற்களும், பாரசீகச் சொற்களும் முஸ்லிம் பண்பாட்டையும், சம்ஸ்கிருதச் சொற்கள் ஹிந்துப் பண்பாட்டையும் மட்டிலுமே நினைவுறுத்தும் என்றால், இந்த எண்ண வேறு பாட்டையும் வளரவிட கபீர்தாஸர் ஒத்துக்கொள்ளவில்லை. வேதம், திருக்குரான் இரண்டையுமே தாண்டி நின்று பேசுகிறார்.

"அங்கே எப்பொழுதும் வானம் இடிக்கும், மழை பொழியும். தூரஹி, (பேரிகை) அங்கே எப்பொழுதும் ஒலித்துக்கொண் டிருக்கும். அங்கே வேதமும், குரானும், கிதாபும் (நூல்களும்) எட்டிப் பார்க்க முடியாது. கபீர் சொல்கிறார் : "அங்கே 'சூரன்' தான் களித்திருக்க முடியும்"

சப்தாவளி, பக்கம் 140

இவ்விதம் புறத்தே நிகழ்த்தப்படும் சடங்குகளை எல்லாம் ஒதுக்கும் ஓர் எல்லையற்ற துணிவுடன் (கோதாவில்) மற்கூடத்தில் இறங்கிவந்தார் கபீர்தாஸர். ஒதுக்குவது மட்டும் ஒரு மறச் செயலாகாது. யாரையும் எதையும் ஒதுக்கிவிட முடியும். ஆனால் ஒரு சிறந்த குறிக்கோளுக்காக இடையூறுகளை ஏற்றுக் கொள்வது உண்மையில் வீரச்செயல் தான். குறிக்கோள் இல்லாத பகையுணர்ச்சி அழிவு தரும், பெருமொரு குறிக்கோளால் தூண்டப்பட்ட இந்த விரோதம் சூரனுடைய அறமாகும். அவர் உறுதியான தன்னம்பிக்கையுடன் அன்புவழியை வெளியிட்டார்.

அசட்டு வழக்கங்கள், சீர்க் குறைவான சடங்குகள் ஆகியவற்றின் தளராத் தானையுடன் அவர் வாழ்நாள் முழுவதும் போரிட்டுத் தீர்த்தார். ஆவலும், இடியும், விருப்பும், வெகுளியும்கூட அவருக்குத் தொல்லை தந்திருத்தல் வேண்டும். அவற்றை அவர் எல்லையற்ற உரம் கொண்டு போரிட்டு வெற்றி கொண்டார். ஞானம் என்ற வாளொன்றே அவருக்குக் கருவியாய் நின்றது. இந்த வீரவாளை அவர் ஒரு கணம்கூடச் சும்மாயிருக்க விடவில்லை. அது எப்பொழுதும் ஒரே மாதிரி வீசி ஒலித்துக்கொண்டே இருந்தது.

ஆனால் சீலத்துடன் அன்பையும் அவர் கைவிடவில்லை. இதை அவரே சொல்கிறார். சீரற்ற கிரியைகள், சிறப்பற்ற பண்புச் செய்கைகள், உயர்வற்ற பழக்க வழக்கங்கள், புறச் சடங்குகள் ஆகியவற்றின் இன்னல் தரும் சூழல்களை அவர் நெஞ்சில் இரக்கமில்லாமல் வெட்டித் தள்ளினார்: 'தலையை உள்ளங்கையில் ஏந்தி' அவர்தம் விதியுடன் சண்டையிட வெளியேறி வந்தார்: ஒரு கணம் கூட அவர் புருவங்கள் கோடவில்லை: நெற்றியில் சுருக்கம் விழவில்லை: உண்மையான வீரன் போன்று அவர் போரிட்டே நின்றார்.

"ஒரு வீரவாள் ஓரேபடித்தாக ஒலித்துக்கொண்டிருக்கிறது. சூரன்தான் அதைத் தாங்க முடியும். காமத்தின் கூட்டத்தை வெற்றி கொண்டு சினத்தை அழித்துவிட்டுப் பேரின்ப வீட்டை அடைந்தான். ஒழுக்கத்துடன் அன்பு செய்து ஞானத்தின் வாள் ஏந்திப் போர்க்களத்தில் விளையாடுவான்."

கபீர் சொல்கிறார்: "எவர் தலையை ஒப்புவித்துச் செயல் புரிவாரோ அவர்தாம்- அந்தப் பெரியார்தான் வீரர்."

சப்தாவளி, பக்கம் 106

கபீர் அவ்விதம் இருந்தார். உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை சுதந்தர வெறி பிடித்தவர். 'மத்த மௌலா'வாக (விரும்பியது விரும்பியவாறு) நடப்பவர். பழக்கத்தால் பிடிவாதம் கொண்டவர். பக்தருக் கெதிரே எளிமை காட்டுவார். பொய் வேடம் போடுபவர் எதிரே சீறும் புயலென வீசுவார். உள்ளத்தில் கள்ளம் அற்றவர்; புத்தியில் தெளிவு நலம் கொண்டவர். உள்ளே பூப் போன்றவர். வெளியில் கடுமை காட்டுவார். பிறவியில் தீண்டத்தகாதவர்; ஆனால் செய்கையிலோ ஏத்தித் துதிக்கத் தக்கவர். இவ்விதம் இருந்தவர் கபீர் தாஸர். அவர் சொன்னதெல்லாம் சொந்தப் பழக்கம் என்ற நிலத்தில் விளைந்தது. அதனால் அவர் கூற்றுக்கள் எல்லாம் உள்ளத்தில் பாய்கின்றனவாக அமைந்தன. குத்தல் பேச்சுக்கள் எல்லாம் கூர்மை கொண்டு புண்படுத்துவனவாக அமைந்தன.

அவருக்கு முன்னர் பலர் புறச் சடங்குகளையும், வெளிக்கு நடத்தும் கிரியைகளையும் கண்டித்து வந்ததுண்டு. ஆனால் அவர் எல்லாம் தங்களுக்கிடையே ஒருவிதப் புதுச் சடங்கு வலையைப் பின்னிக்கொண்டு விட்டனர். அந்தக் காரணத்தலா அவர்களிடம் வீறுற்ற, இந்தக் களிவெறி கொண்ட, எதையும் கருதாப் போக்கு ஏற்பட இயலாமற் போய்விட்டது.

அவருக்கு முன்பிருந்த 'சகஜ விருத்தி[1]' கொண்ட பௌத்தர்களும், யோகிகளும், புத்தகத்தையும் சமய நூல்களையும் எவ்வளவு குறைவாகப் பேசினாலும், அவர்கள் புத்தகங்களைப் படிக்கவே செய்தார்கள். பிறர் அறியாமல் அவர்கள் நூலின் பெருமைக்கு ஆட்பட்டே இருந்தனர். கபீர் கொண்டிருந்த உள்ளத் துணிவுடன் அவர்களால் பின்வருமாறு சொல்ல முடிந்ததே இல்லை.

> "உன் மனதும் என் மனதும் எப்படி ஒன்றாக முடியும்? நான் கண்ணால் கண்டதைச் சொல்கிறேன். நீயோ ஏடுகளில் (கடுதாசியில்) எழுதியதைப் பேசுகிறாய். நான் சிக்கல் தீரும் பேச்சைப் பேசுகிறேன். நீயோ சிக்கல் ஏற்பட வைக்கிறாய்."

உடை படாத தன்னம்பிக்கை, காரணம் தேடாத பக்தி இரண்டும் இல்லாமல் யார் தான், 'நீ சிக்கல் ஏற்படுத்துகிறாய்' என்று அதட்டிப் பேச முடியும்? நேரடியான பேச்சைப் புரியும்படி எளிய முறையில் பேசாமல், சூழல்கள் பொங்கி மறைக்கும் வகையில் எழுதுவது தானே நூல்கள் செய்யும் வேலை!

பக்தி பொங்கி வரும் நிலையில் அவர் தம்மை 'விழுந்தவன்' என்று எண்ணியதில்லை. ஏன் என்றால், தன் 'தைந்யத்தை' (தாழ்மையை) உணரும் போதுகூட அவருடைய தன்னம்பிக்கை அவரைக் கைவிட்டதில்லை. அவர் உள்ளம் எந்தக் காதற் கள்ளைக் குடித்து வெறி கொண்டிருந்ததோ, அது ஞானத்தின் வெல்லம் கொண்டு காய்ச்சப்பட்ட சாராயம். அதனால் தான் அதில் குருட்டு நம்பிக்கை, உணர்ச்சிவசப்படுதல், பேய் பிடித்தாற் போன்று தலை சுற்றும் அன்பின் ஆட்டம் முதலியவை காணப் படவே இல்லை.

ஊழியையே ஆக்கிப் படைக்கும் ஆற்றலையும், நம்பிக்கையை யும்கொண்டு பிறந்தவர் அவர். புது ஊழியொன்றைப் படைக்கும் துணிவும் அவரிடம் இருந்தது. அதனால் தான் அவரால் புரட்சி யுகத்தை ஆக்க முடிந்தது. ஒரு வாக்கியத்தில் அவர் தன்மையைச் சொல்லவேண்டும் என்றால் ஏற்கனவே சொன்னபடி 'தலை முதல் கால் வரை (உடல் முழுதும்) 'மத்தமௌலா' (வெறி கொண்ட பித்தர்) என்று தான் சொல்ல வேண்டும். "ஒன்றையும் பொருட்படுத்தாதவர். துணிவு மிகக் கொண்டவர். பொங்கி வீசும் புயல் தன்மை படைத்தவர்."

---

1. சகஜ விருத்தி - பௌத்தர்களின் சித்தாந்த முறைகளின் எண்ணப் போக்கு'

இந்த வியக்கத்தக்க குணங்களினால்தான் அவர் நடுக்கால இந்தியாவின் உள்ளத்தைத் தன் வயமாக்கிக் கொள்வதில் வெற்றி அடைய முடிந்தது. பிறகும் அவர் ஏற்படுத்திய 'நிர்க்குண பக்தி சாதனை' (அருவப் பொருளின் பால் அன்பு முறை) பக்திப் பாதையில் தன் சுவட்டை ஏற்படுத்திற்று.

கபீர்தாஸரின் நூற்படைப்புக்கள் பல உருவங்களில் கிடைக்கின்றன. அவர் படித்து எழுதப் பழகியவர் அல்லர். அவர் ஆக்கல்கள் எல்லாம் பக்தர்கள் நாவில் நடம் புரிந்து வந்து இன்று நமக்குக் கிடைத்துள்ளன. காலம் செல்லச் செல்ல அவர் இயற்றிய பாடல்களில் எல்லாம் சில மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம்.

அவர் பெயரைக் கொண்டு நிலவும் நூல்களின் எண்ணிக்கை ஒன்றுக்கு மேற்பட்ட 'டஜன்' (பன்னிரண்டு)கள் கொண்டதாக இருக்கிறது. ஆனால் அவை எல்லாம் அதிகாரபூர்வமான பனுவல்கள் ஆகா. தற்கால ஆராய்ச்சி முறையில் நூல்களைத் திருத்தி வெளியிடும் முயற்சி தொடங்கியதிலிருந்து கபீர் தாஸருடைய முதல் பாடல்களைத் தேடிக் கண்டு பிடிக்க வெகுவான முயற்சிகள் நடந்தன.

காலஞ்சென்ற டாக்டர் சியாம சுந்தர தாசருக்குக் கையெழுத்துப் பிரதியொன்று கிடைத்தது. அதில் எழுதிய காலம் விக்கிரம ஆண்டு 1561 (கி.பி. 1504) என்று பொறிக்கப்பட்டிருந்தது. அந்தத் தேதி உண்மையென்றால் அது கபீர்தாஸருடைய வாழ்க்கைக் காலத்திலேயே எழுதப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால் அறிஞர்கள் அந்தத் தேதிக் குறிப்பைத் தவறானது என்று சொல்லி விட்டார்கள்.

அந்தப் பிரதியை அடியொற்றியே டாக்டர் அவர்கள் 'காசி நாகரி பிரசாரிணி சபையின் மூலம் 'கபீர் கிரந்தாவளி' என்ற வெளியீட்டை வெளியிடச் செய்தார்கள். அது ஏற்கனவே எண்ணப்பட்டபடி அவ்வளவு பழமையானது என்று நம்பப்படாவிட்டாலும் குறைந்தது இருநூறு, இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முந்தியதாகவாவது இருத்தல் வேண்டும்.

சீக்கியர்களுடைய 'குரு கிரந்த ஸாஹப்' என்ற நூலிலும் கபீர்தாஸருடைய பாடல்கள் சேர்த்துத் தரப்பட்டிருக்கின்றன. அவையும் கபீர்தாசர் மறைந்து பல நாட்களுக்குப் பின் திரட்டப்பட்டவையே. அலஹாபாபத் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் ராமகுமார் வர்மா அவர்கள் அவற்றை எல்லாம் தனித் தனியே பரிசீலித்துத் தொகுத்திருக்கிறார்கள்.

கபீரின் கொள்கை வழி வந்தவர்கள். 'பீஜக்' என்ற நூலை மிகவும் வணக்கத்துக்குரிய பெருமையுடன் போற்றி வருகிறார்கள். இதை ஒட்டி அநேக விளக்க உரைகளும், விரிவுரைகளும் நூல்களாக வெளிவந்துள்ளன. 'பீஜக்' என்ற நூலில் கிடைக்கும் பாடல்களுக்கும் 'குரு கிரந்த ஸாஹப்' என்ற நூலில் திரட்டப்பட்டிருக்கும் பாடல்களுக்கும் பெரிய அளவில் மாறுபாடுகள் இருக்கின்றன. 'கபீர் கிரந்தாவளி' என்ற நூலிலுள்ள பாடல்களும் மிகவும் மாறுபட்டுக் காண்கின்றன.

புகழ்பெற்ற இந்த மூன்று தொகுப்பு நூல்கள் தவிர கபீர் தாஸர் பெயரைக் கொண்டு வெளியாகியிருக்கும் 'பதங்கள்' (பாடல்கள்), 'சாக்கி'களும் (சான்றுரைக் குறள் பாக்களும்) எண்ணிறந்தவையாம்! பண்டித அயோத்யா சிங்க உபாத்யாயர் (ஹரி ஔத்) என்பவர் எல்லாப் பாடல்களையும் சேர்த்துப் பார்த்துக் 'கபீர் வசனாவளி' என்ற இந்தத் தொகுப்பைத் திரட்டி வெளியிட்டிருக்கிறார்.

கற்பதில் ஆர்வமும், திருத்தம் தேடுவதில் சுறுசுறுப்பும் கொண்ட அறிஞர்கள் இத்தொகுப்பில் உள்ள ஒவ்வொரு பாடலையும் நம்பகமானது என்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள். எனினும் அநேக சம்பிரதாயங்களிலும், அநேக நூல்களிலும் சிதறிப் பரவியிருக்கும் அவர் பாக்களின் தொகுப்புக்களுள் இதுவே மிகவும் சிறப்புப் பொருந்தியது என்பதில் ஐயம் இல்லை.

இதிலிருந்து கபீர்தாசர் முதல் முதலில் எவ்வகை மொழியை உபயோகித்திருப்பார் என்று அறிவதற்கு உதவி பெறாமல் போகலாம். (மொழி பெயர்ப்பில்தான் அந்தப் பேச்சு எழப் போவதில்லையே! தி.சே.) ஆனால் அவருடைய கொள்கைக் கோட்பாடுகள், சிறப்புக்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றை அறிவதற்கு இந்த நூல் மிகவும் பயன் தருவதாக இருக்கும்.

கபீர்தாசரின் 'பஜனை'ப் பாடல்கள் உலகம் எங்கணும் உள்ள சிந்தனையாளர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கின்றன. சமயம் முதலியன கடந்த உண்மையைப் பற்றி ஆராயும் அவருடைய பாடல்கள் உலகுக்கு ஒரு புத்தொளியைத் தந்திருக்கின்றன. இதோ, இந்தத் தொகுப்பும் மனிதனுக்கு உதவக் கூடிய உண்மைச் சமயம் எது என்று தேடுபவர்களுக்கு விடை தரும் உகந்த ஒன்றாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

டாக்டர் ஹஜாரி பிரசாத் துவிவேதி

## கர்த்தா நிருணயம்

(ஆக்கியோனைப் பற்றிய முடிவு)

1

'அக்ஷய புருஷன்' (அழிவில்லாத முழுமுதற் கடவுள்) ஒரு மரம்; 'நிரஞ்சனன்' அதன் அடிக்கிளை; (பிரமன், விஷ்ணு சிவன்) மூன்று தேவர்களும் கிளைகள் ஆயினர். உலகம் இலை ஆயிற்று

2

இறைவன் எனக்கு ஒருவனே, மற்றொருவன் உண்டு என்று சொல்லப்படாது. மற்றொரு இறைவன் உண்டு என்று சொல்வேனானால் இறைவன் மிகவும் முனிந்து கொள்வான்.

3

எதற்கு முகம் இல்லை, தலை இல்லையோ, எது வடிவு கொண்டது இல்லை, வடிவு கெட்டதுமில்லையோ; பூவின் மணத்தைவிட மெலிந்தது எதுவோ, அப்படிப்பட்ட தனி ஒரு தத்துவமே அது.

4

ஆண்டவன் (நம்) உடலிலேயே இன்ப நுகர்ச்சியினது நினைவின் உருவாக உடலற்று இருக்கிறான். நிறமும் உருவும் அற்ற அவன் உலகெங்கணும், எல்லாவற்றுள்ளும் இனிக்க நிறைந்து இருக்கிறான்.

5

அடியார்கள் எல்லாம் நான்கு கைகள் கொண்ட தேவனைப் போற்றி ஏமாறுகின்றனர். கபீரோ, எண்ணற்ற கைகள் கொண்ட பரம்பொருளையே வழிபடுகின்றார்.

(எங்கும் நிறைந்த எல்லையில்லாத பரம்பொருளுக்கு நான்கு கைகள் தாம் என்பது சரியல்ல.)

6

பிறப்பு, இறப்பு (இரண்டும்) நீங்கிய என் இறைவன் அவன். எல்லாவற்றையும் படைத்த அந்த அன்பனுக்கு நான் ஆட்பட்டேன்.

7

ஒன்று (என்னலாம்); என்றால் அது (இருக்கும் ஒன்று) இல்லை; இரண்டு என்று சொல்வது திட்டுவதாகும். (பழி கூறுவதற்கு ஒப்பாகும்.) கபீர்தாசர் சிந்தித்துச் சொல்கிறார்: (உண்மைப் பொருள்) எப்படி இருக்கிறதோ அப்படியே இருக்கட்டும். (உணர்வுக்கே இலக்காகும் பொருள் அது; பேச்சுக் குள் வராது.)

8

அந்தப் பொருளுக்கு எல்லைக் கோடு, வரைக்குட்பட்ட உருவும் ஒன்றும் கிடையாது; அது எந்தத் தோற்றத்தையும் ஆதாரமாகக் கொண்டு உடல் எடுத்ததும் இல்லை. அந்த உடலற்ற கடவுள் வானமண்டலத்தின் நடுவே வசிக்கிறார்.

9

பிரபுவே! நீ ஒருவன்தான் எனக்கு. 'தேவு மற்றொன் றில்லை.' மற்றொருவன் உண்டு என்று சொன்னால் அவன் வேறு குலத்தவனாக இருத்தல் வேண்டும்.

(சொல்கிறவன் உண்மையான அடியார் குலத்தோனாக இருத்தல் ஒண்ணாது; அல்லது சுட்டப்பட்ட மற்றொன்று தெய்வ மாக இருத்தல் ஆகாது.)

10

ச(ற்)குணக் கடவுளுக்குச் சேவை செய். குணமற்ற (நிர்க்குணக்) கடவுளை ஞானத்தின்மூலம் அறிந்துகொள். சற்குண நிர்க்குணத்துக்கு அப்பாலுள்ள அதன்பால்தான் நம் தியானம்.

(குணங் கடந்த அப்பொருளையே நாம் கருதி அமர்கிறோம்.)

## வலியுடைமை (அவன் ஆற்றல்)

### 11

ஆண்டவனால்தான் எல்லாம் நடக்கிறது. மனிதனால் ஒன்றும் இல்லை. அவர் கடுகிலிருந்து மலையை ஆக்குவார். மலையைக் கடுகாகவும் ஆக்குவார்.

### 12

பாயும் வெள்ளத்தை நிலமாக்குவான். மீண்டும் நிலத்தைப் பாயும் வெள்ளமாக்குவான். ஆண்டவன் கை எங்கும் நீண்டிருக்கிறது. அவன் விரும்புகிறபடி எல்லாம் நடக்கிறது.

### 13

ஆண்டவனைப் போல் ஆற்றலுள்ளவன், பெருமையுடையவன், ஆழ்ந்த கம்பீரம் கொண்டவன் ஒருவனும் கிடையாது. கெட்ட குணத்தைவிட்டு நல்ல குணத்தைக் கொண்டால், ஒரு கணத்தில் கரையேற்றி விடுவான்.

### 14

எதையெல்லாம் செய்தாயோ அதையெல்லாம் நீயே செய்தாய். நான் ஒன்றும் செய்யவில்லை. நான்தான் செய்தேன் என்று எங்காவது சொன்னால் அப்பொழுது நீதான் என் உள்ளிருந்தாய்.

### 15

ஈசுவரன் எவனைக் காக்கிறானோ அவனை ஒருவரும் அழிக்க முடியாது. உலகமே எதிரியானாலும் அவன் மயிர் (நுனியைக்) கூட வளைக்கமுடியாது. (எள்ளளவும் தீங்கிழைக்க முடியாது.)

### 16

என் ஆண்டவன் (தனி) வணிகன். மிக எளிதாக வியாபாரம் செய்கிறான். தராசுக் கோல் இல்லாமல், தட்டு இல்லாமல் உலகத்தையே நிறுத்து விடுகிறான். (உலகத்தினர் செய்கைகளின் தரத்தை அறிந்துகொள்கிறான்.)

17

ஏ சுவாமி! உன்னைவிட்டு அகன்றவன் அரைக் காசுக்கு விலை போகமாட்டான். எவன் தலைக்கு நீ தலைவனோ (எவன் தலை உனக்கு வணங்குகிறதோ) அவன் மதிப்பை இலட்சக் கணக்காகி விடுகிறாய். (பக்தன் சிறப்பு அதிகமாகி விடுகிறது.)

## (எல்லா உயிருள்ளும்) பரந்து நிற்கும் தன்மை

18

மலரில் மணம்போல் உன் பிரபு உன் உள்ளே இருக்கிறார். நீயோ கஸ்தூரி மான்போல் மீண்டும் மீண்டும் புல்லில் தேடு கிறாய்.

(கஸ்தூரி உள்ளிருப்பது அறியாமல் மான் வெளியில் நுகர்ந்து திரியும்.)

19

எந்த முதற் பொருளை (வெளியே) உலகத்தில் தேடினாயோ அதுவே (உடலாகிற) பாண்டத்துள்ளே இருக்கிறது. கலக்கத் திரையை இட்டு மறைத்தாய்; அது காணாது நிற்கிறது.

20

புரிந்தவனானால் வீட்டிலேயே இரு; இமைத் திரையைப் போடு (தியானம் செய்). உன் கடவுள் உன் உள்ளேதான் இருக்கிறார். வேறு எங்கும் செல்லாதே.

21

எவ்வளவு (உடல்களோ) மனிதர்களோ அவ்வளவு மதங்கள்; பல (இலக்கணப்) பேச்சுக்கள்; பல தோற்றங்கள். ஆனால் எல்லா உடலுக்குள்ளும் பரவி நிற்கும் இவன் பேச்சுக் குள் (எழுத்துக்குள்) அடங்காதவன்.

22

தலையில் கொடி பின்னிக் கிடக்க (வழி) மறந்து ஏன் திரிகிறாய்? எள்ளுள் எண்ணெய் போல் உன் சுவாமி உன் உள்ளேதான் இருக்கிறான். (கொடி பின்னிய மயிர்க்கற்றை= சடை.)

## 23

எள்ளுள் எண்ணெய் எப்படியோ, சக்கிமுக்கிக் கல்லில் நெருப்பு எப்படியோ, (அப்படி) உன் கடவுள் உன் உள்ளே (கரந்து) நிற்கிறான். எடுக்க முடிந்தால் எடுத்துக்கொள். (வெளியேற்றிப் பயன்கொள்.)

## 24

கண்ணுள் விழி எப்படியோ, அப்படியே உடலுள் (உள்ளான்) ஆண்டவன்; அசடர்கள் அறியார்கள். வெளியே தேடித் திரிகிறார்கள்.

## 25

ஆண்டவன் நெருப்பு உருவில் எல்லா உடலுள்ளும் நிறைந்து உறைகிறான். சித்தத்தில் சக்கிமுக்கிக் கல்லைத் தேய்ப்ப தில்லை. அதனால் அணைந்து அணைந்து விடுகிறது.

### சப்தம் (ஒலி)—சொல்—மந்திரச் சொல்.

## 26

கபீர் (சொல்கிறார்:) சரீரத்தில் ஒலி கேட்கிறது; கம்பி யின்றியே இசைக் கருவி பேசுகிறது. உள்ளும் வெளியும் திளைத்து இருந்தேன். அதனால் மயக்கம் ஒழிந்தது.

(யோக சாதனையில் உள்ளே பலவகைச் சத்தங்கள் கேட்கும்.)

## 27

ஒலிக்கும் ஒலிக்கும் வேற்றுமை உண்டு. சாரமான ஒலிக்கு மனத்தைக் கொடு. எந்த ஒலியினால் சுவாமி கிடைப்பாரோ அந்தச் சப்தத்தைப் பிடித்துக்கொள்.

## 28

ஒரு சொல் இன்பக் குவியலாம். ஒரு சொல் துக்கக் குவிய லாம். ஒரு சப்தம் கட்டை அறுக்கும். ஒரு சப்தம் கழுத்தில் சுருக்கை மாட்டும்.

## 29

'சப்தம்' 'சப்தம்' என்று எல்லோரும் பேசுகிறார்கள். சப்தத்துக்குக் காலுமில்லை, கையுமில்லை. ஒரு சப்தம் மருந்து செய்யும்; ஒரு சப்தம் புண்ணை உண்டாக்கும்.

## 30

சொல் (முறை) அறிந்தவனுக்குச் சப்தம் போன்ற சொத்துக் கிடையாது. வைரம் காசு கொடுத்தால் கிடைத்துவிடும். சப்தத்துக்கு நிறையுமில்லை, விலையுமில்லை.

## 31

நம் மதமே 'மந்திரந்'தான். நம்மையொத்தவர் எடுத்துக் கொள்க. நம்முடைய (மந்திரச்) சொல் கற்பகத் தரு; எதை வேண்டினும் ஈந்து விடும்.

## 32

குளிர்ந்த சொல்லைச் சொல்லுங்கள். தன் முனைப்பைக் கொண்டு வராதீர்கள். உன் அன்பனும் உன் உள்ளே; உன் எதிரியும் உன் உள்ளே (தானிருக்கிறான்).

## 33

கண்ணாடித் துண்டுகளுடன் சேர்த்துக் கோக்கும் முத்து என்று இதை எண்ணிவிடாதீர்கள். இது சொன்முத்து; உடல் எங்கனும் கோத்திருக்கிறது.

## 34

'எந்திரம் மந்திரம் (போடுவது)' எல்லாம் பொய். யாரும் ஏமாறவேண்டாம். சாரமான சப்தத்தை அறியாமல் காகம் அன்னமாக முடியாது. (மனிதன் ஆன்ம விடுதலை பெற முடியாது.)

(சப்தம் பொதுவாக நாம் பேசும் பேச்சுக்களைக் குறிக்கலாம்; எனினும் யோக சாதனையில் எழும் ஒலி, மந்திரச் சொற்கள்; இவற்றையே சிறப்பாக இங்கே குறிக்கிறது.)

## பெயர்

### 35

முதற் பெயர் பாரசக் கல். மனம் அழுக்கடைந்த இரும்பு. (கல்) பட்டதும் (மனம்) பொன்னாயிற்று. தளையும் மருளும் தகர்ந்தன.

[பாரசக் கல் : இரும்பைத் தங்கமாக்கும் ஆற்றல் பெற்ற ஒரு கற்பனைக் கல். 210-ஆம் பாவிலும் வருதல் காண்க.]

### 36

முதற் பெயர் உண்மையான சாரமாம். அன்னமே, அதை அறிந்துகொள். உண்மைப் பெயரை அறிந்தவன் குலமே அழியா வாழ்வெய்துகிறது.

(அன்னம் = மருள் நீங்கி அருள் பெற்ற உயிர்)

### 37

முதல் பெயர் உண்மை வேர்; மற்ற மந்திரங்கள் அதன் கிளைகளே. கபீர் சொல்கிறார் : உண்மைப் பெயரை அறியாது உலகம் முழுகி அழிந்தது.

### 38

பெயராம் மாணிக்கம் பெற்றாய். மூடி மறைத்து வைத்துக் கொள். திறந்து விடாதே. அதற்கு மதிப்பும் இல்லை, மதிப்புத் தெரிந்தவனும் இல்லை, வாங்குவோனும் கிடையாது; விலையும் கிடையாது.

### 39

நாமும் எல்லா இரசாயனமும் செய்தோம். பெயரைப் போன்ற ஒன்று இல்லவே இல்லை. உடலில் சற்றே பரவிற்று, உடலெல்லாம் பொன்னாயிற்று.

### 40

பெயரை இதயத்தில் ஏற்றவுடனே பாவம் அவ்வளவும் அழிந்தது; பழைய புற்குவியலில் நெருப்பின் பொறி பட்டாற் போல்.

## 41

ஞான விளக்கேற்றி உள் வீட்டில் ஒளி பொருத்து. உண்மைப் பெயரை எண்ணிச் சகஜ சமாதியில் அமர்.

(சகஜ சமாதி : இது கபீர் ஆளும் சிறப்புச் சொல். வலிந்து பெறாமல் தானாகவே அடையக் கற்ற ஒரு சமாதி நிலை.)

## 42

கனவில் முனகும்போது மறந்தும் பெயர் சொல்பவனுடைய காலுக்கு என் தோல் செருப்பு.

## 43

மாயையில் களிக்கும் அவ்வாறு பெயரில் களிகொள்ளும் மனம் விண்மீன் (நட்சத்திர) மண்டலம் தாண்டி அமரபுரி அடையும்.

## 44

பெயர் நெருப்புப் போன்றது. உடலெங்கணும் நிரம்பி இருக்கிறது. சித்தமாகிற சக்கிமுக்கிக் கல்லை உராயவில்லை. புகையாகிப் போய்க்கொண் டிருக்கிறது.

## 45

பெயரில்லாமல் 'ஐம்பத்தாறு கோடி களியாட்ட'மும் வீண். இந்திராசனத்தில் அமர்ந்தென்ன, வைகுண்டத்தில் வசித்தென்ன?

[பெயர் : ஈசன் திருநாமம்.]

## 46

கொள்ள முடிந்தால் கொள்ளை கொள். பெயர் (தரும் நலம்) கொள்ளை போகிறது. பின்னால் உயிர் போகும் போது எண்ணி வருந்துவாய்.

## 47

'சூனிய'த்தைச் சேர்ந்தவன் சாவான்; 'அஜபா நிலை' எய்தியவனும் இறப்பான். 'அநாஹத நாதம்' அடைந்தவனும் அழிவான். ஆனால், கபீர் அறிந்து சொல்கிறார்: பெயரின் அன்பன் மடியமாட்டான்.

[சூனியம், அநாஹதம் : புத்தர்கள் விடுதலை நிலையை சூனியமாகக் கொண்டார்கள். நாதச் சித்தர்கள் அவ் வெற்றிடத்தை ஈசன் நிலையெனக் கொண்டனர். அதையே கபீர் ஆயிர இதழ்த் தாமரைச் சக்கரத்தின் வெற்றிடமாகக் கொண்டார்.

ஈசநிலை எய்தும் முயற்சியில் அச்சக்கரத்தைக் குண்டலினி அடைந்த பிறகு 'அநாஹத நாதம்' என்ற ஒலி கேட்கும். அதை யும் மீறிய பிறகு சோதி தோன்ற அதில் உயிர் ஒன்ற வேண்டும். கபீர் அந்த நிலையை அடைந்தவன்தான் அமரனாவான் என்கிறார்.

அநாஹத நாதத்தைக் கவியரசர் தாகூர் அவர்கள் unstruck music (அடித்தெழாத கீதம்) என்று மொழி பெயர்த்திருக் கிறார்கள்.

அஜபா நிலை : மந்திரம் சொல்லிச் சொல்லிச் (ஜபம் செய்து) சித்தி பெறுவதும் சாதனை முறைகளுள் ஒன்று. நம் முயற்சியில்லாமல் ஜபம் தானாகவே நிகழும் நிலை கிடைப்பதுண்டு. அதை அஜபா நிலை என்கிறார் கபீர்.

மற்ற நிலைகள் அழிய எல்லை அமர நிலை எய்தும் என்றும் பொருள் கொள்ளலாம்.

மற்ற முறைகளில் பயிற்சி ஏற்பவன் அழியாத அந்நிலையை அடையாமல் இடைப்படிகளிலேயே ஏமாந்து நின்று அழிந்து விடுகிறான். பெயரை நம்பிச் சாதனை செய்பவன் உயர்ந்த அமர நிலையை அடைந்து விடுகிறான்.]

## பரிச்சயம் (அறிமுகம்)

### 48

அன்பனின் செம்மை—எங்கு பார்த்தாலும் அவன் சிவப்புத் தான் (ஒளி); சிவப்பைக் காணச் சென்றேன். நானும் சிவப்பாய் விட்டேன்.

### 49

எவரை அடைய மிகவும் சுற்றினேனோ, நாடு பிற நாடெல்லாம் அலைந்தேனோ அவரை அடைந்தவுடன் பிற நாடும் (என்) முற்றமாக (வீடாக) ஆகிவிட்டது.

## 50

தன்னுள்ளே திரும்பித் தங்கிய உடனே எல்லையற்ற ஒளி தோன்றிற்று. பிறகு ஆண்டவனும் அடிமையும் சேர்ந்து எப்பொழுதும் வசந்த விளையாட்டுத்தான்—இடையறாத இன்பத்தில் திளைக்கின்றனர்.

(சமாதி நிலையில் ஆத்மாநந்தம் கிட்டுகிறது.)

## 51

யோகியானேன் ; தோற்றம் கிடைத்தது. இழுப்பு, பிடிப்பு (ஆவல், பற்று) ஆகிய தொல்லையெல்லாம் தொலைந்தன. தன்னுள் திரும்பி ஈடுபட்டால் 'பிரம'த்துக்குச் சமமாக ஆகிவிடுகிறேன்.

## 52

உப்பு கரைந்து விட்டது (உயிர் ஒளிமயமாகிவிட்டது); நீராகிவிட்டது. (பிரம்ம மயமாகி விட்டது) இனி மூட்டையில் கட்ட முடியாது. (=சரீரத்துக்குக் கட்டுப்படாது அல்லது இனிப் பிறவி ஒட்டம் கொள்ளாது) தியானமும் ஒலியும் ஒன்றிவிட்டன. சமாதிநிலை கிடைத்தது. இனிக் காலனும் வாயைப் பொத்திக் கொண்டான்.

## 53

சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியாயிற்று. இனி ஒன்றும் சொல்ல இயலாது. ஒன்று போய்விட்டது. மற்றொன்று மட்டுமே இருக்கிறது. கடல் அலையை அடக்கிக்கொண்டு விட்டது. (ஜீவன் பிரம்மத்துக்குள் ஐக்கியமாகி விட்டது.)

## 54

'உன் முனி' நிலையில் மனத்தைப் பொருத்தினேன். ஆகாயத்தைச் சென்று அடைந்தது. அங்கே பார்க்க இயலாத குற்றமற்ற அரசன் (அலக், நிரஞ்சன், ஈசுவரன், பிரம்மம்) இருந்தான். சந்திரன் இல்லாமலேயே நிலவு பொழிந்தது.

உன் முனி=யோகசாதனையில் குண்டலினி சக்தி எழும்பி மேலே செல்ல உயிர் இன்பக் கடலில் கலக்கும் நிலை.

## 55

'எனது' என்ற தப்பெண்ணம் (மமதை) போய்விட்டது. விடுபட்டவனாக ஆனேன். அடையமுடியாத இடத்தை

(பிரம்மலோகத்தை) அடைந்தேன். இனி எனக்கு வேறு ஒருவர் கிடையாது. உன் ஒரே நம்பிக்கைதான் உண்டு.

## 56

நிரதியில் சுரதி அடங்கிற்று. அஜபாவில் ஜபம் அடங்கிற்று. அவ்யக்தத்தில் வியக்தம் அடங்கிற்று. தன்னுள்ளே 'தான்' அடங்கிவிட்டது.

[சுரதி : சாதனையில் பிரும்மத்தை நினைவில் இருத்திப் பெறும் பரவச நிலை:

நிரதி : அடுத்துத் தன்னையும் மறந்து அதில் ஈடுபட்டு ஒன்றாகிவிடும் நிலை.

ஜபா : ஜபம் செய்யும் நிலை.

அஜபா : அதன் எல்லையாக ஜபத்தையும் மறந்து ஒடுங்கும் நிலை, படிப்படியாகத் தன்னுள்ளே தான் அடங்கும் சாதனை; யோகம், ஜபம், பக்தி ஆகிய எல்லாத் துறைகளிலும் எல்லைச் களமாம்.]

## 57

பரப்பிரம்மத்தின் ஒளியை எப்படி அநுமானிப்பது? அது சொல்லத் தகும் சோபையன்று. பார்த்தால் தான் பிரமாணம்.

## 58

உடலில் அன்பு ஒளி கொண்டது. உள்ளேயும் ஒளி ஏற்பட்டது. இன்பம் பெற்று ஜீவாத்மா தியானத்தில் ஈடுபட்டது, வாக்கில் மணம் ஏற்பட்டுவிட்டது. (மணம்=ஒளி, தெய்வத்தன்மை).

## 59

உலகில் அநேக உருவங்களைப் பார்க்க வந்தேன். கபீர் சொல்கிறார்: சாது ஆகியவுடன் ஒப்புவமையற்ற அந்தச் சிறந்த உருவம் கண்ணுக்குப் பட்டுவிட்டது.

## 60

அடைந்த அதைப் பிடித்தேன். (அதைப் பாடிப் பாடி) நாவும் ருசி பெறுகிறது. மிகச் சிறந்த இரத்தினத்தை அடைந்தேன். உலகைத் தேடினது எல்லாம் வீண்.

## 61

கபீர் ஓர் அங்கத்தைப் பார்த்தார். அதன் சிறப்பைச் சொல்லி மாளாது. ஒளிப் பிழம்பைத் தொட்டதிலிருந்து ஆண்டவன் கண்களில் நிறைந்து நிற்கிறான்.

## 62

வானம் இடிக்கிறது. கனத்த பெருமேகங்கள் அமுதம் பொழிகின்றன. நாலா பக்கமும் மின் ஒளி வெட்டுகிறது. கபீர்தாசர் நனைகிறார்.

(ஆன்ம அனுபவத்தின் இனிமை உருவகப் படுத்தப்பட்டிருக்கிறது.)

## 63

ஞானத்தின் விளக்கேற்றி அமரனான தேவனைப் பார்த்தேன். நான்கு வேதங்களும், கபீர் சென்று ஊழியம் செய்கிற இடத்தை அடையமுடியாது.

(அந்த நிலை வேதங்களையும் மீறிய நிலையாம்.)

## 64

குருவை உள்ளத்தில் பார்த்துவிட்டேன். இனிப் பாட ஒன்றுமில்லை. கபீர் சொல்கிறார் : நாம் பாடும்போது குருவை அறிய முடியவில்லை. (குருவை அடைந்தவுடன் நம் பாட்டு, பேச்சு எல்லாம் அடங்கிவிடுகின்றன.)

## 65

மானசரோவரம் நன்றாய் இருக்கிறது. சிரித்து விளையாடவும் முத்துக்களை எடுத்து உண்ணவும் இருக்கும் பொழுது அன்னம் அதன் எல்லைக்குப் பறந்து போதல் வேண்டாம்.

(ஆத்மாவின் ஆனந்த நிலை, அன்னத்துக்கு மானசரோவரம் போல.)

## 66

சூனிய மண்டலத்தில் (வீடு கட்டி) அமர்ந்தேன். இனிமையான சப்தம் ஒலிக்கிறது. மயிர்க்காம்பெல்லாம் விளக்காகிறது. எளியர்க்கு அருள்பவன் வெளியானான்.

## 67

ஆத்மாவின் தன்னொளி ஆகாயத்துக்குப் (பிரம்ம லோகத்துக்கு) பறந்தது. (அவன்) கால்களை அடைந்து தங்கிற்று. ஆண்டவன் கிடைத்தான். ஆனந்தம் அடைந்தேன். இதயம் தாங்காமல் இன்பம் நிரம்புகிறது.

## 68

நீர்தான் பனிக்கட்டியாயிற்று. பனிக்கட்டியும் கரைந்து விட்டது. கபீர் முன் இருந்தபடி ஆகிவிட்டார். இனிச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை.

(ஆன்மா ஜீவனாகி மறுபடியும் பரமாத்மாவுடன் ஐக்கியமாகி விட்டது.)

## 69

சூனியமே (வெளி-பிரம்மம்) சரோவரம்; மனம் மீன்; எல்லாத் தேவர்களும் (இந்திரியங்களும்) கரையில் இருக்கின்றனர். சுகவிலாசமே அமுதமயமான கடலாம். ரகசியத்தை மிகச் சிலரே அறிவர்.

## 70

நான் அந்த ஒருவருடன் இணைந்தேன். அந்த ஒருவர் எல்லோர் உள்ளும் இருப்பவராக ஆனார்; எல்லோரும் என்னவர். நான் எல்லோருக்கும் உரியவன். அங்கே வேற்றாள் கிடையாது.

## 71

சற்குருவின் உதவியால் முக்குணமும் இந்திரியங்களும் ஒழிந்தன. சரீரத்துக்குள் நாமம் (பிரம்மம்) வெளியாகி விட்டது. இனி எதற்காகக் கத்திக் கத்தி உயிரை விட வேண்டும்?

## 72

கபீர் சொல்கிறார்: எவ்வளவோ விதம் உருமாற்றம் கொண்டேன், மயக்கம் தொலையவில்லை. ஆண்டவன் அறிமுகம் இல்லாமல் (ஆகாதவரை) உள்ளே (மயக்கத்தின்) குறிகள் இருக்கவே செய்யும்.

## அனுபவம்

### 73

ஆத்மானுபவத்தின் ஞானத்தைப் பற்றி யாராவது செய்தி கேட்டால், ஊமை வெல்லம் சாப்பிட்டு எந்த வாயால் அந்த ருசியைச் சொல்வான்? (அப்படித்தான்—பதில் சொல்ல இயலாது.)

### 74

ஊமையின் செய்கையை ஊமையே அறிவான் போல, ஞானியின் இன்ப (அனுபவ)த்தை ஞானியானால்தான் அறிய முடியும்.

### 75

காகிதத்தில் எழுதப்படுவது உலகில் ஈடுபட்டு உழல்கிற ஜீவனுக்கு எழுதிவைத்த வெறும் காகித ஞானந்தான். ஆத்ம திருஷ்டியை எங்கே எழுதுவது? எங்கே பார்த்தாலும் அங்கே 'அன்பன்' இருக்கிறான்.

### 76

எழுத்துக்குள் அடங்கும் பொருளும் அல்ல; அது பார்க்கும் பொருளும் அல்ல. மணப் பெண்ணும் ஆணும் சேர்ந்துவிட்டனர். மற்ற மண விருந்தினர் ஒளியிழந்தனர்.

(மனம் பிரம்மத்தில் லயித்து விட்டால் மற்றப் பொறி இன்பங்களுக்கு மதிப்பு ஏது?)

### 77

நிரம்பியவன் வெற்றிடம் என்று அறிகிறான். வெற்று என்று இருந்தவன் நிரம்பிவிட்டதாக உணருகிறான். (இது எல்லாம் அரைகுறை ஞானம்). அனுபவம் பெற்றவன் வெற்றாகவும் இல்லை, நிரம்பியும் இல்லை என்பான்.

## சாரம் கிரஹித்தல்
## (தத்துவத்தைப் பிடித்துக் கொள்ளல்)

### 78

சாது முறத்தின் தன்மை கொண்டவனாக இருத்தல் வேண்டும். சாரமானவற்றைப் பிடித்துக்கொண்டு உமியைப் பறக்க விட்டுவிட வேண்டும்.

## 79

அவகுணத்தையே கொள்ளாதே. குணத்தைப் பொறுக்கி எடுத்துக்கொள். ஒவ்வோர் உடலிலுமுள்ள மணத்தை வண்டு போல் நுகர்ந்தறிந்து பரமாத்மாவை உணர்ந்துகொள்.

## 80

அன்னம் நீரை ஒதுக்கிப் பாலை வெளியேற்றி எடுத்துக் கொள்கிறது. அவ்விதமே சாரத்தை எடுத்துக்கொள்ளக்கூடிய மகனே அக்கரை ஏற முடியும்.

## 81

சத்திய நாமம் பாலுருவமானது. (உலக) வியவகாரங்கள் நீர் போன்றன. தத்துவத்தை எடுக்கத் தெரிந்தவன் அன்ன உருவமான ஒரு சாதுவே.

### சமநோக்கு

## 82

சற்குரு எனக்கு நிலையான (அலையாத) ஞானம் தந்து சம நோக்குடையவனாக ஆக்கினார். எங்கு நோக்கினாலும் ஒன்றே தான் காணப்படுகிறது. வேறான மற்றொன்றைக் காணவே யில்லை.

## 83

சற்குரு சமநோக்குத் தந்தார். விகாரப்பாடு எரிந்து நீங்கிற்று. எங்கே நோக்கினும் ஒரே ஆண்டவன் தரிசனம்தான் (கிடைக்கிறது.)

## 84

குளுமைகொண்ட சமநோக்குப் பெற்று எல்லா உயிர் களுடைய ஆன்மாவையும் ஒன்றாகப் பார்ப்பவனுக்கே சமநோக்கு வந்ததாக அறி.

### பக்தி

## 85

உலகுடன் உறவு உள்ளவரை பக்தி ஏற்படாது. உறவை உடைத்து ஹரியைப் பஜனை செய்கிறவனே (ஆண்டவன் பெயர் பாடுபவனே) பக்தன் எனப்படுவான்.

## 86

உண்மைப் பக்திக்கும் பொய்த் தோற்றத்துக்கும், ஆகாயத் துக்கும் பூமிக்கும் உள்ளது போன்ற பெரிய வேற்றுமை உண்டு. பக்தன் குருவின் காலடிகளிலும் வஞ்சமகன் உலகத்திலும் நம்பிக்கை வைத்திருப்பான்.

## 87

பிறரைப் பார்த்து (போட்டிக்கு)ச் செய்யும் பக்திக்கு என்றும் உண்மை நிறம் ஏறாது. ஆபத்து வந்தவுடன் சட்டை பாம்பை விடுவதுபோலப் பக்தி அவனை விட்டுப் போய்விடும்.

(இடருற்ற போதும் பக்தி செய்ய அவனால் ஆகாது.)

## 88

ஞானம் நிறைவு பெறுவதில்லை. இதயத்தில் ஒட்டுவதில்லை. (அதனால்) வெளிப் பார்வைக்குச் செய்யும் பக்தி நிறம் தங்கப் பெறுவதில்லை. (சாயம் வெளுத்து விடுகிறது.)

## 89

வயலைக் களை கெடுக்கிறது. கழகத்தை வன்னெஞ்சன் கெடுக்கிறான். குங்குமப் பூவில் தூசியைப் போல் பேராசை பக்தியைக் கெடுத்து விடுகிறது.

## 90

சிற்றின்பப் பிரியன், கோபக்காரன், பேராசைக்காரன் இவர் களால் பக்தி செய்ய முடியாது. சாதி, வர்ணம், குலம் இவற்றை ஒழித்த சூரனாலேயே பக்தி செய்ய முடியும்.

## 91

மீனுக்கு எப்படி நீர் விருப்பமோ, பற்றுளத்தானுக்கு (கஞ்சனுக்கு)ப் பணம் எப்படி இன்பமோ, தாய்க்குப் பையன் எப்படி ஆசைப் பொருளோ அப்படியே பக்தனுக்குப் பெயர் அருமை.

## 92

பக்தி, பயன் விரும்பிச் செய்யப்படும்வரை சேவையெல் லாம் வீணே. கபீர் சொல்கிறார்: 'வேண்டுதல் இல்லாத உண்மைத் தேவர் (இந்தப் பக்தியினால்) எப்படிக் கிடைப்பார்?'

## 93

மைதானத்தில் ஆடும் பந்தே பக்தியாம். விரும்பினவர் எடுத்துச் செல்லலாம். கபீர் சொல்கிறார்: 'ஒரு வேறுபாடும் கிடையாது. அரசன் என்ன, ஆண்டி என்ன? பந்தை ஆடவந்த யாரும் உரிமையுடன் கொள்ளலாம்; அதேபோல் பக்தி வழி தெரிந்த யாரும் செய்யலாம்'.

## 94

ஒரு பொழுதும் விடுபடாது இருந்தால் அப்பொழுது அன்பு ஏற்பட்டதாக அறி. உயிருடன் இருக்கும் வரை அது இருக்கும். அழிந்தால் அங்கேயே அடங்கும்.

## 95

நல்ல பிடிப்பாகப் பிடித்தது. நாக்கும் அலகும் எரிந்தாலும் விடவில்லை. சகோரம் (இவ்விதம்) நெருப்பைத் தின்கிறதே! அதில் என்ன இனிமை! (சகோரம் ஒரு புள்.)

## 96

தூங்கினால் கனவில் கிடைப்பான். விழித்தால் மனத்தில் நிற்பான். கண்கள் சிவந்து (அன்பு கொண்டு) இருக்கின்றன. நினைவு பசுமையாக இருக்கிறது. ஆண்டவன் ஒரு பொழுதும் விட்டுப் பிரிகிறதில்லை.

## 97

உன்னையே சொல்லி நீயாகவே ஆனேன். உன்னுள் சேர்ந்த மனது வேறு எங்கும் செல்லாது.

## 98

பணம் லட்சம் கோடி வரைதான். அரசு உதயம் முதல் மறைவு வரைதான். பக்தியின் பெருமையோ அளக்க முடியாதது. அது எல்லாம் எதற்கு ஆகும்?

## 99

குருடராகி எல்லோரும் அலைகிறார்கள். இதை ஒருவரும் எண்ணுவதில்லை. ஹரிபக்தி அறியாமல் உலகம் முழுகி அழிகிறது.

## 100

மற்ற எல்லா வேலையும் (கிரியைகள், அநுட்டானங்கள், வேட்டல் எல்லாமே) அலுவல்கள் தாம் (அலுப்புத் தரக் கூடியவை.) பக்தி ஒன்று மட்டும் அப்படியல்ல, அதாவது அலுப்புத் தரக்கூடிய அலுவலாகாது. கபீர் கூவிச் சொல்கிறார்: 'தருமத்தை விட்டுப் பக்தியைச் செய்.'

(மற்ற எல்லா அறச் செயல்களையும் விட்டுவிட்டு ஆண்டவனை வழிபடு.)

இங்கே 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ' என்ற கண்ணன் வாக்கு அப்படியே மொழிபெயர்க்கப் பட்டிருக்கிற நலம் காண்டற்குரியது.

## பிரேமை (அன்பு)

## 101

இது அன்பின் இல்லம். மாமா (சின்னம்மா) வீடு அல்ல. தலையை இறக்கிப் பூமியில் வை. அப்பொழுதுதான் இந்த வீட்டில் இருக்க முடியும்.

## 102

தலையை இறக்கிப் பூமியில் வை. அதன் மேல் காலையும் வை. இப்படி முடியுமானால்—கபீர்தாசர் சொல்கிறார்—"வா."

## 103

அன்பு தோட்டத்தில் முளைக்காது. சந்தையில் விற்காது. அரசனோ, குடியோ, வேண்டுபவன் தலையைக் கொடுத்துவிட்டு எடுத்துச் செல்லட்டும்.

## 104

தலையைத் தர முடியாத கருமி 'பிரேமை' என்று எதற்காகப் பேசுகிறான்? அன்பின் கோப்பையைக் குடிப்பவன் தலையைத் தட்சிணையாக (விலையாக—அன்பளிப்பாக)க் கொடுக்க வேண்டுமே.

## 105

ஒரு கணம் ஏறி ஒரு கணம் இறங்குமே அது அன்பேயல்ல. உடலில் குறைவாமல் உறையுமே அதல்லவா அன்பு எனப்படும்.

## 106

நான் இருந்தேன்; அப்பொழுது குரு இல்லை. இப்பொழுது குரு இருக்கிறார்; நான் இல்லை. அன்பின் தெரு மிகக் குறுகியது. அதில் இருவர் சேர்ந்து இருக்க முடியாது (இரண்டறக் கலப்பது தான் அன்பின் அடையாளம்).

## 107

எந்த உடலில் அன்பு இல்லையோ அதை மயானம் என்று அறி. கொல்லன் துருத்திபோல அது மூச்சு விடும்; உயிர் இருக்காது.

## 108

அன்புச் சூறாவளி எழுந்தது. தூசி ஆகாயத்தில் பறந்தது. தூசி தூசியுடன் சேர்ந்தது. அவருக்குரியது அவரை அடைந்தது.

(தூசி ஆத்மா, பரமாத்மா உயிர் கடவுட்குரியது. அவரை அடைந்துவிட்டது.)

## 109

நூறு யோசனைக்கப்பால் இருந்தாலும் நண்பன் இதயத்தின் நடுவில்தான் (இருக்கிறான்). பொய்யன்பன் வீட்டு முற்றத்தில் இருந்தாலும் ஏழு கடல்களுக்கு அப்பால் தான். (மனத்தால். நெருக்கமே தவிர, தொலைவால் அல்ல.)

## 110

இந்த உண்மையும் அந்தத் தத்துவமும் ஒன்றே. ஒருயிர் ஈருடல். என் இதயத்தின் பேச்சை உன் இதயத்தால் அறி. (தத், த்வம் அஸி.)

## 111

நான் உன்னை நினைக்கிறேன். நீ என்னைப் பார்க்கிற தில்லை. நினைப்பு மனத்தின் போக்கு—செயல். அந்த மனம்தான் உன்னிடம் இருக்கிறதே!

## 112

அன்பு ஏற்பட்டது. குழைந்து இழைந்து மனத்தில் அமர்ந்து விட்டது. ஒவ்வொரு மயிர்க் காம்பும் அன்பனைக் கூவுகிறது. இனி வாய்க்குத் தேவையில்லை. (வாயால் சொல்ல வேண்டிய தில்லை.)

## 113

நனவில் யாரோ அவனேதான் கனவிலும் (இருக்கிறான்). உடலுக்குள் மூச்சுப்போல் யாருக்கு யார் பிடிக்கிறதோ அவன் அவனிடமே (இருக்கிறான்.)

## 114

ஒன்று அன்பின் ரசம் குடிக்க விரும்பு, அல்லது தன்மானம் காட்ட விரும்பு. (இரண்டும் சேராது) ஓர் உறையில் இரண்டு வாள்கள்—காதால் கேட்டது இல்லை, கண்ணால் கண்டது இல்லை.

(ஈசுவரனிடம் அன்பு செய்யத் தன்னைச் செருக்கற்ற எளிய வனாக்கிக் கொளல் வேண்டும்.)

## 115

கபீர் அன்பின் கோப்பையை உள்ளே சேர்த்துவிட்டார் (குடித்து விட்டார்). மயிர்க்காம்பில் எல்லாம் அது பரவிவிட்டது. பிறகு வேறு அமிலம் என்ன சாப்பிட வேண்டும்?

(அமிலம், கள் போன்ற போதைப் பொருள்)

## 116

கபீர் சொல்கிறார்: நான் குரு ரசத்தைக் (அன்பாகிய அமுதத்தை) குடித்திருக்கிறேன். ஆசையின் போதை மிச்சமே யில்லை. குயவனின் வெந்த பானை மீண்டும் சக்கரத்தில் ஏறாது.

## 117

நானும் எல்லா ரசாயனமும் செய்தேன். அன்பு ஒத்தது ஒன்று மில்லை. ஒரு துளி பரவினால் போதும், உடல் எல்லாம் தங்கமாகி விடுகிறது.

## 118

பெயரில் அன்பு கொண்டு பித்தாகி இருப்பவன் அன்பை மூச்சுமுட்டக் குடிப்பான்; கடவுள் காட்சிக்குப் பித்துப் பிடித்துத் திரிவான். அவன் முக்தி வேண்டும் என்று தேட மாட்டான்.

## 119

உலகில் சேர்தல் அருமை. சேர்ந்து ஒருவரும் பிரியாதீர்கள். தலையில் மணி கொண்ட கனவான் (சீர்மேவு சான்றோன்) தான் பிரிந்தாலும் மீண்டும் சேர்வான்.

## 120

அன்புப் பிணைப்பில் சேர்தலே சேர்க்கையாம். மற்றச் சேர்க்கை எல்லாமே அப்படி அல்ல. மனசுடன் மனசு சேர வில்லை! உடல் மட்டும் சேர்ந்தால் என்ன பயன்?

## 121

கண்களை அறையாக்கி, கண்மணியாகிற கட்டில் போட்டு. இமையாகிற திரையை நாட்டி, அன்பனைக் கூப்பிட்டு இன்பம் கொண்டேன்.

## 122

சாவுக்கு அஞ்சும் வரை அன்பனாக மாட்டான். அன்பின் வீடு வெகு தொலைவில் இருக்கிறது. அதை அறிந்து கொள்.

## 123

ஹரியிடம் நீ அன்பு செலுத்த வேண்டாம். ஹரிஜனங்களிடம் (ஹரி-பக்தர்கள், பாகவதர்கள், அடியார்கள்) அன்பு செலுத்து. பகவான் சொத்தையும் நிலத்தையும் தந்து ஏமாற்றிவிடுவார். பாகவதர்கள் பகவானையே தருவார்கள்.

## 124

உடல் தனித்திருக்கலாம்; இருப்பும் தொலைவில் இருக்க லாம். அதனால் என்ன ஆகிவிட்டது? கண்களுக்குத்தானே வேற்றுமை, உயிர் உன்னிடம்தானே!

(உள்ளத்தில் அன்பிருந்தால் தொலைவு பிரிவு எல்லாம் என்ன செய்யும்?)

## 125

அல்லி நீரில் வசிக்கிறது. சந்திரன் வானில் வாழ்கிறான். (எனினும்) யாருக்கு யார் பிடித்தவரோ அவர் அவரிடத்திலே தான் இருக்கிறார்.

## 126

ஓலை எழுதலாம் அன்பனுக்கு, அவன் தொலைவில் இருந்தால். உடலில், மனத்தில், கண்களில் (நிலவுகிறானே) அவனுக்கு என்ன இருக்கிறது சேதி?

## 127

நெருப்பின் சூடு பொறுப்பது எளிது. வாளின் கூர்மையும் எளிதே. அன்பை (மட்டும்) ஒரே நிலையில் காப்பாற்றுவது மிகவும் கடினமான செய்கை.

## 128

நேயம் (நட்பு, அன்பு) நினைவினாலேலா, மற்ற எதனாலுமோ ஆகிவிடாது; அது நடத்தித் தலைக் கட்டினால் தான் ஆகும். உடலைத் தா; மனத்தை அளி; தலையையும் கொடு.

அன்பைப் போகவிடாதே (நட்பு, உடல் பொருள் ஆவியைக் கொடுத்தும் காப்பாற்றப்படவேண்டிய பொருள்.)

## 129

கண்ணாடி, ஈயம் போன்ற வலுவற்ற மனிதர்கள் அன்பை வளர்க்க முடியாது. கபீர் சொல்கிறார்: வைரமும் தங்கமும் தான் சாணையைத் (தாக்குதலைத்) தாங்கமுடியும்.

## 130

சாணையில் ஏற்றித் தாக்குப் பிடிக்கிறவனுக்குச் சப்தம் (மந்திரம்) சொல்லிக்கொடு. கபீர் தெளிவுறுத்திச் சொல்கிறார்: அவன்தான் நம்முடைய குலத்தவனாவான்.

# ஸ்மரணம் (நினைவு)-சிந்தனை

## 131

துக்கம் வந்தபோது எல்லோரும் (அவனை—கடவுளை) நினைப்பார்கள். சுகத்தில் ஒருவரும் எண்ண மாட்டார்கள். சுகத்திலும் எண்ணி விட்டால் துக்கம் எப்படி ஏற்படும்?

## 132

சுகமாய் இருந்தபோது எண்ணவில்லை. துக்கம் வந்தபோது (குறைவை) நினைக்கிறான். அப்படிப்பட்ட அடிமையின் பிராதை யார் கேட்பார்கள்?

## 133

(கடவுள்) நினைவு, காமுகன் சிற்றின்பத்தை எப்படி நினைத்துக் கொண்டே யிருக்கிறானோ அப்படி இருக்கவேண்டும். பகல் இரவு எட்டு யாமங்களிலும் ஓர் இமைப் பொழுதுகூட் மறக்கக் கூடாது.

## 134

மான் நாதத்துக்கு ஈடுபடுவதுபோல் அவன் நினைவுக்கு மனத்தைத் தந்துவிடு. கபீர் சொல்கிறார்: 'உயிரையே அதனுடன் தா. மறக்காதே.'

## 135

கடவுள் நினைவில் மனத்தை ஈடுபடுத்து. வாயைத் திறக்காதே.வெளியே திரையிட்டு உள்ளே திரையைத் திறந்துவிடு.

## 136

(ஜப)மாலை சுற்றிச் சுற்றி ஊழழிந்தது. மனத்தின் சுற்றல் மாறவில்லை. கையில் உள்ள மணியை எறி. மனத்தில் உள்ள மணிகளை நகர்த்து.

(மனத்தைப் பதிய வைத்துப் பெயரை நினை.)

## 137

மரத்தால் செய்த மணி மாலை உருட்டுவது கடினம். வெளி மூச்சு உள்மூச்சு மாலையோ (எளிது.) முடிச்சும் கிடையாது, இணைப்பும் கிடையாது, தங்கு தடையின்றி நகர்த்த முடியும்.

## 138

மனத்தில் உருட்டுவதுதான் உண்மை மாலை. மற்றது ஏமாற்றம். (வெளி) மாலையை உருட்டி மட்டும் ஹரி கிடைத்து விடுவார் என்றால் கிணற்றுருளையின் கழுத்தில் பார். (அதற்குக் கிடைத்திருக்குமே! எவ்வளவு பெரிய மாலை சுற்றிக் கொண்டிருக்கிறது!)

## 139

உடலுக்குள்ளே ஒவ்வொரு கணமும் தன்னோட்டமாகவே தொனி ஏற்பட்டுக்கொண் டிருக்கும். (தியான நிலையில் அமர்ந்து விட்டால்) ஆத்மாவுக்கும் அந்தத் தொனிக்கும் இணைப்பு ஏற்பட்ட பிறகு வாய்க்கு என்ன தேவை?

[52-ஆவது பாவிலும் இந்தக் கருத்து சொல்லப்பட்டிருத்தல் காண்க.]

## 140

சபமாலையோ கையில் சுற்றுகிறது. நாக்கு வாய்க்குள் சுற்றுகிறது. மனமோ பத்துத் திக்கிலும் சுற்றிக்கொண்டிருக் கிறது. இது சிந்தனை அல்ல.

## 141

உடல் நிலைக்க, மனம் நிலைக்க, சொல் (ஜபம்) நிலைக்க தியானமும் ஈடுபாடும் நிலைக்க வேண்டும். இப்படி ஓர் இமைப் பொழுது ஒருவருக்கு ஒரு கல்பத்தில் கூடக் கிடைக்காது.

## 142

(ஒருவனுக்கு) 'ஜபம்', 'அஜபம்,' 'அநாஹதம்' எல்லாம் மடிந்து ஆன்ம சைதன்யம் (சீவ உயிர்ப்பு) சப்தத்தில் ஒடுங்கி விட்டால் அவனை ஊழ்கூட உண்ண முடியாது.

(தியானத்தில் படிப்படியாக ஜபத்துடன் ஆரம்பித்து ஜபமும் ஒடுங்கும் நிலை தாண்டி, இயற்கையாக உள்ளே ஏற்படும் (அநாஹத) ஒலியைக் கேட்கும் நிலை வரும். அதற்குப் பிறகு ஆத்மா அந்த ஒலியில் ஒடுங்க சாதகன் ஒன்றுமே இல்லாத எல்லைக் களத்தில் சேர்வான்.)

## 143

கபீர் சொல்கிறார்: பசி ஒரு நாய். கடவுள் நினைவில் ஈடு பட்டிருக்கும்போது இடையூறு செய்கிறது. அதற்கு ஒரு துண்டை எறிந்துவிட்டுக் கவலையின்றித் தியானம் செய்.

(பசியுடன் 'பஜனை' செய்தல் முடியாது.)

## 1 4

நீ நீ என்று சொல்லியே நீயாகி விட்டேன். என்னில் நான் என்பதே இல்லை. உன் பெயருக்கு நான் அழிகிறேன் (அடிமை) எங்கே பார்த்தாலும் நீதான்.

### நம்பிக்கை

## 145

நான் ஏன் கவலைப்படுகிறேன்? என் கவலையால் என்ன ஆகும்? என் கவலையை ஹரி படுவார். எனக்கு ஒரு கவலையும் இல்லை.

## 146

சாது மூட்டை கட்டமாட்டான். வயிற்றுக்கு வேண்டிய அளவுதான் எடுத்துக்கொள்வான். (ஏன்) முன்னும் பின்னும் ஹரி நின்றுகொண் டிருக்கிறார். கேட்டபொழுது அவர் தருவார்.

## 147

இருள் பிரிந்தது; காலை ஆயிற்று. உயிர்கள் விழிக்கிற நேரம். அலகு கொண்ட (அளவு) சூர்ணத்தை (உணவை) அவர் எல்லோருக்கும் (ஒருவர் விடாமல்) தருகிறார்.

## 148

எல்லாச் செயலையும் கடவுள் எழுதியிருக்கிறார். எழுதா விட்டால் யார் மண்டையை உடைத்துக்கொண்டாலும் ஓர் உளுந்து (அளவு) குறைகிறதில்லை; ஓர் எள்ளளவு பெரிதாகிற தில்லையே. (ஏன்?)

## 149

சுவாமி! குடும்பத்துக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு தாருங்கள். நானும் பசித்திருத்தல் கூடாது. வருகின்ற சாதுவும் பசியாகப் போகக் கூடாது.

## 150

இந்த உடற்கூடு ஒரு பாண்டரச் செடி (இனிய பழம் பழுக்கும் ஒரு செடி). மனம் வண்டு. (ஈசுவர நாமத்தின்) பெயரின் பொருள் உவமையற்ற நந்நாற்றம். அவன் பெயரான அமுதத் தைப் பாய்ச்சினேன்; நம்பிக்கை என்ற பழம் கிடைத்தது.

(உடலிலேயே கடவுள் நம்பிக்கை தரும் இனிமையைப் பெற வழியுண்டு.)

பாடினவனும் அடையவில்லை. பாடாதவனிடமிருந்தும் அவன் தொலைவிலே இருந்துவிட்டான். நம்பிக்கை கொண்டு எவன் பாடினானோ அவனுடையவனே எம்பெருமான்.

### விரஹிணி (பிரிவாற்றாமையால் வருந்துபவள்)

## 152

விரஹிணி சேதி சொல்கிறாள்: கேள், எம் அன்பனே! மீன் நீரில் வாழும் உயிர், நீரில்லாமல் அது எப்படி வாழும்?

## 153

வழி பார்த்துப் பார்த்து விழிகள் குழி விழுந்துவிட்டன. பெயரைக் கூவிக் கூவி நாவில் கொப்புளம் ஏற்பட்டுவிட்டது.

## 154

இரவும் பகலும் கமலையைப் போல் கண்கள் நீரைப் பாய்ச்சிக்கொண்டிருக்கின்றன. அன்பன் கிடைப்பான் என்ற நம்பிக்கையில் பபீஹா (என்ற) புள்ளைப் போல் பிஉ, பிஉ (அன்பா, அன்பா) என்று அழைத்துக்கொண் டிருக்கிறேன்.

## 155

உன் பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்லி வெகுநாளாக அழைக்கிறேன் நான். உள்ளம் தவிக்கிறது, உன்னை அடைய. மனசு பதைப்பு அடங்கி அமர மறுக்கிறது.

## 156

பிரிவாற்றாமை என்ற பாம்பு உடலைக் கடித்துவிட்டது. ஒரு மந்திரமும் பிடிக்கவில்லை. ஈசுவரன் பெயரைக் கூவி ஏங்குபவன் உயிர் வாழக்கூடாது. வாழ்ந்தால் பைத்தியமாகிவிடுவான்.

## 157

பிரிவாற்றாமை என்ற அரவு நன்கு இறங்கி அமர்ந்து உள்ளத்தில் கடித்துப் புண்ணாக்கிவிட்டது. பிரிவாற்றாமையினால் வருந்துபவள் இப்படி அப்படி அசையமாட்டாள். 'எங்கு வேண்டுமோ அங்கே கடித்து உண்ணு' என்பாள்.

## 158

பிரிந்து வருந்துபவளான எனக்குச் சாவைக் கொடு; அல்லது தன்னைக் காட்டு. எட்டு யாமமும் பொசுங்க என்னால் முடியாது.

## 159

இரண்டு கண்கள், வைராகிகள் போலப் பிரிவாற்றாமை என்கிற கமண்டலம் ஏந்தி நிற்கிறார்கள்; தரிசனம் என்ற பிச்சையைக் கேட்கிறார்கள். இரவும் பகலும் ஏங்கி நிற்கிறார்கள்.

## 160

இந்த உடலையே விளக்கு ஆக்கி உயிரையே திரியாகச் சேர்த்தோம். இரத்தத்தை எண்ணெயாக்கிப் பாய்ச்சினோம். அன்பன் எப்பொழுது முகம் காட்டினான்?

## 161

(விரஹத்தால்) பிரிவாற்றாமையால் வருந்தியவன் தரிசனத்துக்கு வந்தான். வேலை* அவனுக்குக் கசந்தது. உடல் எமன்போல் ஆயிற்று. பெயர்தான் இனிமையாகத் தோன்றியது.

*மூலத்தில் உள்ளது 'காம்' என்ற சொல். அதற்குச் 'சிற்றின்ப விருப்பம்' என்ற கருத்தும் உண்டு.]

## 162

சிரித்துச் சிரித்துக் காந்தனை (நாயகனை) அடைந்ததில்லை யாரும். அடைந்தவன் அழுதே அடைந்தான். சந்தோஷமாய் அடைந்துவிடலாம் என்றிருந்தால் ர்தான் மணம் நீங்கியிருப்பர்?

## 163

ஊன் போய்விட்டது. உடல் கூடாகிவிட்டது. காக்கைகள் எட்டிப் பார்க்க ஆரம்பித்துவிட்டன. இதுவரையில் ஆண்டவன் வரவில்லை. நாம் கொடுத்து வைத்தது அவ்வளவு குறைவு.

## 164

கண்கள் அன்பைக் குடியேற்றிக்கொண்டன, வருத்தம் ஏற்படும் என்று அறியாமல். அவன் பெயரில் கொண்ட அன்பு காரணமாக இரவு அழுது அழுதே கழிகிறது.

## 165

அன்பனை அடையும் விருப்பம்; சேர்ந்தாற்போல் இன்பத்திலும் நாட்டம்; (இரண்டும் ஒவ்வாது). (பிள்ளைப் பேற்றுத்) துயரைப் பொறுத்துக்கொள்ளாமல் பத்மினி (பெண்) எப்படிக் குழந்தையை மடியில் எடுக்கும் இன்பத்தைப் பெற முடியும்?

## 166

பிரிந்து நிற்பவன் நனைந்த விறகு. எரிந்து கொண்டே புகைகிறது. இந்த ஈரம் (விரஹம்) தொலைந்தால் முழுவதும் எரிந்துவிடும். (தொல்லை தொலையும்.)

## 167

மலை மலையாய்ச் சுற்றிவந்தேன். அழுதே கண்களையும் இழந்தேன். ஆனால் வாழ்க்கையளிக்கும் பச்சிலையை மட்டும் கண்டேனில்லை.

## 168

இதயத்துள்ளே நெருப்பு எரிகிறது. புகை வெளியே தெரியாது. யாருக்கு ஏற்பட்டிருக்கிறதோ அவர்தான் இதைக் காணமுடியும். அல்லது யார் நெருப்பை ஏற்றி விட்டாரோ அவர்தான் காண முடியும்.

## 169

எல்லா மரத்தடியும் சென்று எல்லாப் பழங்களையும் சுவைத்தாகிவிட்டது. ஆனால் 'கபீர்' மீண்டும் மீண்டும் தரிசனத்தின் பிச்சையே கேட்கிறேன்.

## 170

அன்பன் இல்லாமல் உள்ளம் தவிக்கிறது. பிரிவாற்றாமை ஒவ்வொரு கணமும் வருத்துகிறது. இரவும் பகலும் எனக்கு அமைதி இல்லை. கேவிக் கேவியே உள்ளம் கரைந்துவிடும்.

## 171

சுவாமிக்கு உழைத்து எரிந்துவிட்டது (உடல்). உடலில் மாமிசம் இல்லை சுவாமி. நான் உழைத்துக்கொண் டிருக்கும் வரையில் இந்த உடல் (எரிந்து) சாம்பலாகாமல் இருக்கட்டும்.

## 172

பிரிவு, பிரிவு என்று (நொந்து) சொல்லாதே. பிரிந்தவன் ஓர் அரசன். எந்த உடலுக்குள் பிரிவாற்றாமை பரவி நிற்க வில்லையோ அந்த உடலை இடுகாடு என்றறி.

## 173

பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே பகல் கழிகிறது; பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே இரவும் தொலைகிறது. பிரிந்தவன் அன்பனை அடையப் போவதில்லை. அவன் உள்ளம் பதறுவதுதான் பயன்.

## 174

அந்த நாள்! குரு என் கையைப் பிடித்துத் தன்னவனாக ஏற்றுத் தன் சரண கமலங்களின் நிழலில் அமர்த்திக்கொள்ளும் அந்த நாள் எப்பொழுது வரும்?

## 175

(ஆண்டவன்) பேரில் எந்த மக்கள் அன்பு கொள்கிறார்களோ அவர்கள் எப்பொழுதும் தம் மனத்தில் லயித்தவர்களாக இருத்தல் வேண்டும். கண்ணாடிக்குள். இருக்கும் அழகியை யாரும் பிடித்ததில்லை. (அதுபோல) அவன் திருநாமம் புலன்களின் பிடிக்குள் வரக்கூடியதல்ல, மீறிய உணர்வின் மூலம்தான் பெறமுடியும்.

[[1]கண்ணுக்குள் இருக்கும் பாவையை என்றும் பொருள் கொள்ளலாம். இறைவன் திருநாமத்திடம் அன்பு கொண்ட பக்தன் அவனை மனத்துக்குள்ளேதான் அடையவேண்டும். வெளி யுலகில் பெற முடியாது.]

## 176

சக்கயி என்ற பெண் புள் இரவில் ஆணிடமிருந்து பிரிகிறது. காலையில் வந்து சேர்கிறது. ஆனால் சற்குருவிடமிருந்து பிரிந்தவன் இரவும் சேரமுடிவதில்லை, பகலும் சேர முடிவதில்லை.

## 177

பிரிவாற்றாத பெண் ராமனைப் பார்க்கவேண்டும் என எழுந்து பூமியில் விழுகிறாள். இறந்த பிறகு காட்சி தருவாயானால் அது என்ன காரியத்துக்கு ஆகும்?

## 178

கபீர்தாசர் சொல்கிறார்:—"ஏ ராமா! நான் செத்த பிறகு சேர வராதே. இரும்பு மண்ணில் சேர்ந்த பிறகு 'பாரச'த்தினால் என்ன லாபம்?"

## 179

உடல் ஒரு யாழ். எல்லா நரம்புகளும் அதன் கம்பிகள். அது எந்நாளும் பிரிவாற்றாமையைப் பாடுகிறது. அதை வேறு ஒருவரும் கேட்க முடியாது. ஒன்று ஆண்டவன் கேட்கலாம் அல்லது என் மனம் அறியும்.

## 180

"மறந்து விடுவேன், அன்பு குறைந்து விடும்" என்று மட்டும் நீ எண்ணி விடாதே. இறந்தால் உன்னை நினைத்தே இறப்பேன். உயிர் வாழ்ந்தாலும் எப்பொழுதும் உன்னை நினைத்துக் கொண்டே இருப்பேன்.

## 181

பிரிவாற்றாமை என்ற நெருப்பு உடலையும் மனத்தையும் எரித்துவிட்டது. உயிர் தத்துவத்தில்தான் ஒட்டிக் கொண்டிருக் கிறது. இதைப் பிரிந்துழலும் பெண்தான் அறிய முடியும் அல்லது காதலனுடன் சேர்ந்த உயிர் அறிய முடியும்.

## 182

பிரிவு என்ற கோடரி உடலைச் சிதைத்துவிட்டது. புண்ணின் குருதி ஓட்டம் தடைப்படுவதில்லை. இனி மேல் சாவதில் சந்தேக மில்லை; மயக்கமும் மோகமும் ஒழிந்தன.

## 183

கபீர் வைத்தியனைக் கூப்பிட்டார், கையைப் பிடித்துப் பார்க்க. மருத்துவன் வேதனையை அறிய மாட்டான். நோய் உள்ளத்தில் அல்லவா ஏற்பட்டிருக்கிறது.

## 184

பிரிவு என்ற அம்பு பட்டவன் எவனோ அவனுக்கு மருந்து தடவினால் வேலை செய்யாது. கேவிக் கேவிச் செத்து "ஐயோ, ஐயோ" என்று அலறி உயிர் பெற்று எழ வேண்டியதுதான்.

# வினயம் (வணக்கம்)-பணிவு

## 185

என் சுவாமியே, கவனி. நாங்கள் உலக (பிறவி) நீருக்குள் இருக்கிறோம். நீ கவனிக்காவிட்டால் நாங்கள் வெள்ளத்துடன் போய்விடுவோம்.

## 186

நான் எந்த வாயால் வணக்கம் தெரிவிப்பது? எனக்கு வெட்கமாக இருக்கிறது. நீ பார்க்கவே நான் இழி செயல் செய்து கொண்டிருக்கிறேன். உனக்கு எப்படிப் பிடிக்கும்?

## 187

நான் வாழ்நாள் முழுவதும் குற்றம் செய்தவன். (கால்) நகத்திலிருந்து (தலை) மயிர்வரை கோணல் குணம் (விகாரம்) நிறைந்திருக்கிறது. நீ வள்ளல்; துயர் அறுப்பவன்; என்னைக் கை தூக்கிவிடு.

[விகாரம்—மனத்தின் நைப்பாசைகள்.]

## 188

என் தந்தையே, ஏழை பங்காளா! என்னுடைய கெட்ட குணத்தை மன்னித்துவிடு. பிள்ளை கெட்ட பேர் எடுத்தால் அப்பொழுது தந்தைக்குத்தானே வெட்கம்!

## 189

நான் கெட்ட செயல்கள் பல புரிந்தேன்; சளைக்காமல் புரிந்தேன். வேண்டும் என்றால் அடிமையை மன்னித்துவிடு; அல்லது விரும்பினால் கழுத்தைத் திருகிவிடு.

## 190

இலட்சம் பேர் இருந்தாலும்கூட, ஏ, ஆண்டவனே நீ என்னை மறக்காதே. என்னைப் போல் உனக்குப் பலர் இருக்க லாம். ஆனால் உன்னைப்போல் எனக்கு வேறு ஒருவரும் இல்லை.

## 191

நீ உயிருள் உறைபவன்; நீ ஒருவன்தான் ஆன்மாவுக்கு அடிப்படை. நீயே கைவிட்டால் யார்தான் கரையேற்றுவார் கள்?

## 192

என் மனம் உன்னிடம் இருக்க உன் மனம் வேறு எங்கோ இருக்கிறது. ஒரே உள்ளம் இரண்டு இடத்தில் என்றால் எப்படிக் கட்டி வரும்? (என்னையே கவனி.)

## 193

மனத்திலோ நம்பிக்கையும் இல்லை, அன்பு ரசமும் இல்லை. உடலிலும் (வணக்கம் செய்யும்) முறை இல்லை. காதலனிடம் எப்படி அன்பு பெறுவது என்று தெரிகிறதில்லை.

## 194

என்னுடையதாக என்னிடம் ஒன்றும் இல்லை. எல்லாம் உன்னுடையதுதான். உன்னுடையதை உன்னிடம் ஒப்பிவிப்பதால் எனக்கு என்ன குறைந்துவிடப் போகிறது?

## 195

நீ கெட்டிக்காரன். ஏ சுவாமி! என் கையை வலுவாகப் பிடித்துக்கொள். இடத்துக்குக் கொண்டு போய்ச் சேர். வழியில் விட்டு விடாதே.

### சூட்சுமமான வழி (நுண்ணிய வழி)

## 196

அங்கிருந்து ஒருவரும் வெளி வருகிறதில்லை, ஓடிச் சென்று கேட்க. இங்கிருந்துதான் எல்லோரும் போகிறார்கள், மூட்டையைச் சுமந்துகொண்டு.

## 197

அன்பன் அன்புடன்தான் அழைக்கிறான். என்னால்தான் போக முடியவில்லை. பெண் (நான்) அழுக்கு நிறைந்தவள். காதலன் வெண்மையானவன் (தூயன்). காலில் விழ முடியவில்லை.

## 198

ஊரின் பெயர் தெரியவில்லை. தெரியாமல் எங்கே போவேன்? நடந்து நடந்து யுகம் கடந்துவிட்டது. கால் மைலில் (கோஸ்) உள்ள கிராமம்தான். (ஆயினும் கிட்டவில்லை.)

## 199

எல்லோரும் 'போ போ!' என்கிறார்கள். நான் நினைப்பது வேறு. ஆண்டவன் பழக்கம் (தெளிவான அறிவு) இல்லை. நாம் எந்த இடத்தை அடைவோம்?

## 200

எங்கே எறும்பும் ஏறமுடியாதோ, கடுகும் தங்க முடியாதோ அங்கே மனத்தை இட்டுச் சென்று நிறுத்து. அப்பொழுது

## 201

பாவம், வழி என்ன செய்யும்? வழிப்போக்கன் உன்னித்துச் செல்லவில்லை. தன் வழியை விட்டுவிட்டுப் பாழ்வழிச் செல்கிறானே!

## 202

சாவதென்றால் செத்துவிடு. சங்கடம் நீங்கும். இது என்ன சாவு, ஒரு நாளில் நூறுநூறு தடவைகள்?

(பயத்தை நீக்கி இருட்டு வழியானாலும் துணிவாகச் சென்று தனியொருவனான அக்காதலன் இருக்கும் இடத்தை அடை.)

# சோதிப்பவன் (பரீட்சகன்)

## 203

சந்தை சரியில்லை என்றால் அங்கே வைரத்தைத் திறக்காதே, இறுக்கி முடிச்சில் கட்டு; எழுந்து வழிநட.

## 204

வைரத்தை ஆராய்ந்து பார்த்து வாங்கினேன். கொண்டு வந்து சம்மட்டியால் அடித்தேன். அடி தாங்கிற்று; உடையவில்லை. அப்பொழுது நல்லது என்று அறிந்துகொண்டேன்.

## 205

முத்துக்குச் செல்லும் அன்னம் ஏன் கூழாங்கற்களை நம்பும்? கல்லுக்குத் *தலை வணங்காது. முத்து கிடைத்தால்தான் உண்ணும்.

* (1) உண்ணத் தலை வணங்குதல் (2) மரியாதை செய்தல்.

## 206

மானசரோவரத்தின் கரையில் அன்னமும் கொக்கும் ஒரே தோற்றம் தருகின்றன. ஆனால் கொக்கு மீனைத் தேடுகிறது; அன்னம் முத்தை உண்கிறது.

## 207

சந்தனக் கட்டை வெளி நாடு சென்றது. எல்லோரும் புரசங்கட்டை என்றனர். அடுப்பில் எரிய எரிய அதன் மணம் அதிகரிக்கிறது.

## 208

ஒரு விந்தையைக் கண்டாயா? வைரம் சந்தையில் விற்றது. சோதிக்கிறவன் வெளியாள் (நண்பன் அல்லன்.) ஒரு காசுக்கு மாற்றி எடுத்துச் செல்கிறான்.

## 209

பெயர் என்ற மாணிக்கத்தை அடைந்து முடிச்சில் நன்றாய்க் கட்டிவை. அதற்குத் தக்கவரும் கிடையாது. அதைப் பரீட்சை செய்கிறவனும் கிடையாது. வாங்குபவனும் கிட்ட மாட்டான்; அதற்கு விலையும் கிடையாது.

## 210

உயிர் பாரசம் போன்றது. உலகம் இரும்பு போன்றது. தொட்டால் பாரசம் ஆகிறது. சோதித்தால் உலகம் ஆகிவிட்டது.

(உயிருடன் இணைந்த சடப்பொருள் உயிர்ப்புப் பெறுகிறது. தனித்தெடுத்து உலகைச் சோதித்தால் அது சடப் பொருளே!)

[பாரசம்—இரும்பைத் தங்கமாக்கும் ஆற்றல் பெற்றதாகக் கருதப்படும் ஒரு கற்பனைக் கல். 35-ஆம் பாவிலும் வருதல் காண்க.]

## 211

அமுதத்தின் குடம், எல்லா விதத்திலும் (சோதித்து) எடுத்துவிட்டேன். என்னைப் போலவே யாராகிலும் கிடைத்தால் நன்றாகக் கலக்கி அவனுக்குத் தருவேன்.

## 212

மையின் அறை. மையாலான கோட்டை. என்றாலும் மறைவாக இருந்ததால் நான் கறுப்பாகவில்லை.

(உலகம் மலம் நிறைந்த வாழ்வைத் தருவது; ஒதுங்கத் தெரிந்தவனே கறைபடாமல் தப்புவான்.)

## 213

ஞானரத்தினத்தின் அறையைப் பேசாமல் பூட்டிவை. சரியான சோதனைக்காரன் எதிரே திற. இனிமையான வார்த்தைகளே திறவுகோல்.

## 214

உலகத்தில் எங்கும் இரத்தினம், வைரக்கற்கள் இருக்கின்றன. எல்லோரும் பார்த்துவிட்டு வருகின்றனர். கற்களின் தலைசிறந்த ஆராய்ச்சிக்காரர்கள் மிகவும் குறைவு.

## 215

மற்றவனுடைய மனத்தைச் சோதிக்கும் திறமையுடையவனுக்கு நான் வணக்கம் செலுத்துகிறேன். பகவான் கற்கண்டு தந்திருக்கிறான். நாட்டான் அதை உப்பு என்று எண்ணி விடுகிறான்.

## 216

சம்மட்டியின் அடியைத் தாங்கக் கூடியவரைக் கல்லைத்தான் வைரக்கல் என்று சொல்லவேண்டும். (அதுதான் புகழுக்குரியது.) மனிதன் வஞ்சனையுள்ள விலங்கு. உரைக்க ஆரம்பித்தவுடன் போலித்தனம் வெளியாகிறது (உரைத்தபோது சோடையானான்.)

## 217

ஹரியே (தலைவரே) வைரம். (பக்தர்களாகிற மக்களே) ரத்தினப் பரீட்சை செய்கிறவர்கள், எல்லோரும் சந்தை(க்கடை) விரித்திருக்கிறார்கள். ஆனால் உண்மையான அடியார்களாகிற ரத்தினப் பரீட்சகர்கள் வருகின்றபொழுதுதான் வைரத்தின் வியாபாரம் நடக்கும்.

(ஹரி நாமத்தின் பெருமையறிந்தவர்கள்தான் அந்த நன்மையைப் பெற முயலுவார்கள்.)

## 218

வைரம் கடைத் தெருவில் கிடந்தது. மேலே அழுக்கு ஏறியிருந்தது. பல அசடர்கள் பார்த்துக் கொண்டே சென்று விட்டனர். சோதனைக்காரன் அதை எடுத்துக் கொண்டான்.

## 219

கலியுலகம் சோடையானது. உலகம் இருட்டில் இருக்கிறது, ஒருவரும் வார்த்தையைக் கேட்டுக்கொள்கிறதில்லை. யாருக்கு நன்மையைச் சொல்கிறேனோ அவனே எழுந்து எதிரியாகிறான்,

## அறியவேண்டும் என்று ஆசையுள்ளவன்
## (ஜிஜ்ஞாசு)

### 220

வாழ்க்கைக் கடலில் முழுகுகிறவனை மயிரைப் பிடித்து இழுத்து வெளியேற்றுகிறவன்தான் நமக்கு உபதேசம் தரத் தகுதி பெற்றவன். அப்படி ஒருவரையும் காணோம்.

### 221

சேர்ந்து இருப்போம் என்னும்படியாக ஒருவரையும் நான் காணவில்லை. உலகம் முழுவதும் தன் தன் நெருப்பில் எரிந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறேன்.

(அவரவர் தனித் தனி அழிவு வழி செல்பவராக இருக்கின் றனர். எனக்கு இணையாக இருப்பவர் கிடைப்பது அரிதாக இருக்கிறது.)

### 222

நான் எப்படிப்பட்டவர் வேண்டும் என்று தேடி அலைகி றேனோ அப்படி ஒருவரும் கிடைக்கவில்லை. முக்குணம் அற்று நிர்க்குணத்தில் ஈடுபடும் அறிந்தவர் (எவரோ அவர்) எனக்கு வேண்டும்.

(சத்வ, இராஜஸ, தாமஸ குணங்கள் மூன்றும் நீங்கி, தூய பரம்பொருள் தன்மை பெற்றவராக உள்ள ஒருவரை நான் தேடி யலைகிறேன்.)

### 223

பாம்புக்குப் பால் கொடுங்கள். அது நஞ்சாகிறது. நஞ்சை விரும்பியுண்ணும் அப்படிப்பட்ட ஒருவர் கிடைக்கவில்லை.

### 224

நீரில் ஆழப் படிந்து யார் தேடினார்களோ அவர்கள் அடைந்தனர் (முத்துப் போன்ற பெரிய தத்துவங்களையும் நன்மைகளையும்.) நான் பித்துக்கொள்ளி; முழுக அஞ்சினேன். கரையிலேயே உட்கார்ந்திருந்து விட்டேன்.

### 225

பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே நானே மறைந்து விட்டேன். கபீர் சொல்கிறார்: "நீர்த்துளி கடலில் அடங்கி மறைந்துவிட்டது. இனி எங்கே பார்ப்பது?"

## 226

ஒன்று எல்லாவற்றிலும் அடங்கிற்று. எல்லாம் அதனுள் அடங்கிற்று. (ஜீவன் விசுவத்தில் அடங்க, விசுவம் பிரம்மத்தில் ஒடுங்கிவிட்டது.) கபீர்தாஸர் ஞானத்துடன் கலந்துவிட்டார் அங்கு வேறு ஒன்றும் இல்லை.

### (துவிதா—தொந்தம்) ஐயநிலை

## 227

இதயத்திலே கண்ணாடி இருக்கிறது. முகத்தைப் பார்த்துக் கொள்ள முடிகிறதில்லை. தொந்தத்தை (ஐயத்தை) நீரடித்துக் கொண்டு போகவிட்ட அப்பொழுதுதான் முகம் பார்த்துக் கொள்ளமுடியும் (தன்னைப் பற்றிய உண்மை தெரியும்.)

## 228

படித்தான், ஆராய்ந்தான், எல்லாவற்றையும் கற்றுக் கொண்டான் என்றாலும் சந்தேகம் என்ற முள் எடுபடவில்லை. கபீர் சொல்கிறார்: "யாரிடம் சொல்வேன்—இவை எல்லாம் துயருக்கு அடிவேர்."

## 229

எறும்பு அரிசியை எடுத்துக்கொண்டு சென்றது. நடுவிலே பருப்புத் துண்டு கிடைத்தது. கபீர் சொல்லுகிறார்: "இரண்டும் கிடைக்கப் போவதில்லை (ஏ, எறும்பே) ஒன்றை ஏற்றுக்கொள்; மற்றொன்றை எறிந்துவிடு."

## 230

சத்திய நாமம் கசக்கும்: பணம் இனிப்பாக இருக்கும். ஐயப்பாட்டில் இரண்டும் போய்விடும். மாயையும் கிட்டாது, ராமனும் கிட்டப் போவதில்லை.

### சொல்லும் செய்கையும்

## 231

சொல்லுதல் கற்கண்டு போல் இனிமையாக இருக்கிறது. செய்கையோ நஞ்சின் கரிப்புக் கொண்டுள்ளது. சொல்லை நிறுத்திச் செயல் புரிந்தால் நஞ்சிலிருந்து அமுதம் உண்டாகும்.

## 232

வாய்ப் பேச்சை நிறுத்திச் செய்கையில் மனத்தைச் செலுத்து. நீர் குடிக்காமல் மனிதன் தாகம் போகாது.

## 233

அஞ்ஞானி இரவும் பகலும் செயலில்லாமலே பேச்சுப் பேசுகிறான். காதால் கேட்ட வார்த்தைகளை நாய்போல் குரைத்துக் கொண்டு திரிகிறான்.

## 234

அங்கு இங்கு எழுத்துக்களை (சொற்களை)க் கல்லி எடுத்து "சாக்கிகள்" (ஞான மொழிகள்) செய்துகொண்டு வந்தாய். கபீர் சொல்லுகிறார் : "எச்சில் இலையை நக்கி எவ்வளவு நாள் வரை வாழமுடியும்? (சொல்லெல்லாம் எச்சிலே; செய்கை செய்.)"

## 235

தனக்கு நீர் கிடைக்கவில்லை, மற்றவருக்குப் பால் தானம் செய்கிறான். தன் மனம் தைரியம் அடையவில்லை. மற்றவருக்குத் தைரியம் ஊட்டுகிறான்.

## 236

உலகில் சொல் எல்லாம் சக்கைதான். செய்கைதான் சாரமானது. கபீர் சொல்லுகிறார் : 'செய்கை வலுவுள்ளது. பிறவிக் கடலில் இறக்கிக் கரையேற்றும்.'

## 237

சொற்களைச் சேர்க்கிறார். சாக்கிகள் (ஞானமொழிகள்) பேசுகிறார். வெற்றியோ வீண் வழி போய்விடுகிறது. வெளியேறியிருக்கும் நீரைக் குடிக்கிறதில்லை. வெளியேற்றிக் குடிக்கும் ஆவல் கெடுக்கிறது.

(பேச்சுக்கே நேரம் கழித்துச் செயல் ஒழிகிறார். பெரியோர் தேடித் தந்த வழியிருக்க அதைப் பின்பற்றாமல் புது வழி தேடிப் பேச்சுப் பேசி வேலை செய்யாமல் அழிகிறார்.)

## 238

அறிவுரைகள் பகருவான். அவற்றைப் பற்றி அவற்றின்படி நடக்கமாட்டான். ஆற்றில் யாரையும் அடித்துக்கொண்டு போகும்படியான மோக வெள்ளம் ஓடுகிறது. அதில் கீழே கால் பாவுவது எளிதல்ல.

## 239

வழி நடந்து விழுந்தவனைப் பற்றிக் குற்றம் இல்லை. கபீர் சொல்கிறார் : "உட்கார்ந்தே இருக்கிறானே அவன் தலையில் கோடித் திட்டுக்கள்" (கொட்டலாம்.)

## 240

சொல்கிறவர் பலர் கிடைத்தனர். ஆனால் (சொன்னதைப்) பற்றியவர் (பற்றி நடந்தவர்) ஒருவரும் கிடைக்கவில்லை : பிடித்துக்கொள்ளாமல் சொல்கிறவனாக மட்டும் இருக்கிறானே, அவனை (நீரோடு)ப் போகவிடு. (அவனைச் சட்டை செய்யாதே.)

## 241

தடுக்கக்கூடியதை ஒவ்வொன்றாய்த் தடு. இரண்டு இரண்டு நாக்குகளால் பேசுகிறவனுக்கு நல்ல வலுவான அறைதான் கிடைக்கும்.

## 242

வாயால் இனிமையாகப் பேசி, இதயத்தில் எவர் வேறு ஒரு கருத்தை வைத்துக்கொண் டிருக்கிறார்களோ, கபீர் சொல்கிறார்: "அந்த மக்களைவிட இராமபிரான் பெரிய கெட்டிக்காரன் (ஏமாறமாட்டான்.)"

## 243

எப்படிப் பேச்சோ அப்படிச் செய்கை இருக்கவேண்டும். எவ்வளவு ஆசையோ (ஆகர்ஷணமோ) அவ்வளவுதான் பெயரும் (ஈசுவரன்) கிட்டும். கபீர் சொல்கிறார்: "ஈசுவரன் பெயரில் ஆசை இல்லாமல் போராட்டம் எப்படித் தீரும்?"

## 244

கேட்கிறவன் வீட்டில் இல்லை. பேசுபவன் பேசுவது வீண். சொல்கிறவனும் கேட்கிறவனும் ஒரு வீட்டில் இருந்தால் சொல்வதற்குச் சுவை இருக்கும்.

## சகஜ பாவம்

### 245

"சகஜம்" "சகஜம்" என்று எல்லோருமே சொல்கின்றனர். ஆனால் சகஜத்தை ஒருவரும் அறிகிறதில்லை. எந்த இயல்பான முறையில் ஆண்டவன் கிடைப்பாரோ அதுதான் "சகஜம்".

### 246

புத்திரன், சொத்து, நல்லது கெட்டது எல்லாம் சகஜத்தின் மூலமே போய்விட்டன. கபீர் சொல்கிறார்: "(அப்பொழுது) அடிமையும் (ஈச்வரன்) பெயரும் ஒன்றுள் ஒன்றாகிச் சேர்ந்து விட்டோம்."

### 247

தானாக எது வருமோ அது இனிமையானது என்று அறி. எதைக் கசக்கிப் பெறவேண்டிய தேவை ஏற்படுகிறதோ அது வேம்பைப் போன்று கசக்கக் கூடியது.

### 248

தானாக (சகஜமாக)க் கிடைப்பது பால் போன்றது, கேட்டுக் கிடைப்பது நீர் போன்றது. இழுத்துப் பறித்து வாங்குவது இரத்தத்துக்குச் சமமானது என்று கபீர் சொல் கிறார்.

## மௌன (வாய்மூடி இருக்கும்) நிலை

### 249

என் காதலனைக் கனத்தவனென்று சொல்ல அஞ்சுகிறேன். லேசானவன் என்று சொன்னால் பொய்யாகும். கண்ணால் ஒன்றும் பார்க்கவில்லை. நான் அன்பனைப்பற்றி என்ன அறிவேன்?

### 250

பார்த்திருந்தாலும் எப்படிச் சொல்வேன்? சொன்னாலும் யார் நம்புவர்? சுவாமி! எப்படியிருக்கிறாயோ அப்படியே இரு. ஆனந்தத்தால் பொங்கிப் பொங்கி நான் உன் புகழைப் பாடுகிறேன்.

## 251

இப்படிப்பட்ட அற்புதத்தைச் சொல்லாதே. சொல்ல வேண்டும் என்றால் ஒளித்து வைத்துக்கொள். வேதம், குர்ஆன் இவற்றில் எழுதாததை நான் சொன்னால் யார் நம்புவார்கள்?

## 252

பார்த்தவன் சொல்வதில்லை. சொல்பவன் பார்த்ததில்லை. கேட்பவன் பிறருக்குத் தெளியச் சொல்ல முடிவதில்லை. நாக்கு, கண், காது எல்லாமே அப்படித்தான்.

## 253

வாத விவாதத்தினால் நஞ்சுதான் பரவுகிறது. பேசினாலும் அநேக இடையூறுகள். ஆகவே வாய் மூடி இரு. யார் சொல்வதையும் பொறுத்துக்கொள். தன்பாட்டில் ஆழ்ந்துள்ள (பொருள் பொதிந்த) பெயரை நினைத்துக்கொண்டே இரு.

### (ஜீவன் மிருதன்-மர்ஜீவா) முழுகி எழுந்தவன்

## 254

நான் கடலில் முத்துக் குளித்தவன். ஒரு முழுக்கு முழுகினேன். ஞானத்தின் ஒரு பிடி கொண்டு வந்தேன். அதற்குள் அநேக பொருள்கள் இருக்கின்றன.

## 255

சமுத்திரத்தில் முழுகி ஆகாயத்தில் எழுந்தேன். வான மண்டலத்தில் தங்கினேன். அடிமை நான் வைரத்தை அடைந்தேன். (சமாதியில் முழுகிப் பிரும்மரந்திரத்தில் தியானத்தை நிறுத்தி, பரமனுடன் நெருங்கி இன்பத்தை அடைந்தேன்.)

## 256

வாழ வேண்டும் என்று உயிரில் ஆசை பிடித்தவன் ஹரி என்ற வைரத்தை எப்படி அடைய முடியும்? குரு என்ற கடலிலிருந்து முத்துக் குளிக்கும் அடியான் தான் வெளியேறுவான்.

## 257

பெயரின் உரைகல், மிகவும் சரியானது. அதில் செல்லாக் காசு எல்லாம் தங்காது. சீவன் முக்தன் தான் மாத்திரை இழக்காமல் நிற்பான்.

(ஈசன் திருநாமத்தில் நம்பிக்கை கொண்டு முன்னேறுவது எளிதல்ல. சீவன் முக்தர்களாகத் தைரியம் உள்ளவர்கள் தான் அந்தச் செயலைச் செய்ய முடியும்.)

## 258

சாகிறேன் சாகிறேன் என்று உலகம் செத்தது. ஆனால் ஒரு உண்மை. மகனும் இப்படிச் சாகவில்லை. கபீர்தாசர் செத்த விதத்தில் மட்டும் மீண்டும் சாகவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. உலகக் கட்டு நீங்கி விட்டது.

## 259

எந்தச் சாவுக்கு உலகம் அஞ்சுகிறதோ அதனால் என்னுடைய மனத்தில் இன்பம் ஏற்படுகிறது. எப்பொழுது சாவேன், எப்பொழுது பூரணமான பரமானந்தத்தை அடைவேன்? (என்று இருக்கிறேன்.)

## 260

வீட்டை எரித்தால் வீடு தங்குகிறது. வீட்டைக் காப்பாற்ற முயன்றால் அது அழிகிறது. இந்த ஆச்சரியம் ஒன்றைப் பார்த்தேன். செத்தவன் எமனையும் சாப்பிட்டு விடுகிறான்.

(சாது) உலகத்தைத் துறந்தவன் - ஜீவன் முக்தன் - அமரனாகிறான்.

## 261

துக்கம் தரும் வழி தடையானால் (இடறும் கல்லானால்) என்ன லாபம்? சாது வழியிலுள்ள தூசியாக ஆவோனாக இருத்தல் வேண்டும். (வழிக்கு மணல் நல்லது, கல் தடங்கலாகும்)

## 262

தூசியினால் என்ன ஆனாய்? பறந்து உடம்பில் ஒட்டிக் கொள்ளும். சாது சேறற்ற நீர் போல் ஆகவேண்டும்.

## 263

நீரானால்தான் என்ன ஆயிற்று? சுடும், குளிரும். சாதுவோ ஹரியைப் போல் இருக்கவேண்டும்.

## 264

ஹரியானாலும் என்ன ஆயிற்று? ஆக்குவர், அழிப்பர். சாது அரியை வழிபட்டுத் தூயோனாக இருத்தல் வேண்டும்.

## 265

குற்றமற்றாலும் என்ன ஆயிற்று? தூயோனும் இடம் கேட்கிறான். அழுக்கு, தூய்மை இரண்டுமே இல்லாத சாது வேறு மாதிரி இருப்பான். (நன்மை தீமை இரண்டும் ஒட்டாதவன்.)

## 266

ஜீவன் முக்தனின் (முத்துக் குளிப்பவனின்) தைரியத்தைப் பார்: முழுகிப் பாதாளம் வரை சென்றுவிட்டான். மூச்சுத் திணறுகிறதையும் இலட்சியம் செய்யாமல் ரத்தினத்தையும் எடுத்துக்கொண்டு வெளியேறி விட்டான்.

# நல்வழி

## 267

அடைந்தேன் என்று சொன்னால் அவர்கள் பித்தர்கள். இழந்தேன் என்று சொன்னால் அவர்கள் முட்டாள்கள். அடையவும் இல்லை, இழக்கவும் இல்லை. இருந்தபடியே நிரம்பித்தான் இருக்கிறது. (மனிதன் பூரணத்தின் அம்சம். பூரணம் எடுத்தாலும் பூரணமே, சேர்த்தாலும் பூரணமே.)

## 268

வழிபடலாம் என்றால் வழிபட யார்? விடுவோம் என்றால் அதற்கு ஆன மற்றவன் யார்? வழிபாட்டுக்கும், விட்டிருத்தலுக்கும் இடையேயுள்ள இடத்தில் தான் கபீர்தாஸர் மனம் பொருந்துகிறது.

## 269

அதிகம் பேசுவதும் நல்லதல்ல. மிகவும் மௌனம் கொள்வதும் நல்லதல்ல. அதிகம் மழை பொழிவதும் நல்லதல்ல. அதிகம் வெயில் எரிப்பதும் நல்லதல்ல.

## சூரன் நெறி

### 270

ஆகாயத்தில் பறை ஒலிக்கிறது. (யுத்தக் குறி தரும்) வாத்தியங்களில் அடி விழுகிறது (ஒலி எழுகிறது.) சூரன் களத்தில் கூவுகிறான். இனி சண்டையின் பந்தயம்தான்.

(பிரம்மரந்திரத்தில் அநாஹத நாதம் எழுகிறது. சமாதி நிலைக்கிறது. பக்தன் கூவுகிறான் - பிரும்மத்தை வா என்று.)

### 271

தலைவனுக்காக (அவன் அன்புக்காக) எவன் சண்டையிடுகிறானோ அந்தச் சூரன் வாழ்த்துக்குரியவன். துண்டு துண்டாக ஆனாலும் களத்தை விடமாட்டான்.

### 272

அந்தச் சூரனைப் பாராட்டு. அவன் அங்கங்களில் இரும்பு (கவசம்) அணியமாட்டான். எல்லாக் காப்புக்களையும் கழற்றி விடுவான். உடலின் ஆசையை விட்டு விடுவான்.

(இந்தப் பாவில் கவசம் என்ற சொல் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. கவசம் என்றால் மந்திரம் என்றொரு பொருளும் படும்.)

### 273

சூரன் களத்தை விடமாட்டான். இரண்டு கூட்டங்களிடையே சாடுவான்; வாழ்வு சாவு இரண்டின் விருப்பங்களையும் மனத்தில் வரவே விடமாட்டான்.

### 274

இப்பொழுது சண்டையிட்டுத்தான் ஆகவேண்டும். திரும்பிச் செல்ல வீடு தொலைவில் இருக்கிறது. தலையைத் தலைவனுக்கு அளிக்க சூரன் யோசிக்க மாட்டான் (தயங்கமாட்டான்).

### 275

தலையைக் காப்பாற்ற முயன்றால் தலை போய் விடும். தலையை வெட்டினால் தலை உண்டாகும். விளக்கின் திரி போல வெட்டினால் வெளிச்சம் உண்டாகும்.

## 276

தோற்றால் குருவுக்குச் சேவை செய்கிறேன். வெற்றி பெற்றால் பந்தயம் வெற்றி. உண்மைத் திருப் பெயருடன் விளையாடுகிறேன் (திளைக்கிறேன்); தலை போனால் போகட்டும்.

## 277

தேடுபவனுக்கு அச்சம் (தரும் பொருள்கள்) அநேகம். நிமிஷத்துக்கு நிமிஷம் பிரிவு ஏற்பட்டுவிடும். ஆனால் விரதத்தைக் காப்பாற்றி, உடலை விடுவோமானால் அது தலைவனுக்கு ஏற்ற உடல்தான். (சாதனையின் நடுவே இறந்தாலும் நற்கதிதான்.)

## 278

அம்பு, துப்பாக்கியுடன் எவன் சண்டையிடுகிறானோ அவன் சூரனல்ல. மாயையைவிட்டுப் பக்தி செய்கிறவன் (எவனோ அவன்தான்) சூரன் எனப்படுவான்.

## கற்பு (தலைவனிடம் மாறாத அன்பு)

## 279

பதிவிரதைப் பெண் அழுக்காயிருப்பவள், கறுத்தவள், அருவெறுக்கத் தக்கவள், அழகற்றவளாக இருந்தாலும் நல்லவளே. (அப்படிப்பட்ட) பதிவிரதைப் பெண்ணுடைய தோற்றத்துக்கு எதிரே (அழகுக்கு எதிரே) கோடி அழகிகளை வாரிவிடலாம். (அவர்கள் அவ்வளவு பேரும் அவள் ஒருத்திக்குச் சமமாக மாட்டார்கள். பகவானிடத்தில் அசையாத பக்தியுடையவர்களைப் பதிவிரதை என்று குறிக்கிறார்.)

## 280

பதிவிரதை கணவனைத்தான் தொழுவாள். வேறு யாரும் அவளுக்கு விருப்பமாகமாட்டார்கள். சிங்கக் குட்டி, பசித்தாலும் புல்லைத் தின்னாது.

## 281

(அன்பா!) கண்களுக்கு உள்ளே வா. கண்களை மூடி உன்னை வைத்துக்கொள்கிறேன். நானும் பிறரைப் பார்க்க மாட்டேன்; உன்னையும் பார்க்க விடமாட்டேன்.

## 282

கபீர் சொல்கிறார்: "சமுத்திரத்தில் உள்ள சிப்பி, தாகம் தாகம் என்று அடித்துக்கொள்ளும். ஆனாலும் வேறு நீர்த் துளியை ஏற்காது. அதற்குச் சுவாதியின் துளியில் தான் நாட்டம்."

(சுவாதி: சிறப்பாக ஒரு கோளையும் பொதுவாகக் கொண்டலையும் குறிக்கும். சுவாதியின் நீர்த்துளி சிப்பியில் பட்டுத்தான் முத்து ஆகிறது என்று சொல்லப்படுகிறது.)

## 283

பபீஹாவின் (என்ற பக்ஷியின்) விரதத்தைப் பார்த்தால் கொஞ்சம்கூட (நமக்குத்) தைரியம் இருக்காது. சாகும்போது நீரில் விழுந்தது. அப்பொழுதும் அது அலகை நனைக்கவில்லை.

[பபீஹா என்ற புள் சுவாதி (யின் மேக) நீரைத் தவிர வேறு நீர் பருகாது. அதுவும் விண்ணிலிருந்து விழும்போதே தலையைத் தூக்கி ஏந்திக் குடிக்குமாம். அதன் திண்ணிய பற்று பக்தியின் அலையாத் தன்மைக்கு எடுத்துக் காட்டாகும் என்று துளஸி தாஸரும் சொல்லி மகிழ்வர்.]

## 284

அழகி தன் தலைவனைத்தான் போற்றுவாள். மற்ற எதனிடமும் நாட்டத்தை விட்டுவிடுவாள் (நாட்டம் செலுத்த மாட்டாள்.) அவனை எப்பொழுதும் பிரியமாட்டாள். ஓர் இமைப் பொழுதுகூட அவன் அருகிலிருந்து நகரமாட்டாள்.

## 285

அழகி (பதிவிரதை) கோதாவில் (செயற்களத்தில்) இறங்கி விட்டாள். காதலுடன் விளையாட எண்ணிவிட்டாள். ஞானத்தின் விளக்கை ஏற்றிவிட்டாள். (எண்ணெயைப் போல் அவள் வேலை செய்கிறாள்) எரிகிறாள்.

## 286

சூரனுக்குத் தலை இல்லை. வள்ளலுக்குப் பணம் இல்லை, பதிவிரதைக்கு உடல் இல்லை. நினைவுதான் மனதில் இருக்கிறது.

(அவர்கள் அவ்வப்பொருள்களைக் கருதவே மாட்டார்கள்.)

## 287

பதிவிரதை மங்கியிருந்தாலும் நல்லவளே. கழுத்தில் கண்ணாடி மணிகளே இருந்தாலும், எல்லாத் தோழிகளுக்கும் நடுவில் சூரியன் சந்திரன் போல் ஒளி காட்டுவாள்.

## 288

பதிவிரதை பதியினிடம் நம்பிக்கைப் வைத்துப் பதியையே போற்றுவாள். வேறு எந்தத் திக்கிலும் பார்வை செலுத்த மாட்டாள். எப்பொழுதும் பதியையே நம்பியிருப்பாள்.

## 289

உள்ளே அன்பு இருக்கும் பொழுது பேர் சொல்லவில்லை என்றால் என்ன? பதிவிரதை பதியையே போற்றுகிறாள். வாயால் பேர் சொல்லமாட்டாள்.

## 290

இந்த (பரப்பிரம்மம்) ஒன்றை யார் அறியாதவரோ அவர் (மற்ற) எல்லாவற்றையும் அறிந்து என்ன பயன்? (இந்த) ஒன்றிலிருந்து எல்லாம் கிடைக்கலாம். மற்ற எல்லாவற்றிலுமிருந்து இந்த ஒன்று கிடைக்காது.

## 291

அந்த ஒன்றில் வலிவு (நம்பிக்கை) இருந்தால் கிளை, இலை, பழம், பூ எல்லாம் ஏற்படும். மூலத்தை (வேரை) எப்பொழுது பிடித்தாயோ, சொல், பின்னால் என்ன இருக்கிறது (பிடிக்க)? (எல்லாம் கைவந்து விட்டது.)

## 292

ஏ குணம் நிறைந்த கணவனே, உன்னிடம் எனக்கு உள்ள அன்பு பெரிது (செறிந்தது). மற்றவரிடம் சிரித்துப் பேசினால் பல்லில் நீலம் தடவிக் கொள்கிறேன். (பல்லுக்கு நிறம் ஏற்றிக் கொள்வது விலைமடந்தையர் பழக்கம். 'நான் விலை மடந்தையாகி விடுகிறேன்' என்று சூளுரைக்கிறார் கபீர்)

## 293

கபீர் சொல்கிறார்: "(தலையில்) சிந்தூரக் கோடு, (கண்ணில்) மையிட்டு அலங்காரம் செய்துகொள்ள முடியவில்லை. கண்ணில் காதலன் கனிந்து நிறைந்து நிற்கிறானே, மற்றது எப்படி இடம் பெறும்?"

## 294

எட்டு யாமங்கள், அறுபத்து நான்கு 'கடி'களும் எனக்கு வேறு ஒருவரும் இல்லை. கண்களில் நீ வாழ்கிறாய், தூக்கத் துக்குக் கூட இடம் இல்லை.

(ஒரு கடி—ஒரு நாழிகைக்கும் குறைவான நேரம். ஒரு நாளில் அறுபத்து நான்கு கடிகள் உண்டு.)

## 295

இப்பொழுதோ (பதிவிரதை) இவ்விதம் ஆகிவிட்டாள்; மனத்தைக் கறையற்றதாக ஆக்கிக்கொண்டு விட்டாள். சாவின் அச்சத்தை ஒதுக்கி அவள் கையில் குங்குமச் சிமிழை எடுத்துக் கொண்டு விட்டாள்.

## 296

பாவம், சதி உடன்கட்டை ஏறிவிட்டாள். முட்களின்மேல் படுக்கை விரித்து, தன் கணவன் உடலையும் வைத்துக்கொண்டு நான்கு பக்கமும் நெருப்பை மூட்டிவிட்டாள்.

## 297

சதி (கணவனுடன் இருக்கும் கற்புடைய மகள்) வீடு வீடாக மாவரைத்துக் கொண்டிருக்க மாட்டாள். அப்படிச் செய்கிறவள் கணவனற்றவள். சாது பிச்சை எடுக்கமாட்டான். எடுத்தால் அவன் பகல் வேஷக்காரன்.

## 298

அழகி படுக்கையை விரித்தும் மனத்துள் திரையிட்டு (உள்ளன்பு கொள்ளாதிருந்து), உடல் தந்தும் மனத்தை ஒப்படைக்காமல் இருப்பாளானால் அவள் 'என்றும் சுமங்கலி'யாக இருப்பாள்.

('என்றும் சுமங்கலி' என்று விலைமாதரை இடக்கரடக்கலாக வும் கிண்டலாகவும் குறிப்பிடுவது வழக்கம்.)

## சற்குரு

### 299

நற்குருவுக்குச் சமமாக உறவினர் யார் உள்ளார்? சாதுவைப் போல் வள்ளல் ஏது? ஹரிக்கு ஒத்த (நலம் செய்யும்) நண்பன் யார்? (பாகவதர்கள், அடியார்கள்) ஹரிஜனங்கள் போன்ற நம்மினத்தவர் (என்று சொல்ல) வேறு எங்குளர்?

### 300

குரு, கோவிந்தன் இருவரும் நிற்கின்றனர். யார் காலில் விழுவேன்? குருதான் போற்றத் தகுந்தவர். அவர் தானே கோவிந்தனைக் காட்டிக் கொடுத்தார்.

### 301

கடிகைக்குக் கடிகை நூறு நூறு தடவைகள் குருவுக்காக அழிகிறேன் (உள்ளம் இழக்கிறேன்.) கொஞ்சம்கூட நேரம் தாழ்த்தாமல் மனிதனிலிருந்து என்னைத் தேவனாக்கினாரே!

### 302

உலகம் முழுவதையும் காகிதமாக்கி, மரங்களை முற்றும் எழுதுகோளாக்கி ஏழு கடல்களையும் மசியாக்கினாலும் குருவின் குணம் (பெருமை) எழுதப் (எழுதி முற்றப்) பெறுமோ?

### 303

எவருக்குப் பொறியின்பத்தில் பற்று இல்லையோ அவருக்கு உடலையும் உள்ளத்தையும் கொடுத்துவிடு. தன்மையை (தான் என்ற தனித் தன்மையை) எல்லாம் எறிந்து பரமேசுவரனிடத்தில் மனத்தை வைக்கிறார் அவர்.

### 304

உடலையும் உள்ளத்தையும் (பேச்சுக்குக்) கொடுத்தால் என்ன ஆயிற்று? உண்மையாக மனது கொடுக்கப்படாவிட்டால், கபீர் சொல்கிறார்: "அப்படிப்பட்ட அடியானிடம் எப்படி நம்பிக்கை ஏற்படும்?"

## 305

குருவைச் சாணை பிடிப்பவராகக் கொள். மனத்தைத் தேய்த்துச் சுத்தம் செய்யட்டும். மனத்தின் அழுக்கை ஒழித்துச் சித்தத்தைக் கண்ணாடியாக்கட்டும்.

## 306

குரு வண்ணான்; சீடன் துணி, படைத்தவன் சவர்க்காரத் துண்டு. சுரதி (தியானத்தில் கிட்டும் ஆன்மாநந்தம்) என்கிற கல்லில் துவைத்தால் பெருஞ்சோதி வெளியாகும்.

## 307

குரு குயவர். சீடன் குடம். அடித்து அமைத்துக் கோணலை (குறைகளை) நிமிர்க்கிறார். (அடிக்கும்போதும்) உள்ளே ஒரு கையால் தாங்கி வெளியே அடிக்கிறார். (அவ்வளவு கருணை.)

## 308

கபீர் சொல்கிறார்: "குருவை வேறு ஏதேதோ சொல்கிறவர்கள் குருடர்கள். ஹரி சினம் கொண்டால் குருவிடம் வரலாம். குரு வெகுண்டால் போக்கிடம் இல்லையே."

## 309

மனத்தில் நன்கு எண்ணிப் பார். குரு தேவன் கோவிந்தனை விடப் பெரியவர். ஹரியை நினைத்தால் சோதனை உண்டு. குருவை நினைவு கொண்டால் (உடனே) கரைதான்.

(நற்கதி நிச்சயம்)

## 310

குரு பாரசக் கல்; குருவின் தொடுகை (பரிசம்) சந்தனத்தின் சிறந்த மணம் தரும். சற்குரு என்ற பாரசம் உயிரைத் தங்கமாக்கி அதற்கு முத்தியில் இருக்கையைத் தருகிறார்.

## 311

பண்டிதர் படித்துச் சிந்தித்துச் செரித்து உயிரை விட்டார்! குரு இல்லாமல் ஞானம் கிட்டாது. ஞானம் இல்லாமல் முத்தி கிடையாது. சத்திய சப்தமே (உண்மைச் சாஸ்திரங்களே) இதற்குப் பிரமாணம்.

## 312

மூன்று உலகம், ஒன்பது கண்டங்களிலும் குருவைவிடப் பெரியவர் ஒருவரும் கிடையாது. படைப்பவன் செய்யலாம், செய்ய முடியாமல் இருக்கலாம். குரு செய்தால் மட்டும் அது ஆகிவிடும்.

ஒன்பது கண்டங்கள்: பரதகண்டம், இலா விருத்தம், கிம்புருடம், பத்ரம், கேதுமாலை, ஹரிகண்டம், ஹிரண்ய கண்டம், ருசகண்டம், குருகண்டம்.

## 313

ஹரி சினம் காட்டினால் குருவின் சரணத்தை அடையலாம். கபீர் மீண்டும் சொல்கிறார்: ''குரு வெகுண்டால் ஹரி உதவிக்கு வரமாட்டார்.''

## 314

பொருள் எங்கோ இருக்கத் தேடுவது, எங்கோவானால் அது எப்படிக் கைக்குக் கிட்டும்? இரகசியம் தெரிந்தவனை உடன் அழைத்துச் செல். கபீர் சொல்கிறார்: ''அப்பொழுது அது கிடைக்கும்.''

## 315

இந்த உடல் நச்சுக் கொடியாகும். குரு அமுதத்தின் சுரங்கம். தலையைக் கொடுத்துத்தான் குரு கிடைப்பார் என்றாலும் மலிவுதான் என்று அறி.

## 316

கோடி சந்திரன் உதிக்கட்டும். ஆயிரம் கோடி ஞாயிறே உதிக்கட்டும். மெய்க்குரவர் சேர்க்கைக்கு வெளியே இருக்கு மட்டும் இருட்டாகத்தான் தென்படும்.

## 317

நன்றாய் யோசித்துப் பார். சற்குரு பாரசக் கல். அடுத்த வீட்டுக்காரி அழைத்துச் சென்றாள், விளக்கைச் சீர் செய்து கொடுத்தார்.

(குருவை நன்கு பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்தவ பயன்பெற்று விடுகிறான்.)

### 318

சந்திரனின் பதினான்காவது கலை நாளில் (வளர்பிறை பதினான்காவது நாளில்) அறுபத்து நான்கு விளக்கு ஏற்றி வைத்தாலும் சற்குரு எவன் வீட்டில் இல்லையோ அவன் வீட்டில் எந்த ஒளி வரும்?

### 319

குரு வழி காட்டாத அவனுக்கு வழி எங்கே தீரப்போகிறது? அவன் படகு மீண்டும் மீண்டும் வழி கெட்ட துறையில் முழுகத் தான் செய்யும்.

## 'அசத் குரு' (தகுதியற்ற ஆசிரியன்)

### 320

நல்ல குருவும் கிடைக்கவில்லை. (நல்ல) சீடனும் கிடைக்க வில்லை. இரு மணிகளும் (ஈசுவரனை வைத்து) பந்தயம் ஆடுகிறார்கள் (அவ்வளவுதான்). இருவரும் கற்படகில் ஏறி வெள்ளத்தின் வேகத்தில் முழுகியவர்களே.

### 321

குரு தெரிந்தவர் இல்லை. சீடன் கேட்டுக்கொண்டு முன் செல்லவில்லை. குருடனுக்குக் குருடன் கிடைத்தால் வழி காட்டுவது யார்?

### 322

கருமக் கயிற்றால் பிணைப்புண்டவனே பிணைப்புண்டவ னுக்குக் கிடைத்தால் பிணைப்பு எந்த வழியில் அறும்? பிணைப்பு அற்றவருக்கு ஊழியம் செய். ஒரே இமைப்பொழுதில் விடுவித்துவிடுவார்.

### 323

(போலிக் குரு) புனைந்து பேசினார், உலகை ஏமாற்றினார். மனத்தில் விழிப்பு மட்டும் தரவில்லை. கபீர்தாசர் சொல்கிறார்: "(அப்படிப்பட்டவர்) எண்பத்து நாலு லட்சம் உயிர்த் தொகுதி களிடம் மனத்தை எடுத்துச் சென்றார்."

(எண்பத்து நான்கு லட்சம் பிறவிகளில் பிறக்கும்படி செய்து விடுவார்.)

## 324

நீர் அருந்தவைக்க நீர் ஏன் அலைகிறீர்? ஒவ்வொரு வீட்டிலும் கடலாக நீர் நிறைந்திருக்கிறதே! நீர் வேட்கை எடுத்தவனாக இருந்தால் தானே குடிக்கிறான், வேறு வழியின்றி.

## 325

சிடன் அநேகருடன் நட்புக் கொண்டான். சற்குருவுடன் நட்புக் கொள்ளவில்லை. சத்தியலோகத்தை நோக்கி நடந்தான். இடையிலேயே மனது சிக்கிவிட்டது.

## சாது சனங்கள்*

## 326

சாதுக்கள் பெரிதும் பிறர் நலம் விழைபவர்கள். அடர்ந்த மேகங்கள் போல் வந்து பொழிவார்கள். தன் பரிசத்தைக் கொணர்ந்து மற்றவர்களின் வெம்மையைத் தணிக்கின்றனர்.

(பரிசம் : ஸ்பரிசம்-பாசம், மிகச் சிறந்த பொருள்.)

## 327

சிங்கங்களின் மந்தை கிடையாது. அன்னங்கள் வரிசையாக இருக்கா. மணிகள் மூட்டைக் கணக்கில் கிடைப்பதில்லை. சாதுக்கள் கூட்டத்தைப் பார்க்க முடியாது.

(இவை எல்லாம் சிறந்த பொருள்கள்)

## 328

எல்லாக் காட்டிலும் சந்தனம் இருப்பதில்லை. கூட்டத்தில் எல்லோரும் சூரர்கள் இல்லை. எல்லாக் கடலிலும் முத்து இருப்பதில்லை. அப்படியேதான் சாதுவின் நிலையும்.

## 329

சாது என அழைக்கப்படுவது மிகவும் அல்லல் தரும் நிலை. பெரிய ஈச்சமரம் போன்றது. ஏறினால் அன்பு ரசம் குடிக்கலாம்; விழுந்தால் சுக்கு நூறுதான்.

---

* சந்த்ஜன் = நல்லோர்.

## 330

பணத்தை முடிச்சுப் போடாதவன்; பெண்ணுடன் நட்புக் கொள்ளாதவன்: கபீர் சொல்லுகிறார்: "அப்படிப்பட்ட சாதுவின் காலடியில் நாம் தூசியாவோம்."

## 331

மரம் ஒருபொழுதும் பழங்களைச் சாப்பிட்டுவிடுவதில்லை. ஆறு நீரைக் குடித்துவிடுவதில்லை. பிறர் நலனுக்காகவே சாதுக்கள் உடல் எடுத்திருக்கிறார்கள்.

## 332

சாது, சாது என்று எல்லோரும் தத்தம் இடத்தில் பெரியவர்கள் தான். சப்த விவேகம் உள்ள ஆய்வாளர்கள் தலையின் மகுடம் போன்றவர்கள்.

(குணம் மட்டும் இல்லாமல் ஞானமும் கொண்டவர்கள்.)

## 333

சாது, சாது; எல்லோரும் அபினி வயல் மாதிரி ஒன்றேதான். விவேகமுள்ள ஒருவர் செம்மை கொண்டவர். வெண்மையில் வெண்மையாய் இருக்கமாட்டார் அவர்.

(அபினிச் செடிகள் கொண்ட வயல் வெண்மையாகத்தான் இருக்குமாம். அவற்றின் இடையே ஒன்றிரண்டு சிவந்த பூக்களும் காணப்படும். அதைப்போலச் சாதுக்களுள் ஓரிருவரே விவேகச் செம்மை கொண்டு தனியழகு காட்டுவர்.)

## 334

அருவப் பிரமத்துக்கு (அதைப் பார்க்க) சாதுவின் தேகமே கண்ணாடி. பார்க்க விரும்புகிறவர்கள் பார்க்க இயலாத அதை இவர்களுக்குள்ளேயே பார்த்துக் கொள்ளலாம்.

## 335

(சாதுக்களிடம்) சிலர் அபிப்பிராயம் (ஏதாவது கேட்டுத் தெரிந்துகொள்ளும் விருப்பம்) கொண்டு வருகிறார்கள். சிலர் விருப்பம் இல்லாமல் வருகிறார்கள். சாதுக்கள் இருவரையும் காக்கின்றார்கள். எண்ணம் இருப்பதையும் இல்லாததையும் அவர்கள் கவனிப்பதில்லை.

## 336

நிலவும் குளுமையில்லை, பனியும் குளுமையில்லை. கபீர் சொல்கிறார்: ''சாதுக்கள் குளுமையுள்ளவர்கள். அவர்கள் (ஈசுவரனுடைய) பெயரின் அன்பர்கள்.''

## 337

சாதுவின் சாதியைக் கேட்காதே. ஞானத்தைக் கேட்டு அறிந்துகொள். வாளை விலை பேசிப் பெற்றுக்கொள்; உறை அங்கேயே கிடக்கட்டும், விடு.

## 338

சாதுக்கள் கோடி அசத்துக்களுடன் சேர்ந்தாலும் தம் சாதுத் தன்மையை விடமாட்டார்கள்: பாம்பு சந்தன மரத்தைக் கட்டித் தொளைத்தாலும் சந்தன மரம் தன் தண்மையை இழப்ப தில்லை.

## 339

சாது இவ்வண்ணம் இருத்தல் வேண்டும் : தாம் துயர்படவும் கூடாது; பிறருக்கு வருத்தம் தரவும் கூடாது. தோட்டத்திலேயே இருத்தல் வேண்டும். இலையையும் பூவையும் தொடக்கூடாது.

## 340

சாதுவுக்கும் சித்தனுக்கும் பெரிய மாறுபாடு உண்டு. மாமரத்துக்கும் கருக மரத்துக்கும் இடையே இருப்பதுபோல் அதன் கிளையில் இனிய பழம் (இருக்கும்). இதன் கிளையில் முள் (இருக்கும்.)

[சாதுக்கள் உபதேசம் இனிமையாக இருக்கும். சித்தர்கள் வழி கடினமாயிருக்கும்.]

## 341

ஹரி என்கிற கடல் நன்கு நிரம்பியிருக்கிறது. சாதுவின் இதயம் சிப்பியாகும். அதில் முத்து உற்பத்தியாகிறது. பல வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

## 342

சாது (உயர் கருத்துக்களுக்கு) பாவனைக்குப் பசித்தவர்கள் (ஏங்குபவர்கள்). பணத்துக்குப் பசித்தவர்கள் அல்ல. பணத்துக்கு ஏங்கி அலைகிறார்கள் என்றால் அவர்கள் சாதுக்கள் அல்ல.

## 343

சாதுவைக் கடல் என்று அறி. அதில் ஞான ரத்தினங்கள் நிரம்பயிருக்கின்றன. நற்பேறு அற்றவர்கள் கை நிறையக் கூழாங்கற்களை முடி எடுத்துக் கரை ஏறிவிடுகின்றனர்.

## 344

சந்தனத்தின் குச்சிகூட நல்லது (போதும்.) கருக மரம் லக்ஷம் கொண்ட தோட்டமேனும் அது பயனற்றது. சாதுவின் குடிசை நல்லது. நீயோலின் அரண்மனையே ஆனாலும் அது அல்ல. (ஆகாது.)

## 345

ஹரியைவிட ஹரிஜனங்கள் (பாகவதர்கள்—அடியார்கள், பக்தர்கள்) பெரியவர்கள். நன்றாய் மனத்தில் சிந்தித்துப் பார். கபீர் சொல்கிறார் : ''உலகம் முழுவதும் ஹரியின் ஆக்கம். அந்த ஹரி ஹரிஜனங்களுக்குள்ளே!''

## 346

உருவம் கொண்டவனை (ஈசுவரனை) வேண்டுகிறாயானால் சாதுக்கள் நேரடியாகப் பார்க்கக்கூடிய கடவுள், உருவமற்ற கடவுளின் உண்மையான சொருபமேதான். அன்புடன் சேவை செய்.

## 347

மாற்றுக் கட்சிகள் பேசிப் பேசி உலகம் முழுவதும் உண்மை சொருபத்தை மறந்துவிடுகிறது. கட்சியில் படாமல் ஹரியை வழிபடுகிறவனே உண்மையான சாது.

## 348

"நன்கு தெரிந்தும்கூடச் சடமாயிருக்கிறார். (ஞானத்தின்) பலத்தைவிட்டுப் பலமற்றவராக ஆகியிருக்கிறார். அந்தச் சாதுவிடம் ஒருவரும் செல்ல வேண்டாம்'' என்று கபீர் சொல்கிறார்.

(உண்மையான ஞானி பார்க்க எளியவராக இருப்பார்' அதற்காக அவரிடம் சென்று தகாத முறையில் நடந்துகொள்ளக் கூடாது.)

## 349

எல்லைக்குள் செல்லுபவன் மனிதன். எல்லையை மீறிச் செல்லுபவன் சாது. எல்லைக்குள் இருத்தல், எல்லை மீறுவது இரண்டையும் விட்டவனுடைய கருத்தே மிகவும் ஆழமானதாக இருக்கும்.

## 350

சால்புடைய சாது தங்கம்; நூறு முறை உடைந்தாலும் சேர்ந்துவிடும். தீயோர் குயவன் செய்த குடங்கள். ஒரு உதையில் உடைந்து விடும். (மீண்டும் சேராது.)

## 351

உலகப் பற்றை விட்டுச் சீவன் முக்தர்களாக ஆகியிருக்கிறார் கள்; அவர்கள் ஹரி'பக்தர்கள். முன்னும் பின்னும் ஹரியிருக்க அவர்கள் ஏன் துயரடைகிறார்கள்?

(அஸஜ்ஜனர்கள்) நல்லோர் அல்லோர்.

## 352

நற்சேர்க்கை ஏற்பட்டு என்ன ஆயிற்று? (துர்ச்சனர் களுடைய) இதயம் கல்லாயிருக்கிறதே. ஒன்பது 'கஜம்' (இருபத் தேழு அடிகள் உயரம்) நீர் ஏறினாலும் முனைகூட நனைவ தில்லையே?

## 353

தண்ணீரில் ஈரம் பிடித்தால் மரத்தில் பசுமை (உயிர்) இருக்கிறது என்றறி. மரம் காய்ந்து கட்டையாகி விட்டால் ஈரம் பிடிக்காது என்றறி. மேகமே பொழிந்து எவ்வளவு முழுக்கினால் என்ன?

[சற்றேனும் நெஞ்சில் ஈரம் உள்ளவனிடம், அறிவுரை பயன் படும். இல்லையெனில் ஆயிரம் சொல்லியென்?]

## 354

கபீர் சொல்கிறார் : "மூடர்களாகிற பிராணிகள் நகம் முதல் தலைவரை கவசம் அணிந்துள்ளார்கள். அவர்கள் மேல் பாணம் தைக்காது. (நற்சொற்கள் பயன்படா.) எய்கிறவன் என்ன செய்வான்?"

## 355

மாட்டுடன் பழக நேரிட்டுவிட்டது. அதற்காக இருந்திருந்து (அடிக்கடி) சலித்துக்கொள்ளாதே. செழிப்பில்லாத பூமியில் இரண்டு மடங்கு விதை போட்டாலும் ஒன்றும் கிளம்பப் போவ தில்லை.

## 356

கபீர் சொல்கிறார் : "சந்தன மரத்தின் அருகில் (இருந்தால்) வேம்பும் சந்தன மரமாகிவிடும். முழுகுகிறவர்களுக்கு (அழுந்தாம லிருக்க) மூங்கில் வளர்ந்திருக்கிறது. ஒருவரும் இவ்விதம் முழுகி விட வேண்டாம்."

(நல்லோரல்லோர் முழுகாமலிருக்க நல்லோர்தம் நற் சரிதையும் நல்லுரைகளும் உதவுகின்றன.)

## 357

கொக்கின் பொய் முயற்சி பலிக்கலாம். மேலும் அன்னம் என்றும் சொல்லப்படலாம். ஆனால் முத்துக்களை எப்படிச் சாப்பிட முடியும்? காலனின் சுளுக்கில் விழுந்துவிடும்.

(சாதுக்கள் எமன் வலையில் விழமாட்டார்கள். போலிகள் தப்ப முடியாது.)

## 358

சாதுவாகி விட்டால் என்ன ஆயிற்று? நாலைந்து மாலைகள் அணிந்துகொண்டு விட்டால் (ஆயிற்றா?) வெளியில் வேஷம் போட்டாய்விட்டது. உள்ளே நிறைந்திருக்கிறதே குப்பை!

(அதற்கு வழி?)

## 359

மாலையணியலாம், பொட்டுப் போடலாம்; பக்தி கை வராது. தாடியையும் மீசையையும் சிரைத்துக்கொண்டும் அவன் உலகப் போக்கிலேதான் போகிறான்.

## 360

தாடி மீசையைச் சிரைத்துத் தலையும் முழு மொட்டை யாயிற்று. மனத்தை ஏன் சிரைக்க மாட்டேன் என்கிறாய்? அதில் தானே அழுக்கு, குப்பை எல்லாம் தங்கியிருக்கின்றன!

## 361

மொட்டை யடித்துக்கொண்டால் ஹரி கிடைப்பான் என்றால் எல்லோரும் மொட்டையடித்துக் கொள்வார்களே! செம்மறி யாட்டை எவ்வளவு முறை மொட்டையடிக்கிறார்கள், அது வைகுண்டம் போகவில்லையே!

## 362

இந்த மயிர் என்ன தீங்கு செய்தது? நூறு தடவை சிரைத்து மொட்டையாக்குகிறாயே. மனத்தை ஏன் சிரைக்க மாட்டேன் என்கிறாய்—அதில்தானே நுகர்ச்சி வேட்கைகள் நிரம்பி இருக்கின்றன

## 363

ஏ! பைத்தியமே! பாம்புப் புற்றை ஏன் இடித்து நிரப்புகிறாய்? பாம்பு சாகாது. மூர்க்கனே! புற்றுக் கடிப்பதில்லையே? பாம்பல்லவா எல்லோரையும் சாப்பிடுகிறது.

(கெட்டது உடல் அல்ல. குணம்தான். அதுதான் ஒழிக்கப்பட வேண்டும்.)

## 364

சாதுக்கள் விட்ட பொருளை (நல்லோரல்லோர்) எடுத்து ஏந்திக்கொள்கிறார்கள். எதை மனிதன் வாந்தி செய்து உமிழ்ந் தானோ அதை நாய் ருசியுடன் சாப்பிடுகிறது.

## 365

நாம் நினைத்தோம்; "நீ அன்பு ரசத்தில் முழுகி அழுந்தி யிருக்கிறாய்" என்று. நீயோ கொஞ்சம் காற்றுப் பட்டவுட னேயே பாம்புபோல் எழுந்து நின்று விட்டாய்!

[பக்தியில் ஈடுபட்டு மயங்கியிருக்கிறாய் என்று நினைத்தேன், பொய்யுருக் காட்டியிருக்கிறாய்.]

## 366

சாது (வாகக் கூடியவன்) யார் பேச்சையோ கேட்டுக் கெட்டவனாகிவிட்டான். வெண்கலம் செம்பாகிவிட்டது. தங்கத்தின் தன்மை அதற்குக் கிடைக்காது.

## 367

இரும்பினால் ஆன படகு; கற்களின் பெரும் சுமை. தலையில் நஞ்சின் மூட்டை (இந்த நிலையில்) அக்கரை ஏற விரும்புகிறான் அவன்.

[ஆசைத் தினவு கொண்ட உடல், ஆசைகளின் சுமைகொண்ட மனம்; தலையில் பாவமூட்டை இவற்றைக் கொண்ட கெட்டவன் கரையேறுவது எப்படி?]

## 368

எல்லாக் கெட்ட புத்தியையும் விலக்கு. பிறவியை நல்லதாக்கு. காகத்தின் போக்கையும் புத்தியையும் தொலைத்து விடு. அன்னத்தின் போக்கை ஏற்றுக்கொள்.

## 369

சந்தன மரத்தைத்தான் பாம்பு பின்னியிருக்கிறது. பாவம், சந்தனம் என்ன செய்யும்? மயிர்க்காம்பு எல்லாம் (பாம்பின் உடல் பூராவும்) நஞ்சு நிறைந்திருக்கிறது. அமுதம் தந்த இடம் ஏது? பாம்பு நஞ்சு நீங்கி நல்லதாகுமா?

## 370

மலய மலை (பொதிகை)யின் நந்நாற்றம் (சந்தன மணம்) பலாச மரத்துள் எல்லாம் நுழைந்தது. (அதுகூட மணம் பெற்றது.) ஆனால் யுகம் யுகமாக அருகில்தானே இருக்கிறது, மூங்கில். அதற்குள் நுழையமுடியவில்லையே!

## 371

நச்சுத் தரையில் விதை இட்டாய். (இப்பொழுது) அமுத நீரை நூறு முறை பாய்ச்சுகிறாய்! என்ன பயன்? 'யாரிடம்

எந்தக் குணம் இருக்கிறதோ அதை அவன் விடமாட்டான்' என்று கபீர் சொல்கிறார்.

## 372

பாவம், குரு என்ன செய்வார்? சீடனிடத்தில் குறையிருக்கிறது. சொல்லம்பு (அறிவுரையின் கருத்துத்) தான் நுழைகிறதில்லையே, குழலூதி என்ன பயன்?

## 373

### சத்சங்கம் (நற்சேர்க்கை—தக்கார் உறவு)

கபீர் சொல்கிறார் : ''சாதுக்களின் சேர்க்கை மற்றவரின் (சேர்ந்தவரின்) நோவைத் தீர்க்கும். அசாதுவின் சேர்க்கை கெட்டது. எட்டு யாமமும் வியாதி தரும்.''

## 374

கபீர் சொல்கிறார் : ''சாதுவுடன் சேர்ந்து சோளத் தவிட்டையும் சாப்பிடலாம். பாயஸம், சர்க்கரைப் பொங்கல் கிடைத்தாலும் பொல்லாதவனுடன் போகக்கூடாது.''

[துஷ்டன் என்ற கருத்தில் கபீர் உபயோகித்திருக்கிற 'சாகடன்' என்ற சொல்லுக்கு, சாக்தமதக்காரன் அல்லது 'குருவிடம் தீக்ஷை பெறாதவன்' என்ற பொருள்களும் உண்டு.]

## 375

சாதுக்களுடன் சேர்தல் அத்தர் விற்பவன் வாசனை மாதிரி. அத்தர் வியாபாரி ஒன்றும் தராதபோதிலும் மணம் நன்மணமாக இருக்கும்.

## 376

(வட) மதுரை விரும்பு; துவாரகை விரும்பு. ஜகந்நாத் வேண்டுமானாலும் போ. சாதுக்களின் சேர்க்கை, கடவுள் வழிபாடு இவை இல்லாமல் ஒன்றும் கைக்குக் கிட்டாது.

## 377

சாதுக்கள் சேர்க்கை கிடைக்காத அந்நாட்கள் வீணில் கழிந்தன, (சாதுக்களிடம்) அன்பும் கடவுளிடத்தில் அன்பும் இல்லாத வாழ்க்கை விலங்கினுடையதுதான்!

## 378

கபீர் சொல்கிறார் : "மனம் பறவையாகிவிட்டது. எங்கு விருப்பமோ அங்குப் போகட்டும். எப்படிச் சேர்க்கை செய்கிறதோ (கொள்கிறதோ) அதற்குத் தகுந்த பயனை அடையட்டும்."

## 379

கபீர் சொல்கிறார் : "கோட்டையின் அகழியின் நீரை ஒருவரும் குடிக்கமாட்டார்கள். சென்று கங்கையுடன் கலந்து விட்டால் எல்லாம் 'கங்கை நீராகி' விடும்."

## கெட்ட சேர்க்கை (தகாத உறவு)

## 380

வேண்டுமென்றே (தீரத் தெளிந்தே) உண்மையை ஒதுக்குகிறவர்கள், பொய்யுடன் அன்பு செய்கிறவர்கள், ஏ கடவுளே அவர்கள் உறவைக் கனவிலும் தராதே.

## 381

உன்னிடம் உண்மையான அன்பின் ஏக்கம் (அன்பு செய்யும் ஆர்வம்) இருந்தால் பக்குவப் பொருளுடன் விளையாடு. பச்சைக் கடுகை ஆட்டினால் பிண்ணாக்கும் ஆகாது—எண்ணெயும் வராது.

## 382

கறுப்புக் கோடு விழுந்துவிட்டால் நூறு மணு சோப்புத் தேய்த்துக் களையவேண்டும். கோடி முயற்சி செய்தாலும் காகம் அன்னமாகப் போவதில்லை.

## 383

வாழைக்கருகில் இலந்தை. (வாழை) தகாத உறவினால் அடிபட்டே சாக நேரிடும். இது (இலந்தை) ஆடினால் அது உடல் கிழியும். விதி அப்படிச் சேர்த்து வைத்தது.

## 384

இலந்தை அருகில் வந்த அப்போதே வாழை விழித்துக் கொள்ளவில்லை. இப்பொழுது விழித்துக்கொண்டு என்ன செய்வது? முட்கள் தான் சூழ்ந்து விட்டனவே.

## ஊழியனும் தாசனும்

### 385

ஆண்டான் வாசலில் கிட; பிரபு கொடுக்கும் உதையை ஏற்றுக்கொள். வாசலை விடாமல் இருந்தால் அவன் என்றாவது காப்பான்.

### 386

அடியார் தன்மை இதயத்தில் இல்லை; தான் அடியான் என்ற பெயர் ஏற்றுக்கொண்டான். தண்ணீரைக் குடிக்காமல் வேட்கை எப்படி அடங்கும்?

### 387

போகம், முக்தி ஒன்றையும் கேட்கமாட்டேன். எனக்குப் பக்தி தானம் அருளுவாயாக. வேறு ஒருவரிடமும் இரத்தல் செய்ய மாட்டேன். உன்னைத்தான் இரப்பேன்.

### 388

மையறை போன்றது இந்த உலகம். இதில் முழுகி வெளி யேறுகிற (மேலே கோடு படாமல் - உலகத்தில் ஈடுபடாமல் வெளியேறும்) தாசனுக்கு என் பாராட்டுக்கள்.

### 389

(ஈசுவர பக்தியின்) நிறம் ஏறாதுபோனால் (பக்தி ஏற்படாத போனால்) இனிமையாகத் தூக்கம் வரும். நிறம் (அன்பு ஏற்பட்டுவிட்டால்) தூக்கம் வராது. நீரின் நீங்கிய மீன்போல் இரவைத் துடித்தே கழிப்பாய்.

### 390

எந்த உடலில் நாயகன் வசிக்கிறானோ அந்த உடலில் இருள் எப்படி மண்டிப் பரவும்? முயற்சியுடன் அதை அமுக்கு, வெளிச்சம் ஏற்படும்.

### 391

எல்லாப் பாண்டத்துள்ளும் (உடலுக்குள் எல்லாம்) என் சுவாமி இருக்கிறார். ஒரு படுக்கையும் காலிப் படுக்கையல்ல. ஆனால் எந்தப் பக்தன் உடலில் அவன் வெளிப்பட்டு நிற்கி றானோ அந்தப் பக்தனுக்கு நான் அடிமை—என் பாராட்டுக்கள்.

## 392

தத்துவம் என்ற பொட்டை நெற்றியில் அணி. சுரதி (திருப் பெயரின்பம்) என்ற காதணியைப் போட்டுக் கொள். தன் செய்கைகளாகிற சங்கிலியைக் கழுத்தில் அணிந்துகொள். நிர்வாணம் கைவந்த பொருளாகி விடும்.

## 393

மனத்தை மாலையாக, உடலை மேகலையாக, அச்சத்தை விபூதியாக ஆக்கிக்கொண்டு எவன் எல்லாவற்றையும் 'அலக்' குடன் சேர்ந்ததாகப் பார்க்கிறானோ அவனே அவதூத யோகி. (யோகிகள் அடைய விரும்பும் கடவுள் 'அலக்' காகும்.)

## 394

உடலளவில் யோகியாக யாவரும் செய்துகொள்ளவார்கள். ஒருவரும் மனத்தை அவ்விதம் செய்து கொள்கிறதில்லை. மனத்தாலும் யோகியானால் எளிதாகவே எல்லாவற்றையும் அடையலாம்.

## 395

நாம் மனத்தால் யோகி; மற்றவர் உடலளவில் யோகிகள் (தோற்றத்தால் மட்டும் யோகிகள்). மனத்திலேயே யோகியாகி விட்டதால் நிலையே வேறு ஆகிவிட்டது.

யோகம் ஆத்மாவைப் பரமாத்மாவுடன் பொருந்துதல் என்று சொல்லளவில் பொருள்படும். உடற்பயிற்சிகளின்மூலம் அந்த நிலையைக் கைவரச் செய்பவன் ஹடயோகி. எந்தவிதச் சாதனைகள் மூலம் அந்நிலை பெற்றாலும் அப்படிப் பெற்றவனும், பெற முயலுபவனும் யோகியே.

### எச்சரிக்கை

## 396

கபீர் சொல்கிறார்: "வீண் பெருமை கொள்ளாதே. எமன் தலைமயிரைப் பிடித்துவிட்டான். வீடு என்ன, வேற்று நாடு என்ன? யார் கண்டது? எங்கே சாவோ?"

## 397

பொய்யான இன்பத்தை இன்பம் என்கிறோம். மனமும் மனநிறைவுடன் ஏற்கிறது. உலகம் எமனின் தின்பண்டம். பாதி மடியில், பாதி வாயில். (கடலை முதலியன தின்பவன் மடியி லிருந்து எடுத்துத் தின்பான் அல்லவா!)

## 398

சுகமா, சுகமா என்று கேட்டுக்கொண்டே இருக்கின்றனர். ஆனால் உலகில் ஒருவரும் தங்குவதில்லை. கிழத்தன்மையும் ஒழியவில்லை, பயமும் சாகவில்லை. சுகம் எங்கிருந்து ஏற்படும்?

## 399

இந்த மானிடச் சாதி நீரிற் குமிழி. காலையில் நட்சத்திரங்கள் (மறைவது) போலப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மறைந்துவிடும்.

## 400

தூங்கி இரவை இழந்தாய்விட்டது. சாப்பிட்டுப் பகலும் போயிற்று. பிறவி விலையற்ற வைரமாக இருந்தது. அதைச் சல்லிக்காசுக்கு மாற்றியாய் விட்டது.

## 401

நல்ல நாட்கள் எல்லாம் பின்னால் போய் (வீணாகக் கழிந்து) விட்டன. குருவிடம் அன்பு செய்யவில்லை. இப்பொழுது வருந்தி என்ன செய்வது? பறவைகள் வயலைக் கொத்தித் தின்றுவிட்டனவே! (காலம் தாழ்த்திக் கவலை கொண்டால் என்ன பயன்?)

## 402

நாளை செய்வதை இன்றே செய். இன்றே செய்வதை இப்பொழுதே செய். ஒரு இமையில் பிரளயம் ஏற்பட்டுவிடும். பிறகு எப்பொழுது செய்வாய்?

## 403

அடுத்த "கால் இமை" (மாத்திரை) நேரத்தில் என்ன நடக்கும் என்று தெரியவில்லை. நாளை நடப்பதற்கு ஏற்பாடு செய்கிறாய்! காலன் திடீர் என்று அடித்து (வீழ்த்தி) விடுவான், கழுகு காடையை அடித்துவிடுவது போல்.

## 404

கபீர் சொல்கிறார் : "தன் பறையை, பத்து நாட்கள்தான் அடித்துக்கொள். பிறகு இந்தப் பட்டணம், இந்த வீதிகள் ஆகியவற்றை மீண்டும் வந்து பார்க்கமாட்டாய்.

## 405

ஐந்து வேளைகளிலும் வாத்தியங்கள் முழங்கின. முப்பத்தாறு ராகங்கள் பாடின (பாடப்பட்டன). அந்தக் கோவில் இன்று காலி; காகங்கள் உட்கார ஆரம்பித்துவிட்டன. (உடற் கோயில்.)

## 406

கிராமங்கள் எல்லாம் பாழ்படுகின்றன. குயவன் அமைத்த எல்லாம் ஓட்டாஞ்சல்லிகள் ஆகின்றன. இலங்கையின் தலைவனான இராவணன் போன்றவரே போய்விடுகின்றனர்.

## 407

கபீர் சொல்கிறார்: "இந்த இளமையில் நம்பிக்கைக் கொண்டு பெருமை அடித்துக்கொள்ளாதே. பலாசப் பூப்பூத்துப் பத்தே நாட்கள், (ஆனவுடன்) மரம் கட்டையாகி விடும்.

## 408

கபீர் சொல்கிறார்: "உயர்ந்த வீட்டைப் பார்த்து வீணில் பெருமை கொள்ளாதே. நாளையே தரையில் படுத்துக்கொள்ளல் வேண்டும்; மேலே புல் முளைத்துவிடும் (சாவாய்).

## 409

சால்மலிப் பூ (இலவு) எப்படியோ அப்படியேதான் இந்த உலகமும். பத்து நாள் ஓட்டத்தில் நிறம் பொய்த்துவிடும், மறக்காதே.

## 410

மண் குயவனிடத்தில் சொல்லுமாம்; 'நீ என்ன என்னைத் தவைக்கிறாய்? ஒரு நாள் வரும். நான் உன்னைப் பிசைந்து விடுவேன்' என்று.

## 411

கபீர் சொல்கிறார்: "இந்த உடல் போவது (அழிவது) தான், முடிந்தால் நல்ல இடத்தில் சேர். சாதுவுக்குச் சேவை செய்தோ அல்லது குருவின் புகழ் பாடியோ (பிழைத்துக் கொள்— நற்கதியடை.)"

## 412

'உன்னுடைய', 'என்னுடைய' என்கிற (மமதையாகிற) கயிற்றை முறுக்கி உலகம் கட்டுண்டிருக்கின்றது. கபீர்தாஸர் ஏன் கட்டுப்படுவார்? அவருக்குப் பகவானுடைய நாமம்தானே ஆதாரம்!

## 413

மனிதப் பிறவி (பெறுவது) அரிது. இந்த உடம்பு அடிக்கடி கிடைக்காது. (கிடைத்த பிறவியை நன்கு பயன்படுத்திக் கொள்வாய்).

## 414

வந்தவர்கள் (அவர்கள்) போவார்கள்; அரசன், ஏழைப் பக்கிரி (எல்லோருமே தான்). ஒருவன் சிம்மாசனத்தில் ஏறிச் செல்வான்; மற்றொருவன் சங்கிலி பிணைத்துப் போவான் (அவ்வளவுதான்).

## 415

தன் உயிரைப் பற்றி (அதன் அருமை பெருமையைப் பற்றி) அறிந்தாயானால் அதைக் காப்பாற்றுவாய். உயிர் போன்ற விருந்தாளி இரண்டாவது தடவை (மீண்டும்) கிடைக்காது. (கிடைத்த பிறவியைப் பக்தி மார்க்கத்தில் பயன்படுத்திக் கொள்ளவாய்.)

## 416

கபீர் சொல்கிறார்: "இந்த உடல் போகும். முடிந்தால் திருப்பி வைத்துக்கொள். (பார்க்கலாம்!) யாரிடம் இலட்சம் கோடி என்று இருந்ததோ அவர்களும் வெறுங்கையுடன்தான் சென்றார்கள்.

## 417

அக்கம்பக்கத்தில் போர் வீரர்கள் நிற்கின்றனர். எல்லோரும் பெருமை பேசுகின்றனர். அரண்மனையின் நடுவிலிருந்தே எடுத்துப் போய்விடுவான். எமன் அப்படிப்பட்ட கொடும்பாவி,

## 418

உடல் சத்திரம்; மனம் காவலாளி. ஆசை வந்து இறங்கி இருக்கிறது. நன்றாகத் தட்டித் தடவிப் (அலசி யோசித்துப்) பார்த்துவிட்டேன். இங்கே யாரும் யாருக்கும் உறவு இல்லை.

## 419

நான் நான் என்கிறது பெரிய நோயாகும் (தொந்தரவு)' முடிந்தால் கிளம்பி ஓடிவிடு. கபீர் சொல்கிறார்: "பஞ்சைச் சுற்றிய நெருப்பு எதுவரையில் (எரிக்காமல்) இருக்கும்?"

## 420

பகலில் சுகம் இல்லை. இரவிலும் சுகம் இல்லை. சுகம் கனவிலும் இல்லை. (ஈச்வரன்) பெயரிலிருந்து எந்த மனிதன் விலகினானோ அவனுக்கு வெயிலும் இல்லை, நிழலும் இல்லை.

(எங்கும் சுகம் கிடையாது)

## 421

நீ காவல் காக்கவேண்டிய நேரத்தில் விழித்திரு. படுத்துத் தூங்கிவிடாதே. ஒரு கணத்தில் யாருடைய காவல் ஏற்பட்டுவிடும் என்று சொல்ல முடியாது.

(எமன் வந்து விடலாம்.)

## 422

உலகத்துடன் சேர்ந்து சமயத்தை விட்டான். உலகமும் கூட வரவில்லை. மூர்க்கன் தன் கையாலேயே காலில் கோடரியைப் போட்டுக்கொண்டான்.

## 423

'(மன) வண்டே, காடு காடாகச் சென்று வாசனை நுகராதே என்று தடுத்தேன்; 'ஏதாவது நச்சுக் கொடியில் சிக்கிவிடுவாய். துடித்துத் துடித்து உயிரை விடுவாய்' என்றேன்.

(உலகத்தில் மோகம் கொள்ளாதே என்பது கருத்து.)

### 424

தோட்டத்தின் நடுவில் இருந்துகொண்டு வண்டு மணம் நுகர்ந்து கொண்டிருந்தது. அந்த வண்டு தோட்டத்தின் ஆசையை விட்டுப் பறந்து சென்று விட்டது.

(உயிர் போய்விட்டது.)

### 425

(மரண) பயம் இல்லாமல் பாவனை (மனித்தின் எண்ண எழுச்சிகள்) ஏற்படாது. பயம் இல்லாமல் அன்பு ஏற்படாது. இதயத்திலிருந்து பயம் போய்விட்டால் ரசத்தின் எல்லா முறையும் போய்விடும்.

(அன்பின் இன்பம் போய்விடும்.)

### 426

எல்லோரும் பயத்தில் பக்தி செய்கிறார்கள். பயத்தினால் தான் பூசனை நடக்கிறது. பயம்தான் ஜீவனுக்கு (தொட்டதைத் தங்கமாக்கும்) பாரசக்கல். ஒருவரும் பயமற்றவராக ஆகிவிடாதீர்.

### 427

ஆட்டு மந்தையின் போக்கு எப்படியோ அப்படியேதான் உலகத்தின் போக்கும்! ஒன்று எந்தக் குழியில் விழுந்ததோ அந்தக் குழியிலேயே விழும் மற்றவையும்.

### 428

ஒரு நாள் இம்மாதிரி ஆகிவிடும்: ஒருவரும் ஒருவருக்கும் (ஒன்றும் உறவு) ஆகமாட்டார்கள். வீட்டில் இருக்கும் 'நாரி' (பெண்) என்ன? உடலிலுள்ள 'நாரி'யே (நாடியே) விட்டுவிடும்.

(ஹிந்தியில் 'நாரி' என்ற பதத்துக்கு 'பெண்', 'நாடி' என்ற இரண்டு பொருள்கள் உண்டு.)

### 429

அதிகப் பூக்களுக்கு ஆவல் கொண்டு வண்டு தோட்டத்தில் தாமதித்தது. உயிர் பொறியின்பங்களில் தங்கிக் கெட்டுக் கடைசியில் நம்பிக்கையிழந்து (வாழ்க்கை பயனற்றுச்) சென்றது

## 430

ஓடிக்கொண்டிருக்கிற திரிகையைப் பார்த்துக் கபீர் அழுது விட்டார். இரண்டு கல்லுக்கும் இடையே வந்து யாரும் முழுதாகத் தப்பினதில்லை.

(ஆகாயத்துக்கும் பூமிக்கும் இடையே வந்த மனிதன் நசுங்கிச் சாகிறான்.)

## 431

இலவைக் காத்தது கிளி, இரண்டாய் வெடிக்கும் என்ற ஆசையில். படார் என்று பஞ்சாய் வெடித்தது இலவு. கிளி ஏமாந்து சென்றது.

## 432

மண்ணை (பூமியை) ஓர் அடியாகவும், ஒரு தாவலாகச் சமுத்திரத்தையும் தாண்டி, கையாலேயே மலையை (த்தூக்கி) நிறுத்தவும் கூடியவர்கள் உண்டு. அவர்களையே எமன் உண்டு விடுகிறான்.

## 433

இன்றோ நாளையோ, உடம்பு நிலையில்லை. கபீர் சொல் கிறார்: "பச்சை மண் பாண்டத்தில் நீரை எப்படி வைத் திருப்பாய்?"

## 434

தோட்டக்காரன் வருவதைப் பார்த்து மொட்டுக்கள் கூவுகின்றன; 'மலர்ந்தவற்றை எல்லாம் பொறுக்கிப் பறித்துக் கொண்டான். நாளை நம்முடைய முறை' என்று.

## 435

உடலோ பச்சை மண். மனமோ கிடமற்றது. வேலையை மட்டும் நிலை என்று செய்கிறோம். மனிதன் துணுக்கற்று நடக்க நடக்க எமன் சிரிக்கிறான்.

## 436

நாம் நினைத்திருந்தோம், 'அதிகப் பூமியையும் அதிகப் பொருளையும் உண்போம் (அனுபவிப்போம்)' என்று. வைத்த தெல்லாம் வைத்தபடி இருக்க எமன் பற்றி இழுத்துக்கொண்டு போய்விட்டான்.

## 437

காட்டுத் தீயில் எரிந்த கட்டை நின்று கூவுகிறது; 'இப்பொழுது கருமான் வீடு செல்வேன். மீண்டும் இரண்டாம் முறை (கரி உருவத்தில்) எரிவேன்.'

## 438

எரிகின்றவனும் இறந்தான்; எரிக்கின்றவனும் இறந்தான். இருக்கிறேன் இருக்கிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தும் இறந்தனர். இனி யாரிடம் முறையிடுவது?

## 439

அண்ணன் தம்பிகள், உறவினர், தாயாதிகள் எல்லோரும் கண்ணீர் நிரப்பி நிரப்பி அழுகிறார்கள். யாருடையதோ பொருள், அவன் எடுத்துக்கொண்டான். இரண்டு நாள் நேரம் தந்திருந்தான்.

(அவ்வளவுதான்.)

## 440

உனக்கு உடனிருப்போன் ஒருவரும் கிடையாது. எல்லோரும் சுயநலம் கொண்டவர்களே. மனத்தில் நம்பிக்கை கொள்ளாதே. உயிரில் நம்பிக்கையும் பற்றும் கொள்ளாதே. (போகின்ற வழிக்கு ஒருவரும் துணையாக மாட்டார்கள்) பகவானிடத்தில் நம்பிக்கை வை.

## 441

கபீர் சொல்கிறார் : "காலில் பாசக் கயிறு (கட்டி இருக்கிறது.) எங்கே சுகமாகத் தூங்குகிறாய்? மூச்சு என்கிற செலவுப் பறை தான் இரவும் பகலும் வாசித்துக் கொண்டிருக்கிறதே.

## 442

உதிர்கின்ற இலை இவ்விதம் சொல்கிறது; 'கேள், மர அரசே! இப்பொழுது பிரியும் நாம் மீண்டும் சேர மாட்டோம். நான் சென்று தொலைவில் விழுந்து விடுவேன்!'

## 443

கபீர் சொல்கிறார் : இனி இயந்திரம் நாதம் எழுப்பாது, எல்லா நரம்புகளும் (தந்திகளும்) உடைந்துவிட்டன. ஐயோ, இந்தக் கருவி என்ன செய்யும்? வாசிப்பவன் விட்டுப் போய் விட்டானே.

## 444

நம் உடனாளிகள் போய் விட்டனர். நாமும் போகின்றவரே. சீட்டில் மிச்சம் (காலம்) இருக்கிறது. அதனால் நேரம் ஆகிறது.

## 445

பத்துத் துவாரங்கள் கொண்டது கூடு (இந்த உடல்.) அதில் இருக்கும் பறவை காற்று. (பிராணன்.) அது தங்கியிருக்கிறது தான் விந்தை. போனால் என்ன வியப்பு?

## 446

தேவர், மனிதர், தேவதைகள்; ஏழு தீவுகள், ஒன்பது கண்டங்கள். கபீர் சொல்கிறார்: "யாராயிருந்தாலும் சரி, எங்கிருந்தாலும் சரி, எல்லோரும் உடல் எடுத்ததன் தீப்பயனை அநுபவித்தே இருக்கிறார்கள்.

### உபதேசம்

## 447

உனக்கு முள் தெளித்தவனுக்கு நீ மலரைத் தெளி. உனக்குப் பூவுக்குப் பூ; அவனுக்குத் திரிசூலம் ஆகிவிடும் (முக்கூர் முள்ளாகி விடும்.)

## 448

பலம் குறைந்தவனைத் தொந்தரவுக்கு உள்ளாக்காதே. அவன் பெருமூச்சு மிகவும் வலிமைவாய்ந்தது. உயிரில்லாததின் (கருமான் துருத்தியின்) மூச்சிலேயே இரும்பு சாம்பலாகி விடுகிறது.

## 449

கபீர் சொல்லுகிறார் : "தான் ஏமாந்தாலும் பிறரை ஒருவரும் ஏமாற்றாதீர். நாம் ஏமாந்தால் (பிறருக்காவது) சுகம் ஏற்படும். பிறரை ஏமாற்றினால் (நமக்குத்) துக்கந்தான் ஏற்படும்.

## 450

இந்த உலகத்தில் வந்த நீ முறுக்குவதை (செருக்குப் பிணக்கை) விட்டுவிடு. எடுத்துக்கொள்ள வேண்டும் என்றால் எடுத்துக்கொள். சந்தை கலையப் போகிறது.

## 451

தான் என்ற முனைப்பு நீங்கிச் சொற்களைப் பேசு. (அந்தப் பேச்சு) மற்றவரையும் குளிரச் செய்யட்டும். உனக்கும் தண்மை தரட்டும்.

## 452

மனது குளிர்ந்திருந்தால் உலகத்தில் எதிரி ஒருவரும் இல்லை. இந்தத் 'தான்' என்கிற கர்வத்தை விடு. எல்லோரும் அன்பு கொள்வார்கள்.

## 453

ஞானத்தின் யானையின் மேல் ஏறி 'தியானம்' என்னும் ஆசனம் போட்டு அமர்ந்துகொள். நாய் போன்றது இந்த உலகம். நன்றாய்க் குரைக்கட்டும். வேறு ஒன்றும் செய்ய முடியாது.

## 454

வாத்தியம் (இசைக்கருவி) தன் பாட்டில் நாதம் எழுப்பட்டும். 'கலி'யாகிற வான் கோழியைத் தூண்டாதே. நீ ஏன் பிறரைப் பற்றிச் சங்கடப்படுகிறாய்? உன்னை நீ சீர்திருத்திக்கொள். (நல்ல குணங்களைப் பெருக்கிக்கொள். கெட்ட குணங்களுக்கு இடம் தராதே.)

## 455

ஒரு வசவு வருகிறது. அதைத் திருப்பினால் பலவாகிவிடும். கபீர் சொல்லுகிறார்: "அதைத் திருப்பாதே. ஒன்று ஒன்றாகவே இருந்துவிடும். (எதிராளி திட்டினால் நீ திட்டிப் பெருக்காதே.)"

## 456

வசவினால்தான் (தப்பான சொற்களினால்) கலகம், தொல்லை, சொவு எல்லாம் ஏற்படுகின்றன. ஒதுக்கிச் செல்கிறவன் சாது. பொருது சாகிறவன் கீழோன்.

## 457

சாப்பிடுகின்ற உணவு, குடிக்கின்ற நீர் எப்படியோ அவற்றை ஒட்டித்தான் மனம் (பெறும் குணம்) இருக்கும். குடிக்கிற நீரைப் போல்தான் சொல்லும் அமையும்.

## 458

இரப்பது சாவுக்குஒத்தது. ஒருவரும் பிச்சை கேட்காதீர்க ள். இரப்பதைவிட இறப்பது மேல் : இது சற்குரு தந்த பாடம்.

## 459

வயிற்றுக்கு வேண்டிய உணவு, உடலுக்கு வேண்டிய கிழி-துண்டு. இவற்றைவிட அதிகம் சேர்க்காதவன் பெயர் தான் பக்கிரி (சாது.)

## 460

சொல்கின்றவனைச் சொல்லவிடு. ஆனால் நீ மட்டும் குருவினுடைய சொல்லைக் கேட்டுக்கொள். (சாகடனுக்கும்) போக்கிரிக்கும் நாய்க்கும்பதில் சொல்லிக் கொண்டிராதே.

[சாகடன் - சக்தி பூஜை செய்கிறவன் சாகடன் என்று சொல்லப்பட்டான். அந்தச் சொல்லை எதிரிகள், வேண்டாமையைக் காட்ட போக்கிரி என்ற கருத்தில் ஆளத் தொடங்கி விட்டனர்.]

## 461

சைகையில் புரிந்துகொள்ளக் கூடியவனிடம் வார்த்தை பேசு. சைகையையே புரிந்துகொள்ள இயலாதவனிடம் ஒன்றும் சொல்லாதே.

## 462

தண்ணீரில் போகிறவனைப் போகவிடாதே. கையைப் பிடித்துக் கரைக்கு இழு. சொன்னதைக் கேட்காத போதிலும் மேலும் இரண்டு முறை சொல்லிப் பார்.

## 463

நீயப் போக்கையெல்லாம் தொலைத்துப் பிறவியை நல்லதாக ஆக்கிக் கொள். காக்கையின் போக்கைத் தொலைத்து அன்னத்தின் போக்கை ஏற்றுக்கொள்.

## 464

இன்சொற்கள் மருந்து. வன்சொற்கள் அம்பு; வன்சொற்கள் காதுத் துளைகள் வழி உள் சென்று உடல் பூராவும் துளைத்து விடும்.

## 465

பேசியவுடனேயே சாது (அல்லது) திருடனுடைய நிலையைத் தெரிந்துகொள்ளலாம். உன் செய்கைகள் எல்லாம் வாய்வழியே வெளியேறியே தீரும்.

## 466

படித்துப் படித்துக் கருங்கல்லானோம்; எழுதி எழுதிச் செங்கல்லானோமே! கபீர் சொல்கிறார்: "அன்பின் ஒரு துளிகூட உள்ளத்தில் படவில்லையே?"

## 467

உள்ளத்தில் நிறுத்தி 'நாம பஜனை' செய்! இதுதான் நல்லது. எதற்குப் படித்து உளுத்துச் சாகிறாய், கோடிக்கணக்கான ஞான நூல்களை?

## 468

அப்பொழுது, செய்யும் பொழுது, ஏன் செய்தாய்? செய்து விட்டு இப்பொழுது ஏன் கழிவிரக்கம் கொள்கிறாய்? கருக மரத்திற்கு விதை விதைத்துவிட்டு மாம்பழம் எங்கிருந்து சாப்பிடுவது?

## 469

கபீர் சொல்கிறார்: "உலகம் கோவிலுக்குத் தலைகுனியச் (கும்பிடச்) செல்கிறது. உன் இதயத்தில் ஹரி வசிக்கிறார். நீ அந்த ஒளியைப் பிடித்துக் கொள்.

(கோவிலுக்குப் போகவேண்டும் என்பதில்லை.)

## 470

மனம் (வட) மதுரை. உள்ளம் துவாரகை. உடலைக் காசியென அறி. பத்துத் துவாரங்கள் கொண்ட இவ்வுடலில் சோதியை அறிந்து தெளி.

## 471

பூசை, சேவை, நியமம், விரதம் எல்லாம் மரப்பாச்சி விளையாட்டுக்கள். அன்பன் தொடும்வரையில் இவை சந்தேகங் களின் தொகுதிகளே!

## 472

இரண்டு மனிதர்கள் தீர்த்த யாத்திரை சென்றார்கள்: ஒன்று தெளிவற்று அலைவுகொண்ட அறிவு; (மற்றொன்று) திருட்டு மனம். ஒன்றும் ஒரு பாபத்தையும் இறக்கிவிடவில்லை. மனத்தின் மேல் பத்து இந்திரியங்களின் ஆட்சி ஏற்பட்டு விடுகிறது.

(கபீர் எழுதியிருக்கிற வரிக்கு 'இன்னம் பத்து மணு (பாபம்) ஏற்பட்டது' என்றும் பொருள் கொள்ளலாம்.)

## 473

முழுகித் துவைப்பதால் என்ன ஆகும்? மனத்தின் அழுக்குப் போகவில்லையே. மீன் எப்பொழுதும் தண்ணீரில் இருக்கிறது. கழுவியும் நாற்றம் போவதில்லை.

## 474

நூல்கள் படித்துப் படித்து உலகம் அழிகின்றது. ஒருவரும் பண்டிதரானதில்லை. அன்பின் ஓர் எழுத்தைப் படித்தவன் பண்டி தனாகி விடுகிறான்.

## 475

படித்தோம், ஆய்ந்தோம்; கற்றோம், கேட்டோம். ஆனால் ஐயமாகிற முள் நீங்கவில்லை. கபீர் சொல்கிறார்: "யாரிடம் சொல்வது? இதுதான் வருத்தத்துக்கு வேர்."

## 476

பண்டிதர், தீவட்டி தாங்கி இருவரும் ஒளி பெறுவதில்லை. மற்றவருக்கு ஒளி நிலவு தருகிறார்கள். தாங்கள் மட்டும் இருட்டில் (இருந்து விடுகிறார்கள்.)

## 477

மலையின் மேல் ஊர்; பருத்த (வலிவுள்ள) கை: (இவை கொண்ட) அப்படிப்பட்ட தலைவனுக்குச் சேவை செய். அவன் நிழலில் நீ முன்னேறலாம்.

## 478

ஏ கபீர், நீ ஒதுங்கி இரு. வழி (உணவு) முட்டையும் இல்லை, வாகனமும் இல்லை, (உன்னிடம்.) வலிவு குன்றிவிடும். கால்கள் களைத்துவிடும். உயிரும் பிறர்க்கைப் பட்டுவிடும்.

## 479

'தான்' என்கிற முனைப்பை விடு. ஹரியை வழிபடு. நகம், தலை இவற்றை விகாரம் செய்வதை விடு. எல்லா உயிர்களிடமும் காழ்ப்பு அற்றவனாக இரு. இதுதான் சாதுத் தன்மையின் சாரம்.

## 480

பாவம்! இந்த எளிய ஓர் உயிர் எவ்வளவு கட்டுக்களால் கட்டப்பட்டிருக்கிறது. அன்பன் (இறைவன்) அறுக்காது போனால் எந்தப் பலத்தால் அவன் தன்னை விடுவித்துக் கொள்ள முடியும்?

## 481

சொன்னால் புரிந்துகொள்ளவில்லை. (மனம்) பிறர் கையில் விற்கப்பட்டிருக்கிறது (அடிமை செய்கிறது). நான் என்னிடம் இழுக்கிறேன். அது எமனூர் செல்கிறது.

## 482

அதுதான் அப்படியாகிவிட்டது. நீ அறிவிலியாகாதே. நீ குணவான். அது குணமற்றது. அதனுடன் ஒன்றி உளறாதே. (மனத்துடன் போகாதே.)

## 483

நிறைந்த தலைவனுக்குச் சேவை செய். (நீயும்) நிறைந்தவனாவாய். சிறியவனிடம் (ஆழமற்றவனிடம்) அன்பு செலுத்தினால் உள்ளத்தையும் இழப்பாய்.

## 484

முதலில் கெடுதலைச் செய்து சேர்த்து நச்சுக்கோட்டை கட்டினேன். ஹரியினுடைய அருள் திரைக்குப்பின் வந்ததும் கோடிக்கணக்கான கர்மங்கள் ஒரே நிமிஷத்தில் அழிந்துவிட்டன.

## காமம் (சிற்றின்பப் பிரியம்) அவா

### 485

காமம் உள்ளவன் நிலை தீபத்தைப் போன்றவன். காமம் வாழ்க்கை எண்ணெயை உறிஞ்சி விடுகிறது. கபீர் சொல்கிறார்: "சாது மனிதர்கள் வைரம் போன்றவர்கள். தானாகவே எப்பொழுதும் ஒளி வந்துகொண்டே இருக்கிறது."

### 486

அவா, சினம், (வெகுளி) பேராவல் இவை கொண்டவர்களால் பக்தி செய்யமுடியாது. பக்தி செய்கின்ற சூரன் சாதி வருணம் குலம் இவற்றைவிட்டுச் செய்யவேண்டும்.

### 487

காமிகள் பொறியின்பங்களை நுகர்ந்து பக்தியைக் கெடுக்கிறார்கள். கையிலிருந்து வைரத்தை இழக்கிறார்கள். வாழ்க்கையை வீணில் தொலைத்து விடுகிறார்கள்.

(வைரம்—மனம் புத்தி ஆற்றல் ஆகியன.)

### 488

காமம் இருக்கும் இடத்தில் நாமம் (ஈசுவரன் பெயரில் அன்பு) இராது. நாமம் இருக்கும் இடத்தில் காமம் இராது. சூரியன், இரவு இரண்டும் ஒரு பொழுதும் ஓர் இடத்திலும் சேரமாட்டா.

### 489

காமம், குரோதம், மதம், உலோபம் இவற்றிற்கெல்லாம் எது வரை உடலில் சுரங்கம் இருக்கின்றனவோ, அதுவரை, அசடன் என்ன, பண்டிதன் என்ன இருவரும் சமமானவர்களே.

### 490

அவா, அவா என்று எல்லோரும் சொல்கிறார்கள். ஒருவரும் அதை அறிந்தவர்கள் அல்ல. மனத்தின் கற்பனை எதுவரையிலோ அதுவரையில் உள்ளதையே அவா என்பர்.

## குரோதம்

### 491

ஒரு குரோதத்தின் பின்னால் கோடி நல்லவை சேர்ந்து இருக்கட்டுமே! (இருந்தாலும்) அகங்காரம் வந்தவுடன் செய்தது, செய்யப்பட்டது எல்லாம் ஒழிந்தன!

### 492

பத்துத் திசைகளிருந்தும் வெகுளி நெருப்பு எழுந்து வளைக்கிறது. சாதுவின் அருகாமையே குளிர்ந்திருக்கும்; அங்கே ஓடிப் பிழை.

### 493

இழிமதியாகிற நாண் ஏறியிருக்கிறது. கொடிய சொற்கள் அம்புகள்; பூட்டிப் பூட்டிக் காதுக்குள் எய்கிறார்கள் (கெட்ட புத்தியுள்ளவர்கள்). அவை உடல் முழுவதையும் துளைக்கின்றன.

### 494

கொடிய சொற்கள், எல்லாவற்றையும் விடக் கெட்டவை. உடலைப் பொசுக்கிச் சாம்பலாக்கிவிடும். சாதுவின் சொற்கள் நீர் போன்றது. அமுத தாரையைப் பொழியும்.

### 495

மார்பில் ஏறிய (தீய) சொற்களாகிற சிலாம்பின் வலி உள்ளத்தில் புதைந்து நிற்கிறது. வெளியேற்றினாலும் வெளியேறுவதில்லை. அதன் (சுளுக்கி) முனை உள்ளே பிடித்துக் கொள்கிறது.

### 496

இனிய சொற்கள் மருந்து; சுடு சொற்கள் அம்புகள். சுடு சொற்கள் காதுத் துளைகள் வழியே சென்று பரவி உடல் முழுவதையும் குத்துகின்றன.

## பற்றுணர்வு (உலோபம்)

### 497

மனம் எப்பொழுது உலோபத்துடன் இணைகிறதோ அப்பொழுது அது பொறியின்பப் பொருள்களிடம் செல்கின்றது. கபீர் நன்றாய்ச் சிந்தித்துத் தெளிந்து சொல்கிறார்: "பிறகு பக்தி என்கிற பெரும் பொருள் எப்படிக் கிடைக்கும்?"

### 498

கபீர் சொல்கிறார்: "ஆசை பெரிய பாவி. (அவளிடம் அன்பு கூட்டாதே.) அடி அடியாகப் பின்னுக்குச் செல்வாய். பெரிய கேடு வந்து சேரும்.

### 499

கபீர் சொல்கிறார்: "மூளை (மண்டை ஓடு) தலைகீழானது. ஒரு நாளும் நிரம்பாது. மூன்று உலகச் சொத்துக்களும் எப்பொழுது வீட்டுக்கு வரும்? (என்று எண்ணும் அது எப்பொழுது திருப்தியடையும்?)

### 500

நீர்மை போயிற்று, பெருமை போயிற்று, கண்ணின் அன்பு போயிற்று. 'கொஞ்சம் கொடு' என்று கேட்டவுடனேயே இந்த மூன்றும் போய்விட்டன.

### 501

என்ன முயற்சி செய்து வேண்டுமானாலும் சேர்! எல்லாப் பயன்களும் அழிபவைதாம். கபீர் சொல்கிறார்: "கருமியின் பணத்தைக் கடைசியில் திருடன்தான் எடுத்துச் செல்வான்."

## மோகம்

### 502

மோகச் சுளுக்கு எல்லோரையும் மாட்டிவிடுகிறது. ஒருவரும் தப்ப முடிகிறதில்லை. ஏதோ சில சாதுக்கள் மாற்றுத் தெரிந்தவர்கள்; தத்துவம் தெரிந்தவர்கள் தேர்ந்து அறிகிறார்கள்.

## 503

மோகத்தில் ஆழ்ந்து இருக்கிறது எல்லா உலகமும், கன்னி (குமரி)யாகவே இருக்கிறாள். ஆன்ம ஒளி ஒருவரும் பெறுகிற தில்லை. மீண்டும் மீண்டும் 'அவதாரம்' (பிறப்பு) எடுக்கிறார் கள்.

[கன்னி: ஆன்ம-பரமாத்ம மணம் நடக்கிறதில்லை.]

## 504

எதுவரை உலகங்கள் பரவி இருக்கின்றனவோ அந்த எல்லை வரை எல்லோருக்கும் 'மான்மருள், இருக்கத்தான் செய்கிறது. தேவலோகம், மனிதர் உலகம், நாகலோகம், பாதாள லோகம் எங்கும் இருடிகள்; முனிவர்கள்கூட எதிர்பார்த்துத்தான் (ஏமாந்து) நிற்கிறார்கள்.

(மான்மருள் = கானல் நீர்)

## 505

மோகம் என்கிற நீரோட்டத்தில் ஆழ்ந்த சிந்தனையாளர் கள் கூட அடித்துப் போகப்பட்டார்கள். 'சுரதி' ஆன்ம ஒளி யுறக்கம் நுண்ணிய மீன்போல நீரை (ஓட்டத்தை) எதிர்த்து ஏறுகிறது. (ஆன்ம வித்தை பயின்று பெற்ற ஒளிப் பயன் உலகை எதிர்த்து நிற்க வல்லது.)

## 506

அமுதத்தின் மூட்டையைத் தலையில் இருந்து இறக்கி வைத்தேன். யாரிடம் நான் (அந்த) 'ஒருவனே' என்று சொன் னாலும் அவன் என்னை இரண்டு நாலு சொல்கிறான் (திட்டுகிறான்). (நான் பிரம்மம் என்றால் கேட்கிறவர்கள் திட்டு கிறார்கள்).

## 507

எதைக் குறித்து முனிவர்கள் தவம் செய்கிறார்களோ, வேதத்தைப் புகழ் பாடிப் படிக்கிறார்களோ அந்தத் தேவனின் உபதேசத்தையே ஒருவரும் நம்புகிறதில்லை!

## 508

மூன்று உலகங்களிலும் மயக்கம் சூழ்ந்திருக்கிறது. மயக்கம் எல்லா இடத்திலும் வாசம் புரிகிறது. கபீர் கூவிச் சொல்கிறார்: 'எல்லோரும் பிரமையின் ஊரில்தான் வசிக்கிறார்கள்.'

## 509

பிள்ளைப் பருவம், இளமை, கிழத்தனம் எல்லாம் கழிந்து விட்டது. நான்காவது பருவம் வந்துவிட்டது. எலியைப் பூனை நோக்கியிருப்பதுபோல் எமன் நோக்கியிருக்கிறான்.

## 510

கண்ணாடியாலான குகையில் நாய் ஓடி உட்கார்ந்தது. தன்னுடைய உருவைப் பார்த்துக் குரைத்துக் குரைத்துச் சாகிறது.

## 511

பாவம், மனிதன் என்ன செய்வான்? சொன்னால் கதவு திறக்கிறதில்லை. வாசல் முற்றத்தில் அமர்ந்த நாய் கோலத்தின் மஞ்சள் கலந்த சோற்றைச் சாப்பிடுகிறது. (உள்ளே அதை விடாத காரணத்தால்.)

### அகங்காரம்

## 512

மாயைவிட்டு என்ன ஆயிற்று? பெருமையை விடவில்லையே! பெருமை, பெரிய முனிவர் கழுத்தில்கூட இருக்கிறது (கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறது). தற்பெருமை எல்லோரையும் தின்றுவிடும்.

## 513

பெருமையும் (அகங்காரமும்) 'பெரியவன்' என்ற எண்ணமும் நாய்! அதை அறிந்து சாதுக்கள் விரட்டி விடுகிறார்கள். பாண்டவர்கள் வேள்வி முடிவடைந்தது. நாய் வந்து அமர்ந்து கொண்டது.

## 514

பெரியவன் என்ற தற்பெருமை நாய்க் குணம் உடையது. நட்புக் கொண்டால் முகத்தை நக்கும். பகை பாராட்டினாலும் உடலுக்குக் கேடுதல் ஏற்படும்.

## 515

பெரியவனானால் என்ன ஆகிவிட்டது, ஈச்ச மரத்தைப் போல்? வழிப்போக்கனுக்கும் நிழல் கிடையாது; பழம் பழுத்தாலும் (பறிக்க) எட்டாது.

## 516

கபீர் சொல்கிறார்: "உன் வாழ்க்கையிலிருந்து இந்த இரண்டு பொருள்களையும் கழுவி விடு: பெரிய பெயர், அதனால் ஏற்படும் பெருமை எண்ணம். இந்த இரண்டின் காரணமாயும் (அக்ஷயமான ஆதாரத்தை) அழியாத அறிவை இழந்துவிடாதே.

## 517

செல்வத்தை எல்லோரும் விரும்பி வழிபடுகிறார்கள். செல்வத்தின் தலைவனை ஒருவரும் வழிபடுவதில்லை. கபீர் சொல்கிறார்: "கடவுளை வழிபடு. நலமெல்லாம் அடிமைப் பெண்ணாகிவிடும்."

## 518

தான் என்ற முனைப்பு உள்ள இடத்தில் ஆபத்து உண்டு. சந்தேகம் உள்ள இடத்தில் துயர் உண்டு, கபீர் சொல்கிறார்: "இந்த நான்கு நெடு வியாதிகளும் எப்படித் தீருமோ?"

## 519

மாயையை ஒழித்து என்ன ஆயிற்று? பெருமை எண்ணத்தை விட முடியவில்லையே. மாமுனிவர்கூடப் பெருமைக்கு ஏமாந் தார்கள். மாயை எல்லோரையும் உண்டுவிட்டது.

# வஞ்சனை (கபடம்)

## 520

கபீர்! எங்கே பொய்யான அன்பு காட்டப்படுகிறதோ அங்கே செல்லாதே. மாதுளையின் மொட்டை அறிந்துகொள். உடல் சிவப்பாயிருக்க மனம் வெண்மையாக இருக்கிறது.

## 521

உள்ளத்தில் கரவு வைத்துக்கொண்டு எல்லோரிடமும் சேர்வான். மனத்தில் பொல்லாத கொடுமை இருக்கும். உலகில் (துர்ஜனன்) கெட்டவன் ஒன்று; ரம்பம் ஒன்று. இரண்டும் முன்னும் அறுக்கும்; பின்னும் அறுக்கும்.

## 522

அன்பின் காரணமாக யார் சேர வருகிறானோ அவனை ஓடிச் சென்று அணை. உள்ளொன்று (ஒளித்து) வைத்துக் கொண்டு சேருபவனிடம் சேர்வது ஆபத்து.

### ஆசை (நம்பிக்கையுடன் கூடிய விருப்பம்)

## 523

உலகம் அழிகிறது. நம்பிக்கை அழிவதில்லை. மனம் (ஆசை) கொண்டுள்ள மக்கள் சாகின்றனர். பணம் சேர்க்கின்றவனும் சாகின்றான். பணத்தைச் செலவழிப்பவன்தான் தப்புகிறான்.

## 524

ஆசனம் போட்டு அமர்ந்ததனால் என்ன ஆயிற்று? மனத்தில் ஆசை போகவில்லையே! வாணியனுடைய எருதுக்கு ஐம்பது மைல்கள் சுற்றிச் சுற்றிவருவதால் வீடே தொலைவு அதிகமாகி விடுகிறது. (வீட்டுக்குச் செல்ல ஐம்பது மைல்களா?)

## 525

கடவுளின் பெயரில் விருப்பம் கொள்வதுதான் ஒரு நல்ல விருப்பம்; மற்ற ஆசை எல்லாம் வீண்தான். தண்ணீரில் வீடு கட்டினாலும் தாகம் ஏற்பட்டே சாவான்.

## 526

கபீர் சொல்லுகிறார்: "உலகத்தின் ஆசையைவிட்ட யோகியே உலகத்திற்கெல்லாம் குருவாவான்; உலகத்துக்கெல் லாம் குருவே ஆனாலும் உலகத்தின்மேல் விருப்பம் கொண்டால் அவன் அடிமையே."

527

நம்பிக்கையை விறகாக்கி விருப்பத்தைச் சாம்பலாக்குவேன். அதை உடலில் தடவி யோகியாகிச் சுற்றுவேன். அப்படித்தான் (அப்பொழுது தான்) நூல் (தொடர்பு) ஏற்படும்.

## திருஷ்ணை (தீவிர ஆவல்-தாகம்)

528

மேலே உபயோகப் படக்கூடிய பொருளைச் சேர். ஒருவரை யும் தலையில் மூட்டை தூக்கிக் (எடுத்துக்)கொண்டு போன தாகப் பார்க்கவில்லை. (சாகும்பொழுது மற்றப் பொருள்களை எடுத்துச் செல்ல முடியாது.)

529

ஆசையோ, பிசாசோ! அல்லது வாழ்க்கையின் எமன் தானோ! (மனிதன்) பகலும் இரவும் 'இன்னும் இன்னும், (கொண்டு வா) என்று விரும்புகிறான். வாழ்க்கையே தொல்லை யாகிவிடுகிறது.

## நித்திரை (தூக்கம்)

530

கபீர் சொல்கிறார் : "தூங்கி என்ன செய்கிறாய்? எழுந்து பகவானை வழிபாடு செய்யாமல் எமன் பிடித்துக்கொண்டு போகும்போது உறை (உடல்) இங்கே கிடக்கப் போகிறது (அந்த உடலைத் தூங்கி எதற்காகக் காப்பாற்றுகிறாய்)?"

531

கபீர் சொல்கிறார் : "தூங்கி என்ன செய்கிறாய்? விழித் திருக்கின்ற பழக்கத்தைச் செய்துகொள். இந்த மூச்சுக்கள் வைரமும் சிவப்பும் போன்றவை. எண்ணி எண்ணிக் குருவிடம் ஒப்புவி."

532

தூக்கம் சாவின் அடையாளம்; கபீர்! விழி, எழுந்திரு! வேறு ரசாயனத்தை விட்டு விட்டுப் பெயர் ரசாயனத்தைத் தயார் செய்.

## 533

அன்பா, அன்பா என்று கூவு. தூங்க (வேண்டும் என்று) பிடிவாதம் பிடிக்காதே. இரவும் பகலும் கூவினால் எப்பொழு தாவது அழைப்புக் கேட்டுத்தானே ஆகும்?

## 534

தூங்குகிற சாதுவை எழுப்பு. பெயர் பாடிக்கொண் டிருக்கட்டும். இந்த (பின் வரும்) மூவர் தூங்குவதுதான் நல்லது: சாகடன் (சக்தி உபாசகன், பொல்லாதவன்), சிங்கம், பாம்பு.

## 535

விழிப்பில் தூக்கம் கொள்ளட்டும். தூக்கத்தில் (ஈசுவர அன்புத்) தீ பிடிக்கட்டும். ஆன்மாவின் ஒளி இருந்து கொண்டே யிருக்கட்டும். அத்தக் கம்பி (ஒலித் தொடர்) ஒடிய வேண்டாம்.

### நிந்தனை

## 536

நிந்தனை செய்பவனை அருகில் வைத்துக்கொள். குடிசை முற்றம் எல்லாம் போட்டுக்கொடு. (ஏன் எனில்) தண்ணீர், சோப்பு, இல்லாமலேயே அவன் (நம்) தன்மையைத் தூய்மை செய்துவிடுவான்.

## 537

கால் அடியில் கிடக்கும் தூசியைக் கூட ஒருபொழுதும் நிந்தனை செய்யாதே. எப்பொழுதாவது (அது) பறந்து (வந்து) கண்ணில் பட்டால் வலி அதிகமாகி விடும் (தூசி கூடத் தீங்கு விளைவிக்க முடியும்).

## 538

சம்புத் தீவுக்கு முதுகைக் காட்டிவிட்டு ஏழு சமுத்திரத்திலும் சுற்றிப் பார்த்தேன். பிறர் நிந்தை செய்யாதவன் மிகவும் குறைவு (அபூர்வம்) என்று கண்டேன். (நம் நாட்டில் மட்டுமின்றி எங்கும் பார்த்தேன்).

### 539

பிறர் குற்றத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே செல்கின்றனர். தன்னுடைய குற்றங்களை நினைவுபடுத்திக் கொள்கிறதில்லை. அவற்றிற்கு முதலும் இல்லை, முடிவும் இல்லை.

### 540

நிந்தை செய்கிறவன் ஒருவனுடன் சேராதே. பாவிகள் ஆயிரம் பேருடன் சேரலாம். நிந்தை செய்கிற ஒருவன் தலையில் கோடிக்கணக்கான பாவங்களின் சுமை இருக்கிறது. (விலகிவிடு)

## மாயை

### 541

மாயையும் நிழலும் ஒன்றே. அரிதாகத்தான் ஒருவன் இதை அறிகிறான். அது பக்தர்களின் பின்னால் திரியும்; முன்னால் வந்தால் ஓடிவிடும்.

### 542

மாயை வஞ்சனைக்காரி. எல்லா நாட்டிலும் (இடத்திலும்) வஞ்சனை புரிந்துகொண்டு திரிகிறாள். எந்த வஞ்சனைக்காரன் சாது) இந்த வஞ்சனைக்காரியை வஞ்சித்தானோ அந்த வஞ்சனைக்காரனுடைய கட்டளை (எங்கும் செல்லும்).

### 543

கபீர் சொல்கிறார்: "மாயை இரண்டு பழங்கள் தருகிற மரம். அவைகளை இழந்தாலும் அழித்தாலும் முக்தி கிடைக்கும். சேர்த்துவைத்தால் நரக வாயில்தான் (இரண்டு=கனகம், காமினி=பொன், பெண்.)

### 544

மாயை இராமனுடையவள். உலகம் எல்லாம் அதன் வியாபாரிகள். யாருக்குத் திருவுளச் சீட்டு விழுந்ததோ அவன் தான் அதைச் செலவழிப்பான்.

(பகவானை அடையவிடாமல் நம்மைப் பிடித்திருக்கும் மற்றவை எல்லாம் மாயை. முக்கியமாகப் பெண்ணாசையும் பொருளாசையுமாம். அவற்றைஅழித்து விடுதல் தான் ஈசுவரனை அடையத் தகுதிபெறும் சரியான—இயற்கையான முறை. ராமன் அருள் பெற்றவன்தான் அவ்விதம் செய்வான். மற்றவர் அதைப் பெருக்கிக்கொண்டு திரிவர்).

## 545

மாயையைச் சேர்த்துக் குவித்துக்கொண்டு திரிகின்றனர் (மக்கள்). ஆயிரம் ஆண்டுகள் எல்லாம் செய்து ஒரே முகூர்த்தத்தில் சாகும் அந்த நாளை அறியார்.

## 546

கபீர் சொல்கிறார்: "மாயை மோகினி. நல்லவர்கள் உயிரைக் கூட வசப் படுத்திவிடும். ஓடினாலும் விடாது. நிரப்பி நிரப்பி (குறையாமல் மேலே மேலே) அம்பை வீசும்.

## 547

பொன் பெண் இவற்றில் ஈடுபட்டு மாயையின் நெருப்பு எரிகிறது. கபீர் சொல்கிறார்: "பஞ்சில் நெருப்புப் பட்டால் தப்புவது எப்படி?"

## 548

அரியுடன் சேரவேண்டும். இந்த ஆசை மிகவும் பருத்த (சிரமமான) ஆசை என்று எனக்குத் தெரியும். ஹரி, மாயை என்ற பிசாசை நடுவிலே விட்டு விடுகிறார்.

## 549

ஞானச் சூறாவளி வந்தது. பிரமையின் சுவர் தகர்ந்தது. மாயையின் தட்டி பறந்து விட்டது. (ஈசுவர) நாமத்தில் அன்பு ஏற்பட்டது.

## 550

இனிமையை எல்லோரும் உண்கின்றார்கள். (பலன்:) விஷமாக மாறி உடலில் பரவி விடுகிறது. எல்லா வியாதிகளையும் தீர்க்கும். வேம்பை ஒருவரும் சாப்பிடுகிறதில்லை.

## 551

மாயை ஒரு (விசித்திர) மரம். (புறப் பொருள் இன்பங்கள் அதன்) மூவகைக் (குணமுள்ள) கிளைகள். (அந்தக் குணங்களாவன:) (1) கனவில்கூடக் குளுமை கிடைப்பதில்லை. (2) பழமும் ருசியற்றது. (3) உடலுக்கும் எரிச்சல் ஏற்படும்.

## 552

யாருக்கு, சுவாமியே நிறம் பெருமை தந்தாரே அவன் நிறம் மாறிக் கறுக்கிறதில்லை. நாளுக்கு நாள் அவன் சொற்கள் சிறக்கின்றன. ஒன்றே கால் பங்கு நிறம் ஏறுகின்றது (பெருமை அதிகரிக்கிறது.)

## 553

மாயை விளக்கு, மனிதன் விட்டிற்பூச்சி. மயங்கி மயங்கி அதிலேயே விழுகிறான். ஏதோ (ஓரிருவர் தாம்) குரு தந்த ஞானத்தின் துணைகொண்டு சாது அல்லது அடியார் தான் கரையேறுகிறார்.

# பொன்னும் பெண்ணும்
## (கனகமும் காமினியும்)

## 554

செல்கின்றேன், செல்வேன் என்று எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் சென்றடைந்தவர் மிகச் சிலரே. ஒன்று பொன், மற்றொன்று பெண், இரண்டும் ஏற முடியாத கரைகள் (துறைகள்). இவ்விரண்டின் காரணமாகக் கரை ஏறுவதேயில்லை ஒருவரும்.

## 555

பெண்ணின் நிழல் பட்டாலே பாம்பு குருடாகிறது. கபீர் சொல்கிறார்: "பெண்ணுடன் கூடவே இருக்கிறார்களே அவர்கள் கதி என்னவாகும்?"

## 556

பிறர் மனைவி கூர்மையான கத்தி. ஒருவரும் மடியில் எடுத்துக்கொள்ளாதீர்கள். இராவணன் பத்துத் தலைகளும் பிறமங்கையின் சேர்க்கை விரும்பியல்லவோ அழிந்தன.

## 557

பிறர் மனைவி கூர்மையான கத்தி. (தொட்டுத்) தப்பியவர் அருமை, முழுவதும் தங்கத்தாலாகியிருந்தாலும்கூட அதன் வயிற்றில் புரளாதே. (கத்தியின் வயிறு=வாய்=கூர்மை)

## 558

விளக்கின் அழகைப் பார்த்துவிட்டு விட்டில் (அதில்) விழுந்து எரிந்து சாகிறது. விஷயத்தின் (பொறியின்பத்தின்) அலைகள் அதிகமாக, எரியும்போது கூட அவயவங்களைத் திருப்புகிற தில்லை. (அவ்வளவு தூரம் தங்களை மறந்து அழிகிறார்கள்)

## 559

பாம்பு (க்கடி) தேள் (கடி) இவற்றிற்கு மந்திரம் உண்டு. விஷத்தை இறக்கிவிடலாம். பெண்ணின் உறவு தொந்தரவு. நெஞ்சைக் கடித்துத் தின்றுவிடும்.

## 560

பொன்னையும் பெண்ணையும் பார்த்து நீ உன் நன்னிறத்தை (நல்ல தன்மையை) மறந்துவிடாதே. அவை கிடைப்பது, தொலைவது இரண்டும் தொல்லை தருவதுதான். பாம்பு சட்டை உரித்து விடுகிறது. (அதுபோல் நீயும் அவற்றை ஒதுக்கிவிடு.)

# லாகிரிப் பொருள்கள்

## (மயக்கப் பொருள்கள்)

## 561

லாகிரியில் பல வகைகள் உண்டு. அவற்றை ஒருவரும் அறிய மாட்டார். உடல் மதம், மனமதம், சாதி மதம், மாயா மதம் எல்லாமே நெருப்புத்தான்.

## 562

வித்தை மதம், குண மதம், ராஜ மதம், உன்மத்தம் அவ்வளவு வெறிகளையும் நீக்கு. அப்பொழுதுதான் அநாஹதம் கிட்டும். (அநாகதம்= நாதரூபமான பரம்பொருள்; யோக சாதனையின் வெற்றி)

## 563

கபீர் பெயரில் பித்துக் கொண்டவர்; மதங்களில் வெறி கொண்டவர் அல்லர். பெயரின் கோப்பைகளைக் குடித்தவனுக்கு வெறி பிடிக்காது.

## சீலம் (நல்லொழுக்கம்)

## 564

சீலமும் பொறுமையும் பிறந்தால் பார்க்காததைப் பார்க்கும் பார்வை ஏற்படும். லக்ஷம் கதை சொன்னாலும், சீலம் இல்லாமல் நற்கதியை ஒருவரும் அடைய முடியாது.

## 565

சீலமுள்ளவன் எல்லாவற்றையும்விடப் பெரியவன்; எல்லா ரத்தினங்களுக்கும் சுரங்கம். மூன்று உலகங்களின் சொத்துக்களும் சீலத்தில்தான் வந்து தங்கியிருக்கின்றன.

## 566

ஞானி, தியானம் செய்பவன், புலன்களை அடக்கியவன் வள்ளல், சூரர் இவர்கள் பற்பலர் (கிடைப்பர்.) வேள்வித் தீ வளர்ப்பவர்; தவம் செய்பவர் அநேகம், ஆனால் சீலமுடையவன் எங்காவது யாராவது ஒருவனேதான் கிடைப்பான்.

## 567

இன்பத்தின் ஆழ்கடல் சீலம். ஒருவரும் அதன் ஆழத்தை அறிய முடியாது. (ஈசுவரன் பெயர்) ஒலி இல்லாமல் சாதுவாக முடியாது. பொருள் இல்லாமல் அரசன் ஆகமுடியாது. (அதைப்போலச் சீலமில்லாமல் இன்பம் உள்ளவனாக முடியாது.)

## 568

புண்பட்டவன் மேலும் புண்கொண்டு போலித் தியாகி ஆகி விடுகிறான். நல்ல, நிரம்பிய இளம் வயதில் எவன் சால்பாளனா கிறானோ அவன்தான் உண்மையில் சால்பாளன்.

## பொறையுடைமை

### 569

பெரியவர்களிடம் சிறியவர்கள் தரும் தொல்லையைப் பொறுத்துக்கொள்ளும் குணம் வேண்டும். பிருகு முனிவர் திருமாலை உதைத்தாரே, விஷ்ணுவுக்கு என்ன குறைந்து விட்டது?

### 570

தயை இருக்கும் இடத்தில் அறம் இருக்கிறது. பேராசை இருக்கும் இடத்தில் பாவம் இருக்கிறது. வெகுளி இருக்கும் இடத்தில் எமன் இருக்கிறான். பொறுமை இருக்கும் இடத்தில்தானே (ஈசுவரனே) இருக்கிறான்.

### 571

இடி போன்றன தீயோர் சொற்கள்; சாதுக்கள் அவற்றைத் தள்ளி விடுவர். கடலில் இடி விழுந்தால் எதையும் எரித்தா விட முடியும்?

### 572

தோண்டித் தொளைத்தலைப் பூமிதான் பொறுத்துக் கொள்ள முடியும். வெட்டுதலையும் இடித்தலையும் காடுகள்தான் சகித்துக்கொள்ள முடியும். தீய (கடுஞ்) சொற்களைச் சாதுக்கள் தான் சகித்துக்கொள்ள முடியும். மற்றவரால் பொறுத்துக் கொள்ள முடியாது.

## உதாரத்தன்மை (ஈகை)

### 573

கபீர் சொல்கிறார் : "குரு கிடைக்க நாம் இரண்டே வழிகள் தான் கேட்டிருக்கிறோம். ஒன்று பகவான் பெயரைச் சொல்லு. அல்லது உன் கையை உயர்த்தியே வைத்திரு. (ஈகை செய்)

### 574

வசந்த ருது (இளவேனில்) கை நீட்டிக் கேட்பவனானான். மரங்களும் இலையை மகிழ்ந்து தந்தன. அதனால் புதுக் கிளைகள் வெடித்து எழுந்தன. கொடுத்தது தொலையப் போவதில்லை. (கொடுத்தால் திரும்பிக் கிடைத்துவிடும்.)

575

படகில் நீர் ஏறினாலும், வீட்டில் பணம் ஏறினாலும் இரண்டு கைகளாலும் வாரி வெளியே இறைத்துவிடு. இதுதான் நல்லோனுடைய வேலை.

576

ஹரி வழிபாடு செய்து குலப்பெருமையை உயர்த்து. ஈந்து செல்வத்தை (அதன் பெருமையை) அதிகரிக்கச் செய். உதவி செய்து புத்தியின் (அல்லது பதவியியை என்றும் வைத்துக் கொள்ளலாம்) பயனைப் பெறு. வாழ்க்கையின் பயன் இதுவே.

577

உடல் எடுத்ததன் பயன் இதுதான். கொடு, கொடு, கொஞ்சம் கொடு. பிறகு உடல் கொடுக்காது, கொடுக்கும் வாய்ப்பும் கிடைக்காது. இப்பொழுது கொடுப்பதுதான் கொடுப்பது.

578

சத்துமாவிலும் பங்கு போடு. ரொட்டியையும் பிரித்துக் கொடு. கபீர் சொல்கிறார்: "அப்படிச் செய்கிற அடியானுக்கு ஒரு பொழுதும் குறைவு வராது.

## போதுமென்ற மனம் (சந்தோஷம்)

579

ஆசை போயிற்று, கவலையும் தொலைந்தது. இனி வேண்டுவது ஒன்றுமில்லை. யாருக்கு ஒன்றும் தேவையில்லையோ அவனே அரசர்க்கரசன்.

580

வாங்கச் சென்றவர்கள் இறந்தவரானார்கள். இறந்தவர்கள் தான் வாங்கச் சென்றார்கள். அவர்களுக்கும் முன்பே இருந்தும், 'இல்லை' என்கிறவர்கள் இறந்தார்கள்.

581

பசுச் சொத்து, யானைச் சொத்து, குதிரைச் சொத்து ரத்தினங்களின் (சொத்துச்) சுரங்கம். இந்தச் சொத்துக்கள் எல்லாம் திருப்தியாகிற சொத்து (போதும் என்ற மனம்) வந்தவுடன் தூசிபோல (மதிப்பற்று விடும்).

582

செத்துப் போனாலும் செத்துப் போவேனாக. (என் உடலுக் காக்க கேட்டுப் பெறாமல் இருப்பேனாக.) பிறர் நலனுக் காகக் கேட்டால் எனக்கு வெட்கம் வராமலிருக்கட்டும்.

## (தைரியம்) பதற்றமில்லாத தன்மை

583

மனமே பதற்றமடையாதே. மெல்ல, மெல்ல! மெல்ல மெல்லத்தான் எல்லாம் நடக்கும். தோட்டக்காரன் நூறு குடம் நீர் ஊற்றினாலும் பருவம் வந்தால்தான் பழம் பழுக்கும்.

584

கபீர் சொல்கிறார் : பொறுத்திருக்கும் மனது இருப்பதால் தான் யானை இருந்த இடத்திலிருந்து மனமாரச் சாப்பிட முடிகிறது. நாயோ ஒரு துண்டுக்காக வீட்டுக்கு வீடு ஓடுகிறது.

585

கபீர் சொல்கிறார் : "சுழலில் உட்கார்ந்து கொண்டும் மனம் பதற்றம் அடையாதே. முழுகிவிடும் பயத்தை ஒழித்துவிடு. இறைவன் என்ன செய்வாரோ அதுதான் நடக்கும்.

586

'நான் என்னுடையது' என்ற எல்லாம் போகும் (அப்) பொழுதுதான் இன்னமும் வரும். இதுவே அசையாத எண்ணமா னால் தான் (இதில் நம்பிக்கை ஏற்பட்டால்தான்) நமக்கு இடம் (நன்மை) கிடைக்கும்.

## பணிவு (எளிமை—நைச்சியம்)

### 587

எளிமை, ஏழ்மை, அடிமை செய்யும் குணம் ஆகிய இந்தச் சாதனங்களுக்கு ஆட்பட்டு இருப்பேன். நீரில் மீன் போல் நான் இவற்றுடன் வசிப்பேன். (இவற்றை விடமாட்டேன்.)

### 588

எளியவன் எல்லோர் முகத்தையும் பார்க்கிறான். எளியவனை ஒருவனும் பார்க்கிறதில்லை. பாவம், எளிமை நல்லவள். (அதனால்) மனிதன் தேவனாகிறான்.

### 589

எளிமை, ஏழ்மை, அடிமை செய்யும் குணம், எல்லோரிடமும் மரியாதை எண்ணம் (இவை நல்லவை) கபீர் சொல்கிறார் : "யாரிடம் நல்ல சுபாவம் இருக்கிறதோ அவனே பெரியவன்."

### 590

வணங்குவதென்றால் நீ வணங்கு. மற்றவரை வணங்கச் செய்யாதே. (அப்பொழுது உனக்குப் பெருமை; எப்படி என்றால்) சரியான நிறைக்கு மேல் கொஞ்சம் (எச்சம்) போட்டு நிறுத்தால் கீழே தணிந்த தட்டு பாரம் உள்ளதாக ஆகிறது. (நீ பணிந்ததனால் தணிகிறாய். உன்னிடம் கொசுறு (அதிக மதிப்பு) இருக்கிறது என்று ஆகிறது.

### 591

தண்ணீர் உயரத்தில் தங்குகிறதில்லை. கீழேதான் தங்கியிருக்கும். கீழே இருந்தால் ஆரக் குடிக்கலாம். உயர இருந்தால் தாகம் எடுத்தவன் தாகத்துடனேயே போக வேண்டியது தான்.

### 592

கீழே இருந்தவர்கள் அடிமையாக இருந்ததனால் கரை ஏறி விட்டார்கள். தற்பெருமை என்ற கப்பலில் ஏறிய உயர்ந்த குடியினர் எல்லோரும் முழுகியவர்களே.

## 593

எல்லாவற்றிலும் சிறுமை (நாம் சிறியர் என்ற எண்ணம்) பெரிது. அந்தச் சிறுமையில் எல்லாம் (நன்மையும்) உண்டு. இரண்டாம் பிறைச் சந்திரனுக்கு எல்லோரும் தலை வணங்கு கிறார்கள்.

## 594

கெட்டவனைப் (வெளியே) பார்க்க என நான் சென்றேன். அப்பொழுது ஒரு கெட்டவனும் கிடைக்கவில்லை. என் உள்ளத்தை நான் (எப்பொழுது) தேடினேனோ (அப்பொழுது) என்னைப்போல் கெட்டவன் வேறு ஒருவருமில்லை (என்று கூறும் அளவு கண்டுகொண்டேன்.)

## 595

என்னுடையதென்று என்னிடம் ஒன்றும் இல்லை. இருப்ப தெல்லாம் உன்னுடையதுதான். உன்னுடையதை உன்னிடம் தந்துவிடுவதில் எனக்கு என்ன செலவு?

## 596

எளிமையால் பெருமை கிடைக்கும். பெருமை கொண்டால் பிரபு விலகிவிடுவார். எறும்பு சர்க்கரை எடுத்துச் செல்கிறது. யானை தலையில் தூசி (மண்) தான்!

### தயை

## 597

இதயத்தில் தயை இல்லை. பெருமையாக ஞானத்தைப் பற்றிப் பேசுகிறோம். அப்படிப்பட்ட மக்கள் 'சாக்கி', 'சப்தம், என்று (ஞான நல்லுரைகள்) கேட்டுக் கேட்டு நரகம்தான் போவார்கள்.

## 598

யார் மேல் தயை செய்வது? யாரிடம் வன்மை காட்டுவது? எல்லாம் ஆண்டவன் உயிர்கள்—எறும்பு யானை இரண்டுமே (ஈசுவரன் ஆக்கியவை தாம்!)

## சத்தியம் (உண்மை)

### 599

உண்மையைப் போன்ற தவம் இல்லை. பொய்யைப் போன்ற பாவம் இல்லை. யாருடைய இதயத்தில் சத்தியம் இருக்கிறதோ அந்த இதயத்தில் குரு தானே இருக்கிறார்.

### 600

ஆண்டவனிடத்தில் உண்மையாயிரு. ஆண்டவன் உண்மையை விரும்புகிறான். வேண்டுமானால் மயிரை நீளமாக வளர். வேண்டு மானால் தலையை மழுங்கச் சிரைத்துக் கொள். (அதனால் எல்லாம் அவர் உளநிறைவோ குறைவோ அடைவதில்லை.)

### 601

சத்தியத்தைச் சாபம் பாதிக்காது (பொய் நிந்தை ஒன்றும் செய்யாது). சத்தியத்தைக் காலம் விழுங்க முடியாது. உண்மைக்கு உண்மை கிடைக்கும் (குரு அல்லது ஈசுவரன்). உண்மையில் தான் அது மறையும் (உண்மைக்கு நற்கதியுண்டு).

### 602

சத்தியம் இல்லாமல் தியானம் இல்லை. பயம் இல்லாமல் அன்பு இல்லை. பாரசக் கல்லில் (படுதா) மறைவு இருந்தால் தங்கம் எப்படி ஏற்படும்?

### 603

கபீர் சொல்கிறார்: "அன்பு—நேசத்தின் உடையணிந்து நாட்டியமாடு. யார் உண்மை பேசுகிறானோ அவன் காலடியில் என் உடல், மனம் எல்லாம் அர்ப்பணம்.

### 604

உண்மையை ஒருவனும் நம்புகிறதில்லை. பொய்யை உலகம் நம்புகிறது. (பசும்பாலிலிருந்து தயாரித்த பொருள்களை) மோரைத் தெருத் தெருவாய் அலைந்து விற்கிறார்கள், கள் உட்கார்ந்த இடத்தில் விற்றுப் போகிறது.

## 605

உண்மையைச் சொன்னால் அடிக்கிறார்கள். பொய் சொன்னால் உலகம் நம்புகிறது. இந்த உலகம் கருநாய்; உசுப்பினால் கடிக்கிறது.

## 606

உள்ளமும் உண்மையடையுமானால் (தெளிவு) உண்மை எல்லாவற்றையும்விட நல்லதே. ஒருவன் கோடி செய்தாலும் சத்தியம் இல்லாமல் நன்மை கிடையாது.

## 607

நன்றாய் மனத்தில் அறிந்து உண்மையாய் வியாபாரம் செய்யுங்கள். உண்மையிருந்தால் வைரம் (லாபம்-பகவான்) கிடைக்கும். பொய் சொன்னால் முதலே நஷ்டமாய்விடும்.

### பேச்சளவில் அறிவு

## 608

குருடன் கண்ட யானை போல் தான் எல்லோருக்கும் அறிவு (உள்ளது). அவனவன் தன்னுதைச் சொல்கிறான். யாருடையதை எடுத்துச் சிந்திப்பது?

## 609

ஞானியிடம் என்ன சொல்வது? கபீர் சொல்ல வெட்கப்படு கிறார். குருடன் எதிரே கூத்தாடினால் கலை அல்லவா வீணாகும்! (பக்தி இல்லாத ஞானியைக் குறிக்கிறார் கபீர்.)

## 610

ஞானி ஞானத்தைப் பேச மறந்துவிட்டான். உண்மையான சொரூபம் அருகேதான் இருந்தது. உள்ளே அந்த அரும் பொருள் இருக்கிறது. வெளியே தேடித் திரிகிறான் அப்பாவி. (பேச்சில் ஞானம் வராது—பக்தியும் தியானமும் வேண்டும்.)

## 611

உள்ளே தொளைத்துப் பார்க்கவில்லை. வெளியே அநேகம் சொல்கிறான். உள்ளே யாருக்குத் தோற்றம் கிடைக்குமோ அவனுக்கு உள் - வெளி எல்லாம் ஒன்றுதான்.

## விசாரணை—கருதுதல்

### 612

நீரின் பொம்மை: காற்று ஒட்டிக்கொண்டிருக்கிறது. பல பேச்சுக்கள் பேசுகிறான். படைத்தவன் ஒளி தந்திருக்கிறான். (மனிதன் நிலை இதுவே.)

### 613

ஒரே பேச்சில் எல்லாம் சொல்லியாய் விட்டது. பொருள்கள் எல்லாம், கருத்துக்கள் எல்லாம் சொல்லிவிட்டேன். அருவப் பெயரைப் போற்றுங்கள். புலன் இன்பத்தில் சீரழிவதை நிறுத்துங்கள்.

### 614

தானாகவே கோலைக் கொண்டு வந்து எல்லா ரசத்தையும் நிறுத்துப் பார்த்தேன், எல்லா ரசங்களுள்ளும் பேசத் தெரிந்தால் பேச்சினிமை சிறந்தது.

### 615

ஆசாரவான்கள் (வெளிக்கிரியைகளை ஒழுங்காகச் செய்பவர்) உலகம் எங்கும் கிடைத்தனர். ஆனால் கருத்துடன் செய்யும் சிந்தனையாளன் (விசாரவான்) ஒருவனும் கிடைக்கவில்லை. ஒரு 'விசாரவான்' கிடைத்தால் கோடி 'ஆசாரவான்'களை அவனுக்கு அர்ப்பணம் செய்துவிடலாம்.

### 616

உடல் சாதனத்தில் ஈடுபட்டிருக்கிறது. மனமோ எங்கேயோ கொடுத்தாய் விட்டது. கபீர் சொல்கிறார்: "இந்த விதம் இருந்தால் இந்தக் 'கோராத்' துணியில் நிறம் எப்படி ஏறும்?

### 617

மக்கள் யார் ஆதாரத்தில் (யார் உதவியை நம்பி) இருக்கிறார்கள்? சத்துருக்கள் (உலக இன்பங்களில் ஈடுபாடு) சூழ்ந்து நிற்கின்றனர். அப்படிப்பட்ட உயிர்களை எமன் ஆடுகளைச் சூறையாடும் கசாப்புக் கடைக்காரன் போலச் சூறையாடி விடுவான்.

## 618

அறிந்து யாராவது பேசினால் (ஒரு) பேச்சு மதிப்பற்றது. இதயத்தில் நிறைகோல் கொண்டு நிறுத்து, பிறகு வாயில் வெளிக் கொணர வேண்டும்.

## விவேகம் (பகுத்தறிவு)

## 619

விவேகத்தின் கண் உடைந்தது. நல்லோர், அல்லோர் புரியவில்லை. யாருடன்கூடப் பத்து இருபது (பேர்) இருக்கின்றனரோ அவர் 'மஹந்த்' (மடாதிபதி)!

## 620

என் சாதுக்கள் எல்லோரும் நல்லவர் தாம். அவரவர் இடத்தில். ஞானம் அறிந்த பகுத்தறிவாளன் எவனோ அவன் தலையில் முடிபோல் (அவர்தாம் 'சாது சிரோமணி'; அடியாருக்குள் தலையணி போன்றவர்.)

## 621

அறிந்ததை அறிந்தவன் ஒருவன்தான், (அதை) அறியாதவர் தான் (மற்ற) எல்லோரும். எவன் இதயத்தில் விவேகம் இருக்கிறதோ அவனே அறிந்தவன் என்று அறிந்துகொள்.

## 622

சுழல் வலை பேச்சு வலை; அதில் அநேக உயிர்கள் அழுந்தின. கபீர் சொல்லுகிறார்: "எவர் உள்ளத்தில் விவேகம் உண்டோ அவர்களே தப்பினார்கள்."

## 623

வாங்குகிறவர்கள் இருக்கும் இடத்தில் நான் இல்லை. அவர்கள் இல்லாத இடத்தில் நான் இருக்கிறேன். சொல்லின் நிழலைப் பிடித்துக் கொண்டு விவேகமில்லாமல் சுற்றித் திரிகின்றனர் இவர்கள்.

## (நல்ல) புத்தியும் கெட்ட புத்தியும்

### 624

புத்தி கூரையிலிருந்து (ஆகாயத்திலிருந்து) இறங்கிற்று. படைத்தவன் பிரித்துக் கொடுத்தான். ஒருவன் பேறு பெறாத வனாகிவிட்டான். ஒருவன் சலித்து எடுத்துக் கொண்டான்.

### 625

கூலி இல்லாத வேலை, புத்தி இல்லாத உடல், (இவை எதற்கு) ஞானம் இல்லாத யோகம். சாம்பலைப் பூசிக்கொண்டு திரிய வேண்டியதுதான்.

### 626

அறிந்தவன் வீடு வேறு. அறியாதவன் வீடு வேறு. எந்த வீட்டில் ஆண்டவன் வசிக்கிறாரோ அந்த இடத்தை மிகச் சிலர் தான் அறிவர்.

### 627

மூர்க்கனுக்குச் சொல்லிச் சொல்லி மடியிலுள்ள (நம்மிட முள்ள) அறிவும் போய்விடும். ஒன்பது மணு சோப்பு கொண்டு வந்தாலும் நிலக்கரி வெண்மையடையப் போவதில்லை.

### 628

மூர்க்கனிடம் என்ன பேசுவது? போக்கிரியிடம் என்ன (ஞானத்தை) குடியேற்ற முடியும்? (ஏற்படுத்த முடியும்?) கல்லில் என்ன அடிப்பீர்கள்? கூர்மையான அம்புகளும் நாசமடையும்.

### 629

ஒரு நிமிஷத்தில் பிரளயம் தீர்ந்துவிடும். சூரியன் உலகத்தின ரிடையே உதித்துவிடும். முதலில் கவலையை ஒழித்துவிட்டுப் பிறகு உதவிக்குக் கூப்பாடு போடு.

## சாப்பாடு

### 630

நாக்கு, புளிப்பு, இனிமை, உறைப்பு, (எரிப்பு) எல்லாச் சுவைகளையும் ஏற்றுக்கொள்ளும். திருடர்களுடன் நாய் சேர்ந்துகொண்டது. பிறகு எப்படி அது காவல் காக்கும்? (நாக்கு தடுக்க வேண்டியதிருக்க எல்லாவற்றையும் எடுத்துக் கொள்கிறதே!)

## 631

புளிப்பு, இனிப்பைப் பார்த்து நாக்கில் நீர் சேருகிறது எதுவரை மனம் பக்குவமடையாதோ அதுவரை (நாக்கு) 'கச்சா' ஈயம் போன்றதுதான்.

## 632

ஆடு இலையைத் தின்கிறது. அதன் தோலை உரித்து விடுகிறார்கள். ஆட்டையே தின்கிறானே அவனை யாரிடம் ஒப்புவிப்பது? (அவனுக்கு என்ன தண்டனை தருவது?)

## 633

பகலில் ('ரோஜா') உண்ணாவிரதம் காக்கிறார்கள். இரவில் பசுவைக் கொல்லுகிறார்கள். இது கொலை, அது கடவுள் வழிபாடு! 'குதா' (கடவுள்) எப்படி மகிழ்ச்சியடைவார்?

## 634

இரண்டொரு உப்புத் துண்டு போட்ட பொங்கல் நல்ல உணவு. வேறு (பிராணியின்) மாமிசம் சாப்பிட்டுக் கழுத்தை அறுத்துக் கொள்வது யார்? (எதற்காகப் பாவம் செய்ய வேண்டும்?)

## 635

காய்ந்து உலர்ந்ததை (ஏதேனும், கிடைத்ததை) உண்டு, குளிர்ந்த நீரைக் குடி. பிறர் சாப்பிடும் நெய்யுண்டியைப் பார்த்துப் பேராசை கொள்ளாதே.

## 636

கபீர் சொல்கிறார்: "ஆண்டவனே, எனக்குக் காய்ந்த ரொட்டியைக் கொடு, நெய்யுண்டி கேட்க நான் பயப்படுகிறேன். காய்ந்த ரொட்டியையும் பிடுங்கிக் கொள்ளாதே.

## 637

பாதி உணவும் (காய்ந்த) மட்டமான உணவும் நல்லதே. முழுவதும் இடைப்பது துன்பம். நெய்யுண்டி தேடுபவன் மிகவும் பாபத்தைச் செய்வான்.

## உலக உற்பத்தி

### (உலகம் பிறந்த விதம்)

### 638

முதலில் சமர்த்தன் (ஆதி புருஷன்—பரப்பிரம்மம்) மட்டும் இருந்தான். வேறு ஒருவரும் இல்லை. 'மற்றவர் எப்படிப் பிறந்தனர்?' என்று நான் குருவிடம் கேட்டேன்.

### 639

அப்பொழுது சற்குரு தம் வாயால் சொன்னார் 'நற்செய்கையையுடைய நல்லவனே கேள்: முதல் முடிவு இவற்றின் விளக்கத்தை நான் உனக்குத் தெளிவாகச் சொல்கிறேன்.'

### 640

முதலில் சமர்த்தன் உடலில் சுருதி சகஜமாக ஒலித்தெழுந்தது. அதிலிருந்து (உறைந்து) உருப்பெற்று ஏழாகப் பிரிந்து பரவிற்று.

### 641

இரண்டாம் முறை அவர் உடலில் இச்சை எழுந்தது. மனத்தில் விருப்பம் கொண்டதால் ஏழு உருவங்களை நிர்மாணம் செய்தார். அவை அடைய முடியாதனவாக (சூக்குமமாக) இருந்தபடியால் ஒருவரும் அறிய முடியவில்லை.

### 642

அப்பொழுது சமர்த்தனின் காதிலிருந்து சாரமான மூலசுருதி ஏற்பட்டது. அதன் ஒலிக் கலைகளிலிருந்து ஒரே மாதிரி ஐந்து பிரும்மாக்கள் ஏற்பட்டனர்.

### 643

மூலபுருடன் ஐந்து பேருக்கும் ஐந்து உலகங்களை உற்பத்தி செய்து ஒவ்வொருவரையும் ஒவ்வொன்றில் வைத்தார். இரண்டு ஆவல்கள் மறைந்திருந்தன. சமர்த்தன் அவற்றை மனத்தில் கொண்டார்.

## 644

யோகமாயை ஒன்றை உற்பத்தி செய்தார். அட்சரப் பிரம்மத்தையும் வெளியேற்றினார். இதைச் சமர்த்தர் அறிய முடியாதவையாக ஆக்கி மறைத்துவைத்தார்.

## 645

சுவாசத்திலிருந்து 'ஸோஹம்' (ஒரு பிரம்மாவின் பெயர்.) உற்பத்தியானார். அமுதத்தைக் கட்டிக் கொடுத்தார். எட்டு அம்சங்களை ஏற்படுத்தினார். இதைச் சிறந்த அடியார்களே அறிவர்.

## 646

'அசிந்த்ய' (மற்றொரு பிரம்மாவி)னுடைய தேசு அண்டத்தையும் பூராவாகப் பரப்பினார் (உற்பத்தி செய்தார்.) அண்டத்தின் உச்சியில் அமர்ந்து கீழ் மேலில்லாமல் விளக்கு எரிகிறது.

## 647

அந்த அசிந்த்யனுடைய அன்பிலிருந்து சார(மான) எழுத்து புலப்பட்டது. அதன் நான்கு அம்சங்களிலிருந்து நான்கு வேதங்கள் விரிந்து பரந்தன.

## 648

அப்பொழுது அக்ஷரப் பிரும்மத்துக்குத் தூக்கத்தையும், மோகத்தையும், சோம்பலையும் தந்தார். அவரை ஒருவரும் அறியாதவாறு சமர்த்தர் செய்து விட்டார். அந்த ரகசியத்தையே யாரும் அறியமாட்டார்கள்.

## 649

அக்ஷரப் பிரும்மத்தின் தூக்கம் எப்பொழுது போயிற்றோ சுருதியும் நிர்வாணத்தில் அடங்கிற்று. கறுப்பு நிறமுள்ள ஒரு முட்டையை நீரில் கொண்டுவந்து இறக்கினார்.

## 650

அக்ஷரப் பிரும்மத்தின் உள்ளத்தில் சந்தேக முள் வருத்தி எழுந்தது. யார் இந்த முட்டையை நிருமாணித்தது? இந்த முட்டையின் வேர் எங்கே இருக்கிறது? (முட்டை = அண்டம்)

## 651

அந்த முட்டையின் வாய்ப்புறத்தில் ஓர் ஒலியின் அடையாளம் கேட்டது. அக்ஷரன் (பிரும்மம்) பார்த்துக்கொண் டிருக்கும் போதே பத்து வாயிலும் ஆவி வெளியேற அது உடைந்தது.

## 652

அதிலிருந்து அழகின் எல்லையான நிரஞ்சனன் ஜோதியுடன் வெளியேறினார். அவர் காலக்கிரமத்தில் அபாரமான பலம் கொண்ட வீரனாகி மூன்று உலகத்திற்கும் தலைவரானார்.

## 653

அவரிடமிருந்துதான் பிரும்மா விஷ்ணு சிவன் மூன்று தேவதைகளும் உற்பத்தியாயினர். மாயையின் உபதேசத்தால் அவர்கள் நான்குவகை உயிர்களைப் (1) பக்ஷிகள், (2) மிருகங் கள், மனிதர்கள், (3) புழு பூச்சிகள், (4) மரம் செடி கொடிகள், (அண்டஜம் பிண்டஜம் சுவேதஜம் உத்பிஜம் ஆகியவற்றைப்) படைத்தனர்.

## 654

அந்த உயிர்களை எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் (வகைகளில்) பிறக்க வைத்தனர். அவர்களுக்குப் பதினான்கு எமன்களையும் காவல் வைத்தனர்.

## 655

அவரவர் சுகமாக இருக்கின்றனர். நானும் ஓர் அண்டத்தில் இருக்கிறேன். படைப்பு நீர்க்கோள் துக்கம், சுகம் மீண்டும் மீண்டும் வந்து போகின்றன.

## 656

ஏழு சுருதிகள் எல்லாவற்றிற்கும் ஆதாரம். எல்லாம் அவற்றுள்தான் அடங்குகின்றன. இவற்றிலிருந்தே வெளியேறின; மீண்டும் இவற்றிலேயே அடங்குகின்றன.

## 657

அதைப்பற்றிச் சமர்த்தர் ஒளிந்திருந்து, கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார். அவர்தான் இந்தச் சேர்க்கையைக் கொண்டு வந்தார். தூங்குகிற உலகத்தை விழிக்கவைத்தார்.

## 658

ஏழு சுருதிகளுக்கும் வெளியே பதினான்கு சங்குகளுக்கும் அப்பால் ஆத்மாக்களின் ஆதாரமான இடம்தான் சமர்த்தன் அமர்ந்திருக்கிற இடம்.

### மனம்

## 659

மனத்தின் எண்ணப்படி நடக்காதே. மனத்தின் அபிப்பிராயங் கள் (ஒன்றல்ல, இரண்டல்ல) அநேகம். மனத்தை ஏறிச் சவாரி செய்கிற (அப்படிப்பட்ட) சாது யாரோ ஒருவர் தாம்.

## 660

மனத்தின் சீடர்கள் இந்த உலகம் (உலகத்தினர்) முழுவதும். குருவின் சீடர் (சொற்படி நடப்பவர்) ஒரிரு சாதுக்களே. யார் குருவின் சொற்களைக் கேட்கிறாரோ அவர் புத்தி ஆழமானது.

## 661

மனத்தை தூக்கி அடிப்பேன். அது துண்டு துண்டாய் உடை படும். பாத்தியில் நஞ்சை விதைத்துவிட்டு அறுவடை சமயத்தில் வருந்தி என்ன பயன்?

## 662

மனம் ஐந்து (பொறிகளின்) வயப்பட்டது. ஐந்தும் மனத்துக்கு அடங்கவில்லை. எங்கே பார்த்தாலும் காட்டுத் தீ பிடித்திருக் கிறது எங்கே சென்றாலும் சூடு வாட்டுகிறது.

## 663

கபீர் சொல்கிறார் : "எதிரிகள் பலம் அதிகமாக இருக்கிறது. உயிர் ஒன்று, அதற்கு எதிரிகள் ஐவர். தங்கள் தங்கள் ருசிக்கு (இஷ்டப்படி) அநேக ஆட்டம் ஆட்டி வைக்கிறார்கள்.

## 664

கபீர் சொல்கிறார் : "மனம் ஒன்றுதான் வேண்டும் என்பதை விளைவித்துக்கொள்கிறது. வேண்டும் என்றால் குருவிடம் பக்தி செய்; வேண்டுமானால் புலன் இன்பங்களைச் சேகரித்துக் கொள்.

## 665

மனத்தின் காரணமாகவே வனத்துக்குச் செல்கிறோம். வனத்தைவிட்டு ஊருக்கு வருகிறோம். கபீர் சொல்கிறார் : (என்ன செய்வது) "இந்த மனம் எங்கும் தங்குவதில்லையே."

## 666

கடலின் அலைகள் எவ்வளவோ மனத்தின் அலைவும் அவ்வளவே. ஒரு நிலையில் இருக்குமானால் எளிதாகவே வைரம் உற்பத்தியாகிவிடும்.

## 667

முதலில் இந்த மனம் காக்கையாக இருந்தது. உயிரைக் கொத்திக் கொண்டிருந்தது. இப்பொழுது அன்னப்புள்ளாகி விட்டது. முத்தைப் பொறுக்கிப் பொறுக்கி உண்கின்றது (நல்ல ஞானம் பெற்று ஆத்மானந்தம் அடைகிறது.)

## 668

கபீர் சொல்கிறார் : "மனம் மலைக்குன்றாக இருந்திருக்கிறது. இப்பொழுது நான் சுரங்கத்தைக் கண்டுவிட்டேன். சப்தத்தின் (ஞானத்தின்) சிற்றுளி செலுத்தினேன். பொன் கிளம்புகிறது, சுரங்கத்திலிருந்து.

## 669

சொல்லமுடியாத வழி : மனத்தை உறுதி செய்துகொள். புத்தியை நுழையச் செய். உடல் மனம் எல்லாவற்றையும் விடு. அப்பொழுதுதான் அந்த 'ஊரை' அடையலாம்.

## 670

மனம் பருமன். மனமே மெலிந்தது. மனம் நீர், மனமே நெருப்பு. மனத்தை எப்படி விளைவிப்பாயோ அது அப்படியே ஆகும்.

## 671

மனத்துக்குப் பல நிறங்கள் உண்டு. கணத்துக்குக் கணம் மாறும். அது ஒரே நிறத்தில் (எப்பொழுதும்) இருக்கக் கூடியது அபூர்வமாக இருக்கும்.

## 672

மனம் பறவை ஆயிற்று. பறந்து ஆகாயத்தில் சென்று விட்டது. மேலிருந்து இந்த மாயையிடமே விழுந்துவிட்டது.

## 673

தன் தன் திருடனை அவரவர் பிடித்துக் கொன்று விடுகிறார்கள். என் திருடன் என்னிடம் சிக்கினால் எல்லாவற்றையும் அவருக்குக் கொடுத்து விடுவேன்.

(திருடன்—பகவான், மனத்தைத் திருடிய அன்பன்)

## 674

மனம் என்ற யானை பெரு மதம் பிடித்திருந்தது. விரும்பியபடி திரிந்துகொண் டிருந்தது. (இப்பொழுதோ) அன்பின் இரட்டைப் புரி, முப்புரி நான்குபுரிச் சங்கிலிகளின் பிணைப்பு ஏற்பட்டுவிட்டது (மனம் கடவுள் அன்பில் பிணைக்கப் பட்டுவிட்டது. இனி நகராது.)

## 675

இதயத்தின் நடுவில் கண்ணாடி. ஆனாலும் முகம் பார்க்க இயலுவதில்லை. மனத்தின், 'இதுவா','அதுவா' என்ற சந்தேகம் (தொந்தம்) போனால்தான் முகத்தைப் பார்க்கமுடியும்.

## 676

நீரைவிட மெலிந்தது. புகையைவிட லேசானது. காற்றைவிட சூட்சுமமானது. அப்படிப்பட்ட (பரம்) பொருளுடன் கபீர் நேசம் கொண்டிருக்கிறார்.

## 677

மனத்தின் ஆசைகளை அடித்து உடைத்துப் பொடியாக்கி மாவாக்கிவிடு. சுந்தரிக்கு அப்பொழுது இன்பம் கிட்டும். அவன் தலையில் தாமரை ஒளிரும். (சுந்தரி-ஆத்மா)

## 678

உடலுக்குள்ளேயே வைத்துச் சூழ்ந்து மனத்தின் ஆவல்களைக் கொன்றுவிடு. முதுகைக் காட்டி எப்பொழுது போக ஆரம்பிக்கின்றனவோ அப்பொழுதெல்லாம் அங்குசத்தை உபயோகித்துத் திருப்பி விடு (அங்குசம்-தொரட்டி)

## 679

கபீர் சொல்கிறார் : "மனம் யானை. தொரட்டி கொடுத்துக் கொடுத்து நிறுத்திவை. நச்சுக்கொடியை ஒதுக்கி அமுதத்தின் பழத்தைச் சுவை."

## 680

குடம் கட்ட நீர் தங்குகிறது. குடம் இல்லாமல் நீர் இல்லை. அதைப்போல் மனம் கட்டி ஞானம் நிற்கிறது. ஞானம் இல்லாமல் மனம் இல்லை.

## 681

மனமும் மாயையும் ஒன்றே. மாயை மனத்தில் அடங்குகிறது. மூன்று உலகங்களிலும் சந்தேகம் பரவி நிற்கிறது. யார் யாருக்கு எடுத்துச் சொல்வேன்?

## 682

மனம் சமுத்திரம். ஆசைகள் அலைகள். முழுகி அடித்துச் செல்லப்பட்டவர் அநேகம். இந்தக் கபீர் சொல்கிறார்: "எவர் இதயத்தில் விவேகம் இருக்கிறதோ அவரே தப்பியவர்.

(விவேகம் = அழியும் பொருள், அழியாப் பொருள் பற்றிய அறிவு.)

## 683

(இந்த உலகில்) அடித்துப் பிடித்து ஓடிக்கொண் டிருக்கும் பொழுதுகூட யார் மனது எப்பொழுதும் கண்களுக்கு எதிரே இருக்குமோ அந்த மனம் மூன்று உலகுக்கும் அரசனாகும். அந்த மனத்தை எல்லா இடங்களிலும் போற்றுவார்கள்.

## 684

உடல் கப்பல்; மனம் காகம்; இலட்சம் யோசனை தூரம் பறந்து செல்லும்; சில போழ்தில் கடல் ஆழத்தில் அமிழ்ந்து ஒழியும். சில நேரத்தில் ஆகாயத்தில் மறையும்.

(மனம் தியான நிலையில் உயரலாம் அல்லது உலக இன்பங்களில் அமுந்தி ஒழியலாம். யோசனை - ஓர் நீட்டலளவை = 10 மைல்)

## 685

மனத்திடம் தோல்வி பெறுவதுதான் தோல்வி. மனத்தை வெற்றிகொள்வது வெற்றி. கபீர் சொல்கிறார்: "மனத்தின் நம்பிக்கையின்மேல் தான் அன்பனை அடைவீர்கள்."

## 686

மூன்று உலகமும் ஈசற்கூட்டம். மனத்துடன் பறக்கின்றன. "ஹரிஜனங்கள்" (பாகவதர்) ஹரியை அறியாமலே எமன் கையில் விழுந்து விடுகிறார்கள்.

## 687

குரங்காட்டியின் குரங்கைப் போல் உயிர் மனத்துடன் வசிக்கிறது. (மனது, உயிரை) நானாவிதமான ஆட்டம் ஆட்டித் தன் கைக்குள் வைத்துக்கொள்கிறது.

## 688

மனம் (விளைத்த) விளைவாக சுரர்கள் முனிவர்கள்கூட ஏமாற்றம் பெற்றிருக்கிறார்கள். மனத்துக்கு இலட்சம் வாசல்கள். இந்த மனம் சஞ்சலம் கொண்ட திருடன். இது முழுதும் ஏமாற்றும் ஒன்று.

## 689

மனம் யானை. பாகனைக் கொல்லுகிறது. ஆசையலைகள் கழுகைப்போல; மந்திரம் தந்திரம் ஒன்றுக்கும் அடங்காது. பறந்து பறந்து உண்ண ஆரம்பிக்கிறது.

## 690

மனக் களிறு எதற்கும் கட்டுப்படுகிறதில்லை. சுருதி (ஆன்ம ஒளியுடன்)யுடன் செல்கிறதில்லை. பாவம், யானைப்பாகன் என்ன செய்வான்! கையில் தொரட்டி இல்லையே?

## 691

நாடு, வெளிநாடு எல்லாம் சுற்றினேன். மனத்துக்கு நிரம்ப நல்ல காலம்தான். ஆனால் எதைத் தேடி அலைந்தேனோ அதற்கு மட்டும் கெட்ட காலம்.

(பகவானைத் தேடும் பொழுது மனத்துக்கு அது விரும்பியபடி இரை கிடைத்ததே தவிர நான் தேடிய பொருள் கிடைக்க வில்லை. மனம் சுய நலம் கொண்டது. புலன் இன்பத்தையே பெரிதாக எண்ணுகிறது.)

## 692

விஷயம் (புலன் இன்பம்) என்ற அலைகளில் சுற்றுகிறது. மனம் போனால் உடலும் உடன் செல்கின்றது. அதனால் எல்லாம் தொலைந்துவிடுகிறது.

## 693

பிரம்ம ஞானம் எப்பொழுது ஏற்பட்டதோ அப்பொழுது மனம் குளுமை அடைந்தது. எந்த நெருப்பு உலகை எரிக்கின்றதோ அந்த நெருப்பு நீர் போல் ஆகிவிடுகின்றது.

### பலவகை (பொது)

## 694

கனவில் கடவுள் வந்தார். தூங்கும் பொழுது எழுப்பி விட்டார். கண்களைத் திறக்கமாட்டேன்—கனவாகப் போய் விடக்கூடாது என்று அஞ்சுகிறேன்.

## 695

தூங்கும் பொழுது கனவில் சந்திக்கிறேன். விழித்தால், மனத்தில் சந்திக்கிறேன். கண்கள் நல்ல நேரத்தில் நிறம் கொண்டன. (அன்பு பூண்டன) ஒரு பொழுதும் (அவன் உருவம்) மறக்கிறதில்லை.

## 696

யாருக்குச் சுகம் துக்கம் மூன்றும் இல்லையோ கபீர் அப்படிப் பட்டவருடன் நேயம் கொண்டார். (அவருடன்) சேர்ந்து ஒட்டி விளையாடுவேன். ஒரு போதும் பிரிவு ஏற்படாது.

## 697

எது பன்னிரெண்டு மாதமும் பழுக்குமோ, எது குளுமையான நிழல், அடர்த்தியான பழம் கொண்டதோ, எதில் பறவைகள் எப்பொழுதும் விளையாடிக் கொண்டிருக்கின்றனவோ, அந்தச் சிறந்த மரத்தடியில் தங்குங்கள்.

(தியானத்தின் உச்ச நிலை)

## 698

நன்மரம், நல்ல குளம், சாதுக்கள், (நான்காவது) பெய்கின்ற மேகங்கள் இவை நான்கும் பிறர் நலனுக்காகவே உடல் எடுக்கின்றன.

## 699

கபீர் சொல்கிறார்: "எவர் பிறர் 'பீரை' (பீடை=துயரம்) அறிகிறார்களோ அவரே 'பீரா'வார். பிறர் துயர் அறியாதவர்களே காபிர்கள் (=பீரல்லாதவர்).

காபிர்=சமயவிரோதி; பீர்=துயரம்; சமயத் தலைவர்.

## 700

வணக்கத்திலேயே வேறுபாடு உண்டு. வணங்குவதற்குப் பழக்கமும் அதிகம் உண்டு. சிறுத்தை, திருடன், வில் இந்த மூன்றும் மிகவும் நன்றாக வணங்கும்! (பதுங்கும், பாய்வதற்காக) அப்படிப்பட்ட வணக்கம் நல்லதல்ல.

## 701

கபீர் சொல்கிறார்: "(முத்துச்) சிப்பி சமுத்திரத்தின் உப்பு நீரை எடுத்துக் கொள்கிறதில்லை. 'சுவாதி'யின் நீரைக் குடிக்கிறது. (முத்து உண்டாக்கி) சமுத்திரத்துக்குப் பெருமையைத் தருகிறது. (சாதுக்கள் தெய்வத்தினிடமிருந்து அருள் பெற்று உலகத்துக்கு வழங்கிப் பெருமைப்படுகிறார்கள்.)"

(சுவாதி=மேகம்)

## 702

பபீஹா என்ற பறவை உயர்ந்த சாதிப் புள். கீழ்த்தரமான நீரை அது குடிக்காது. ஒன்று அது இந்திரனிடம் இரக்கும்; அல்லது உடல் துயரத்தை ஏற்றுக்கொள்ளும். (இந்திரன்=மேகத்துக்கரசன்.)

## 703

சாதகப் புள் தன் குஞ்சுக்குச் சொல்லிக் கொடுக்கிறது: "வேறு நீரை நீ எடுத்துக் குடிக்காதே. என் (நம்) குலத்துக்குரிய குணம் இதுதான். நாம் சுவாதியின் நீரில்தான் உள்ளத்தை வைப்போம்."

## 704

வழி நீண்டது. வீடோ தொலைவில். வழி தொல்லை நிறைந்தது. சுமையும் அதிகம். கபீர் சொல்கிறார்: "எப்படிக் கிடைக்கும்? குரு தரிசனம் கிடைத்தற் கரியது." (குரு=குரு, ஈசுவரன்.)

## 705

ஏ தோழி, பார்த்துப் பார்த்துப் பார்த்துக் கொண்டே இருந்தேன். நீர் கடலுள் அடங்கிவிட்டது. அதை எப்படிப் பார்ப்பது? (ஜீவாத்மா பரமாத்மா ஒன்றி விட்டால் பிறகு ஜீவாத்மாவுக்குத் தனி இருக்கை கிடையாது.)

## 706

எல்லாவற்றிற்கும் முதல் நானேதான். எல்லாம் அதில்தான் இருக்கிறது, எப்படி மரத்தின் விதையில் கிளை, இலை, பழம் எல்லாம் பரவி நிற்கின்றனவோ அப்படி.

(நான்=கபீர், கடவுள்)

## 707

கபீர் சொல்கிறார் : "என்னிடம் மட்டும் இருந்தால் தானே நான் அஞ்சுவேன்? சாவு, கிழத்தன்மை, ஆபத்து எல்லோரிடத்தும் தான் இருக்கின்றன. (எல்லோருக்கும்தான் இவை ஏற்படுகின்றன.)"

## 708

ஏழு தீவு, ஒன்பது கண்டங்கள், மூன்று உலகங்கள், பிரம்மாண்டம் இவற்றில் எங்கிருந்தாலும், கபீர் சொல்கிறார்: "உடல் எடுத்த பயன் எல்லோருக்கும் கிடைத்தே தீரும்."

## 709

உடல் எடுத்த பயன் எல்லோருக்கும் ஏற்பட்டே தீரும். ஞானி இதை அறிந்து அனுபவிக்கிறான். மூர்க்கன் (முட்டாள்) அழுது அனுபவிக்கிறான்.

## 710

இது பார்க்க வேண்டிய பொருள். (தானே நேரில் பழகி அறிய வேண்டிய பொருள்.) சொல்கின்ற ஒன்றல்ல. ஹரிஜனன் (கடவுளின் அடிமை) ஹரியுடனே முதல் முடிவு இரண்டிலும் சேர்ந்தே இருக்கின்றான்.

## 711

சத்திய நாமத்தை நினைவுபடுத்திக்கொண்டால் எல்லாம் நம்முடையவையே. அறிந்து (நற்) பொருள்களைக் கொள். (பொறியின்ப) ஆசையுடன் நமக்கு என்ன வேலை?

## 712

கவறாடல், களவு, கோள் சொல்லல், வட்டி வாங்குதல், லஞ்சம் தருதல், பிறர்மனை புகுதல் ஆகியவற்றைத் (ஈசுவர) தரிசனம் வேண்டும் என்றால் விட்டு விடு.

## 713

அரசன் (அரண்மனை) வாயிலுக்கு, சாதுக்கள் மூன்று பொருள்கள் பெறத்தான் செல்வார்கள். (ஒன்று) இனிய சாப்பாடு அல்லது (இரண்டு) பெருமை அல்லது (மூன்று) மாயை யின் ஆசை (பணம் பெற.)

## 714

பார்ப்பதற்கு எல்லாம் நன்றாய்த்தான் இருக்கிறது. பனிக் குவியல்போலப் பார்த்தவுடன் கரைந்துவிடுகிறது. மீண்டும் குவியலாக்க முடிகிறதில்லை.

## 715

ஆடலாம், பாடலாம், (தேவாரம் திருவாசகம் போன்ற) பாடல்களை ஓதலாம். ஆனால் குருவினிடத்தில் அன்பு இல்லை. கபீர் சொல்கிறார் : "விதை இல்லாமல் வயலில் எப்படி விளைவு ஏற்படும்? (குரு அன்பு - விதை.)"

## 716

பிரம்மத்திலிருந்து உலகம் பிறந்தது. அறிந்த பெரியோர்கள் இதைக் கூறுகின்றனர். அந்தப் பிரம்மத்தைத் தியாகம் செய்யாமல் உலகம் தியாகம் செய்யத்தக்கதல்ல. (உலகம் பிரம்மத்தில் அடங்கியிருக்கிறது.)

## 717

பிரம்மம் உலகின் விதை, அதைத் தியாகம் செய்யாமல் என்ன வைராக்கியம் இருக்கிறது? சொல். (உலகையே விடுகிறேன் என்றால் ஆகாது.) உலகத்துக்குள்ளேயே பிரும்மத்தைத் தேடி அடையவும் முறையைக் கற்றல் வேண்டும்.

## 718

வேதம், "(இது) இல்லை, (இது) இல்லை, மனம் அங்கே தங்காது" என்று எதைச் சொல்லிற்றோ அதை எண்ணம் பேச்சு ஒன்றும் எட்ட முடியாது. அந்தப் பிரம்மத்தைப் பற்றி யாரால் எவ்விதம் அறிந்துகொள்ள முடியும்?

## 719

ஒரு தொழில் விதைத்தல். அநேக விதைகள் விளைந்து வரும். ஒரு தொழில் வறுத்தல். முளை நூலே எழாது.

(நம் செயல்கள் பிறவி வினையை அறுப்பதாக இருக்க வேண்டும்.)

## 720

சந்திரனும் சூரியனும் தம் கிரணங்களை எப்படி விட்டுவிட முடியும்? அதனுடைய ஒளி எதிலிருந்து கிளம்பிற்றோ அது அதிலேயே அடங்கும்.

## 721

குரு மேல் மாடியில் அமர்ந்து எல்லோருடைய ஆட்டத்தையும் பார்க்கிறார். யாருடைய ஊழியம் எப்படியோ அப்படியே (பயனை) அவருக்கும் தருகிறார்.

(குரு—ஈசுவரன்; மேல் மாடி—ஆகாசம்)

## 722

ஒரே குளத்தில் திரியும் கொக்கும் அன்னமும் ஒரே நிறமாகத் தான் காணப்படும். ஆனால் பாலையும் நீரையும் தந்து தெரிந்து கொள்ளலாம். கொக்கு அப்பொழுதே வெளியாகி விடும்.

## 723

பார்க்காமல் யார் அந்தத் திருநாட்டைப்பற்றிப் பேசுகிறானோ அவன் மூடன். தான் சாப்பிடுவது உப்பு, விற்பது கர்ப்பூரம். (உப்பை வைத்துக்கொண்டு கர்ப்பூரம் எனச் சொல்லி விலை பேசுவதுபோல் ஆகிவிடும்.)

## 724

மலயகிரியின் நன்னாற்றத்தில் எல்லா மரங்களும் மறைந்தன. பெயர் சந்தனம் ஆயிற்றே தவிர மலயகிரி(யின் பெயர்) வரவில்லை.

## 725

வெட்டினால் மா துளிர் விடாது. அறுத்துவிட்டால் காது சேராது. கோரக்கரின் பாதம் தொடாமல் என்ன பெருமை உண்டு? (குருநாதர் பாதம் பிரியாதே; கோரக்கர்=குருநாதர்.)

## 726

மேலே வழி குறுகி விடுகிறது. பின்னால் எல்லாம் - தூள். படுதாவில் உள்ள சுந்தரி (மாயை) தொலைவில் தள்ளிவிட்டுக் கொண்டிருக்கிறாள்.

## 727

உலகமாகிற கடலில் படகுடன் பாம்பைக் கட்டாதே. படகை விட்டால் முழுகி விடுவாய். பிடித்தால் பாம்பு கடிக்கும்.

## 728

கையில் பால்கோவாவால் நிறைந்த கிண்ணம் இருக்கிறது. வழி பார்த்தே நாள் கழிகிறது. கபீர் சொல்கிறார் : "மனத்தை விட்டு இறங்கினவனுக்கு மோர் கொடுக்கப்படுவதில்லை. (வேண்டியவரானால் பால் கிண்ணத்தை வைத்துக்கொண்டு நாள் முழுவதும் காத்திருக்கிறார்கள். வேண்டாதவன் கேட்டாலும் மோர்கூடத் தருகிறதில்லை.)

## 729

நச்சுச் செடியை வீட்டில் நட்டோம்; அரவம் வேறு அதைச் சுற்றிக்கொண் டிருக்கிறது. அதனால் மனத்தில் அச்சம் ஏற்பட்டது. விழித்தே இரவைக் கழித்தோம். வினையின் விளைவு பயம் தருகிறது.

## 730

இலவு காக்கும் கிளி ஆசையுடன் அமர்ந்திருக்கிறது. (கடைசியில் ஏமாந்து) அலகை உடைத்துக்கொள்கிறது. தலையைச் சொறிந்துகொள்கிறது. என்றாலும் அது கிளிக்குப் பிடித்துத் தானே இருந்து வருகிறது.

(உலகினர் தெரிந்தும் புறப் பொருள்களில் ஆசை கொண்டு ஏமாறுகிறார்கள்.)

## 731

ஏ இலவு காக்கும் கிளியே! விரைவில் விட்டுப் போ. இந்தப் பழத்தின் உள்பகுதி மிகவும் ஏமாற்றக் கூடியது. இப்படிப்பட்ட இலவைக் காக்கின்றவர்களுக்கு இதயத்தில் கண் இல்லை. (முன் கூட்டியே உண்மையை உணரும் அறிவு இல்லை.)

## 732

(நம் சுவைக்குத்) தகுதியில்லாதவனிடம் நட்புக் கொண்டு எவ்வளவு நாட்கள் இவ்விதமே (வீணில்) கழிந்து விட்டன. விளையாத நிலத்தில் விதைத்தால் இருண்ட மேகம் பொழிந் தாலும் விளையாது.

## 733

வெளிப்படச் சொன்னால் அடிக்கின்றனர். திரைக்குள்ளே ஒருவரும் பார்ப்பதில்லை; காலடியில் ஒளிந்திருக்கிறது, சொல்லி யார் எதிரியாவது?

## 734

எதுவரை தாரகைகள் ஒளிருமோ அதுவரை சூரியன் உதிக்க மாட்டான். எதுவரை உயிர் வினை வயப்பட்டு வாழுமோ அதுவரை ஞானம் நிறைவடையப் போவதில்லை. (ஞானம் பூர்ணமானால் வினை வட்டம் அறுந்துவிடும்.)

## 735

தன் கையின் பலத்தை நம்பு. பிறரை நம்புவதை விட்டு விடு. யார் முற்றத்தில் நதி ஓடுகிறதோ அவன் ஏன் தாகத்தால் சாக வேண்டும்? (சுய சாதனையால் நன்மை அடை.)

## 736

குணம் நிறைந்த கொடியே! உன் குணம் வருணனை செய்ய முடியாதது. வேரை வெட்டினால் துளிர்க்கிறாய்! நீரூற்றினால் கருகுகிறாய். (ஞானம், தியானம் ஆனந்தம் அல்லது குண்டலினி, மூன்றையும் கொடியாகக் கொள்ளலாம். அந்தக் கொடி உலகில் வேரூன்ற விடாதபோது துளிர்க்கும். பொறியின்ப நீரூற்றினால் கருகும்.)

## 737

தோட்டத்தில் தர்ப்புத்தியை வளர்க்கிறாய். அது கசப்புச் சுரைக்காய் போன்றது. கொடியும் கோணல், பழமும் கெட்டது, அடி மண்ணும் கெடும். இலை முதலாக ஒரே கசப்பு.

## 738

நாம் உயர்குல அன்னம் என எண்ணினோம். அதனால் சேர்க்கை கொண்டோம். கொக்கின் குணம் படைத்தவன் என்று அறிந்தால் அங்கத்தைத் தொடக்கூட விட்டிருக்க மாட்டோம்.

## 739

குணம் உள்ளவன் குணத்தை ஏற்றுக்கொள்வான். குணமற்றவன் குணத்தை (வெறுத்து) ஒதுக்குவான். எருதிடம் சாதிக்காயைக் கொடுத்தால் என்ன அறியும்? என்ன சாப்பிடும்?

## 740

வயலும் நல்லது; விதையும் நல்லது; விதைத்ததும் நன்றாகக் கை நிரம்பத்தான் விதைத்தோம். பிறகு செடி வாடிற்று என்றால் இந்தக் குணம் (குறை) வயல் பண்பாட்டில் தான் (குறைவில்தான்) இருக்க வேண்டும்.

## 741

வாத்தியம் வாசிப்பதைக் கேட்டோம். எல்லாத் தந்திகளும் அறுந்துவிட்டன. வாத்தியம், பாவம் என்ன செய்யும்? வாசிக்கிறவன் போய்விட்டான். (சரீரம் - ஆத்மா)

## 742

பிறர் சொல்லைக் கேட்டுக் கேட்டு வயலில் மண் விழுந்தது. வெளி மண்ணின் குவியலினால் வயலே வீட்டை அழித்து விட்டது.

## 743

பார்த்தோம், பார்க்கச் செய்தோம். பார்த்துக் கொண்டே இருந்தோம். ஆனால் குறியை மட்டும் எய்து வீழ்த்த முடியவில்லை. எல்லா அம்புகளும் காலியாயின. வில்லை எறிந்து விட்டுப் போய் விட்டோம்.

## 744

நான் பார்த்திருக்க உலகம் போய் விட்டது. (உலகம் முழுவதையும் பார்த்து விட்டேன்) தன்னதைச் சொல்லி நான் சொல்வதையும் கேட்டு இருவரும் ஒன்றாகும் தன்மை கொண்ட ஒருவரும் கிடைக்கவில்லை.

## 745

தேசம் முழுவதும் சுற்றினேன். ஊர் ஊராக வளைய வந்தேன். போர்வையை உதறி எரியும் ஓர் ஆள் எனக்குக் கிடைக்கவில்லை. (போர்வை-சாரமற்ற மேற் கூடு)

## 746

பொருள் இருக்கிறது. வாங்குபவன் இல்லை. அந்தப் பொருள் விலை அதிகம். கையில் காசில்லாத மனிதன் அலைந்து சுற்றுகிறான். (பொருள்.பேருண்மைப் பொருள்)

## 747

சிங்கம் நிமிஷத்துக்கு நிமிஷம் ஓடி வனத்தில் தனியே சுற்று கிறது. தன் காடு எப்படியோ மற்றக் காடும் அதற்கு அப்படித் தான்.

## 748

வீட்டிற்குள் உட்கார்ந்திருக்கிறான். (அவன்) மிகவும் உன்னிப்புடன் உட்கார்ந்திருக்கிறான். எப்பொழுது எப்படிப் பட்ட போக்கை விரும்புகிறானோ அப்படிப்பட்ட புத்தியைக் கொடுக்கிறான்.

## 749

நன்கு ஆக்கப்பட்ட மனிதன் புத்தியில்லாது போனால், வீண் மணம் இல்லாத பூவின் சிவப்பு (அழகிய) நிறத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வீர்கள்?

## 750

முன்னே முன்னே நெருப்பு பொசுக்குகிறது. பின்னாலேயே அது பசுமை கொண்டு வருகிறது. வேரை அறுத்தவுடன் பழுக்கிறதே அந்த மரத்துக்கு நாம் பலியாகிறோம். (பாராட்டு கிறோம்.) (தியானத்தில் ஏற்படும் முக்தி நிலை அல்லது குண்டலின் சக்தி).

## 751

"சர்ஹர்" என்ற மரம்: பிரமாதமான பழங்கள். நன்கு முற்றியவை. ஆனால் அநேக சிறு பறவைகள் (லால் என்று பெயர் கொண்டவை) அவற்றைப் பெற முயன்று முயன்று இறந்தன. பழங்கள் இனிமைதான்; ஆனால் தொல்லை அதிகம்.

## 752

எல்லா மரத்தடியிலும் சென்று எல்லாப் பழங்களையும் சுவைத்துப் பார்த்து விட்டேன். இப்பொழுது கபீர் மீண்டும் மீண்டும் காட்சிப் பிச்சையை மட்டும் தான் கேட்கிறார்.

## 753

பாரசக் கல் பட்டுப் பொன்னானது மீண்டும் இரும்பாகாது. அதே போலப் பலாசக் கிளையிலும் சந்தன மணம் ஏறிவிட்டால் அதைப் 'பலாசம்' என்று சொல்ல மாட்டார்கள்.

## 754

பக்தி பக்தி என்று எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் பக்தி ஒன்றுக்கும் உபயோகம் ஆகவில்லை. எங்கே நம்பினோமோ அங்கிருந்தே இடி விழுந்தது.

## 755

சுகமாகிற கடலை நான் படைத்தேன். ஆனால் துக்கமே வந்து சேர்ந்தது. தன் நிலையை யாரும் பிடித்ததில்லை. ஏழை, அரசன் இருவரும் சென்று விடுகின்றனர்.

## 756

எல்லோரும் எழுதுவதிலும் படிப்பதிலும் ஈடுபட்டிருக்கின்றனர். இந்தக் குணத்தை ஒருவரும் விடுவதில்லை. எல்லோரும் பிரமையாகிற வலையில் விழுந்து இந்தப் பிறவியை இழந்து விட்டார்கள்.

## 757

மற்றவருக்கு எப்படி நடந்ததோ உனக்கும் அப்படியேதான் நடக்கும். காசு காசாகச் சேர்த்து இலட்சம் கோடி என்று நிரம்பும்.

## 758

ஒன்பது மணு பால் சேர்த்தும் (மோரின்) ஒரு சொட்டு விட்டு வீணாகி விட்டது. பால் உடைந்து திரிந்துபோய் விட்டது. நெய்யும் வீணாகி விட்டது.

## 759

மனிதா, உன் குணம் (பெருமை) பெரிது தான்! மாமிசம் ஒன்றுக்கும் ஆகாது. உன் எலும்பு ஆபரணமாகாது. தோலும் வாத்தியத்துக்கு உபயோகப்படப் போவதில்லை!

## 760

முதலில் ஒன்றாயிருந்த அது பன்னிரெண்டு வழியாக ஆயிற்று. உரைகல்லில் உரைக்கத் தாங்கவில்லை. வெறும் பித்தளை யாயிற்று. (கடவுளை அடையும் வழி ஒன்றல்ல, பல ஆயின. ஒன்றும் சரியில்லை.)

## 761

பட்டுத்துணி நீரை ஏந்தாது. தோழியிடம் அழுது சொன் னேன். கம்பளி எவ்வளவுக் கெவ்வளவு நனையுமோ அவ்வளவுக் கவ்வளவு பளுவாகும்.

(பட்டு எளிதில் நீரில் நனையாது. கம்பளி நனைந்து பளுவும் பெறும். அன்பு நீரில் நனைய கம்பளியின் குணம்தான் தேவை; அதாவது ஏழைமை)

## 762

மிகவும் ஈடுபாட்டுடன் மக்கள் பதங்களைப் (அன்புப் பாடல்களைப்) பாடுகிறார்கள். ஆனால் சந்தேகத்தின் சிக்கல் மாத்திரம் அறுகிறதில்லை. நம்பிக்கை ஒன்றில்லாமல் அவர்கள் எல்லோரும் உமியைத் (தோலியைப் புடைத்துத்) தட்டு கிறார்கள்.

## 763

(எங்கே) பாதை வழுக்கு(மோ அம்) மாதிரி ஒரு குன்றின் உச்சியில் கபீருடைய வீடு இருக்கிறது. எறும்பின் கால்கூட அங்கே வைக்க இயலாது. அங்கே (ஜீவன்) எருது எப்படிச் சுமந்து போக முடியும்? (மிகவும் சூட்சுமத் தன்மையை அடைந் தவன் தான் கபீர் அடைந்த நிலைமையை அடைய முடியும்.)

## 764

தன் தலையில் எவ்வளவு வந்ததோ அவ்வளவு வரை ஒப்புக்கொண்டு விட்டார்கள். ஆனால் ஹரியின் சேதி தெரிந்து கொள்ள மிகவும் அரியது. ஒருவரும் தெரிந்து கொள்ளவில்லை. (தன் புத்திக்கு எட்டியதை எல்லோரும் சரி என்று எண்ணு கிறார்கள். ஆனால் ஹரியைப் பற்றிய கருத்து அவ்வளவு சுலபமல்ல.)

## 765

வழி இல்லாமல் துறை மறந்து விட்டது. தற்பெருமையில் உண்மை வேஷம் (நிறம்) மறந்து விட்டது. உலகம் முழுவதும் எவனுடைய கஞ்சி பரவியிருக்கிறதோ அவன் அறியப்படவில்லை.

(அவன் உலகத்தின் வழியை மறந்தும் மாயையில் ஈடுபட்டும் அவனை மறந்து விட்டோம்.)

## 766

மேலே (புறத்தே) உள்ள இரு கண்களும் போய்விட்டன. (தம் வேலையை உண்மையாகச் செய்யாமல் தப்பிதம் செய் கின்றன.) பிறகு இதயத்தின் கண்களும் (விவேகமும்) பார்க்கிற தில்லை. கபீர் சொல்கிறார் : "யாருடைய நான்கு கண்களும் போய்விட்டனவோ அவனுக்கு யார் உதவ முடியும்?"

## 767

யதி, சதி எல்லோரும் தேடுகிறார்கள். மனத்தில் தோல்வியை ஒப்புக்கொள்கிறதில்லை. பெரிய பெரிய வீரர்கள். எல்லோருமே தப்பவில்லை என்று கபீர் கூவிக் கூவிச் சொல்லுகிறார்.

## 768

ஒன்றை (நன்கு செய்து) முடித்தால் எல்லாம் தானே முடியும். எல்லாவற்றையும் (சேர்ந்தாற்போல்) செய்ய முயன்றால் எல்லாமே தொலைந்து விடும். நீ வேரைக் காத்தால் தானே (மரம்) பூத்துப் பழுத்துக் குலுங்கும்.

## 769

ஆண்டவனுடைய அநேக குணங்களை நான் என் இதயத்தில் எழுதி வைத்திருக்கிறேன். தண்ணீர் குடிக்க அஞ்சுகிறேன். அது அந்தக் குணங்களை அழித்து விடும்.

(எப்பொழுதும் விழிப்புடன் இருக்கிறேன், மறவாமல்.)

## 770

தலைவன் விரும்பிக் கூப்பிடுகிறான். என்னால் தான் போக இயலவில்லை. தலைவி (நான்) அழுக்கடைந்தவள்; காதலன் ஒளி கொண்டவன். காலில் எப்படி விழுவேன்?

## 771

பபீஹாப் புள் தன் இறகை (சூளை) விடாது. விட்டு விட்டால் அதன் உடல் எதற்கு ஆகும்? உடல் போனால் பரவாயில்லை. இறகு (விரதம்) போனால் வெட்கம்.

## 772

அன்பு ஆசை இவற்றுடன் சேர யாராவது வந்தால் ஓடிச் சென்று அவர்களுடன் கூடு. உள் ஒன்று (வஞ்சகம்) வைத்து வந்தார்களானால் அவர்களுடன் கூடுவது கெடுதல்.

## 773

நன்றாய்ச் சுதந்திரமாய் உலகில் விளையாடினால் யாரும் நம்மைக் கட்ட முடியாது. நம் தலையில் பளு இல்லாமல் இருந்தால் துறையில் வரி வாங்குகிறவன் என்ன செய்வான்?

## 774

எல்லோருடைய உண்மைப் பேச்சையும் தேர்ந்து எடுத்துக் கொள். கபீர் நன்கு யோசித்துச் சொல்கிறார்: "அதில் ஒரு தலை விருப்பம் காட்டாதே."

## 775

உடல் பெட்டி; மனம் இரத்தினம். இரையாமல் பூட்டி விட்டு நகர். வாங்குகிறவன் இல்லாமல் இனிய சப்தமாகிற முதலைத் திறக்காதே. (ஞானம் தகுதியுள்ளவருக்கே கொடுக்கப்படல் வேண்டும்.)

## 776

தயாளனுடன் (கருணைக்கடலான எம்பெருமானுடன்) மனது சேர்ந்தால் ஒரு வேற்றுமையும் இருக்காது. பனிக்கட்டி உருகி நீராகிறது போல் ஹரிஜனன் (பக்தன்) ஹரியுடன் கலக்கிறான்.

## 777

என்னிடத்தில் இவ்வளவு வலிமை ஏது, வாயைத் திறந்து பாட? தயவு செய்து அடிமைக்கு அவையில் இருக்கமட்டும் இடம் கொடுங்கள். அதுவே போதும்.

## 778

ஆக்கியவனை அறி. உணவுக்கு ஏன் அழுகிறாய்? உள்ளக் கோயிலில் நன்கு நுழைந்து போர்வையை விரித்துத் தூங்கு.

## 779

(மதுகிரி) பிச்சை வாங்கி உண்ணல் எல்லாவற்றையும்விட நல்லது. விதவிதமான தானியங்கள் (உணவு) கிடைக்கும். யாரும் கேட்க முடியாது. வேற்றரசு என்பதே இல்லாத (எங்கும் பரந்த) தனி அரசு அது.

## 780

இந்தப் பிறவிக் கடல் (பவ சாகரத்தின்) நீர் நஞ்சு நிறைந்தது. மனம் தைரியம் கொள்ளவில்லை. சப்தத்தில் நேசம் உள்ள அன்பன் (நாமம் சொன்னவுடன் நலம் தர விழையும் நாரணன்) கிடைத்தான்; கரையேறினார் கபீர்.

## 781

நாமமாகிற இரத்தினம் சாதுக்களிடம் உண்டு. அவர்கள் உள்ளத்தில் அதன் சுரங்கம் இருக்கிறது. நான் இனாமாகத் தருகிறேன். பெற்றுக்கொள்ள ஒருவரையும் காணோம்.

பெயரின் பெருமை தெரிந்தவர் மிகக் குறைவு, சொன்னாலும் கேட்டுக் கொள்கிறதில்லை.

முதல் பாகம்

இரட்டைவரிப் பாக்களின் பகுதி

முற்றிற்று




## கர்த்தா நிருபணம்

எல்லோருக்கும் சான்றே (சாட்சியே) என் கடவுள். அயன் அரி, அரன், ஈசன்வரை அந்த அடிப்படைப் பொருள் அல்ல. மனம் *ஐந்திலிருந்து இருபத்தைந்தை ஆக்கிக் கொண்டது. இவை எல்லாம் உலகை மயக்குகின்றன. (அம் மெய்ப் பொருள்) 'அ'கரம் 'உ'கரம் 'ம'கரம் மாத்திரை (ஓம்காரம், அதற்கப்பாலுள்ள அளவு) இவற்றுக்கு அப்பாலுள்ளது. விழிப்பு, கனவு, உறக்கம், துரியநிலை இவற்றிற்கெல்லாம் மீறி நிற்பது. (1) ராஜஸம், தாமசம், சத்துவம், நிர்க்குணம் இந் நான்கு குணத்துக்கும் அப்பாற்பட்டது. சூட்சுமம், (ஸ்)தூலம், காரணம், மகா காரணம் என்ற உடல்கள் சேர்ந்து நுகர்ச்சியின்பத்தை ஏற்படுத்துகின்றன. (2) தே(ஜ)சு, விசுவம், பராகம், ஆத்மா ஆகியவற்றில் அந்தச் 'சாரம்' இல்லை. (3) வைகரி, மத்யமா, பச்யந்தி, பரா என்ற நான்கு வகை வாணிகளும் (ஓசைகளும்) அதைப் பேசவில்லை.

[குறிப்பு : இந்தப் பாடலில் யோகப் பயிற்சி, சித்தாந்தம், வேதாந்தம் ஆகியவற்றைப் பயில முயலுபவர்களுக்குத் தெரிய வேண்டிய உள், வெளியுறுப்புக்கள் (தத்துவங்கள் என்பர்) பேசப்பட்டிருக்கின்றன. இவற்றுடன் ஒட்டியும் ஒட்டாதும் நிற்கும் பொருளே அவர், கடவுள்.

*ஐந்து தத்துவங்கள் : அ வ ற் றி ன் (ஐயைந்து வீதம்) பிரகிருதிகள் :

| வெளி | வளி | நீர் | நெருப்பு | பூமி |
|---|---|---|---|---|
| அவா | ஓடுதல் | சோதி | தாகம் | தோல் |
| வெகுளி | நடுங்குதல் | வியர்வை | பசி | மயிர் |
| பற்று | படுத்தல் | ரத்தம் | தூக்கம் | ஊன் |
| மருள் | நடத்தல் | எச்சில் | களைப்பு | நரம்பு |
| அச்சம் | ஐயம் | மூத்திரம் | சோம்பல் | எலும்பு |

[வேதாந்தப்படி எண்ணமே (சூக்கும உயிரே) உடலை ஆக்கிக் கொள்கிறது.]

## 1

1. ராஜசம் முதலிய முக்குணங்கள். நிர்க்குணம்—குணமற்ற நிலை.

2. பரமாத்மன் உயிர்களின் விழிப்பு நிலையில் ஒட்டும் போது விசுவம் அல்லது வைசுவானரன் என்றும், உறக்க நிலையில் ஒட்டி இயங்கும் போது தேஜசு அல்லது தைஜசன் என்றும், கனவு நிலையில் ஒட்டி உறங்குவது போல நிற்கும் போது பராகன் அல்லது பிராக்ஞன் என்றும், ஆத்மனிலேயே நிலைக்கும் போது ஆத்மா என்றும் குறித்துப் பேசப்படுகிறது.

3. வாக்கு மூலத்திலிருந்து கிளம்பிப் பிறர் செவிக்குப் படும் வரை நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. அப்பகுதிகளை முறையே பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்று சொல்கிறார்கள். மத்யமா, வைகரீ இரண்டையும் கேட்க முடியும். மற்ற இரண்டும் முறையே ஞானிகள், யோகிகள் இவர்களே உணர முடியும் என்பர் பெரியோர்.

ஐந்து உரைகளுக்கும் அப்பால் பார். இவற்றில் சாரம் இல்லை. (1) ஐந்து வகைத் தொழில்கள், ஐந்துவகை அறிவுகள் எல்லாம் இந்திரியங்களே! சித்தமும் உள் உறுப்பே. இவற்றில் அந்தச் சாரப்பொருள் இல்லை. (2) கூர்மம், சேஷன், கிர்கிலா, தனஞ்ஜெயன், தேவதத்தன் இந்த வாயுக்களைப் பார் : (3) பதினான்கு உறுப்புக்களிலும் பார்க்கக் கூடாத அந்தப் பொருளைக் காண முயலாதே. (4) 'தத்', 'த்வம்', 'அஸி' என்ற பாதங்களின் கருத்தை நன்கு புரிந்துகொள். (5) அஜஹதலட்சணையில் பேசினால் ஜஹதம் என்றறி: ஜஹதம் பேசினால் அது அஜஹத லட்சணைப் பொருளாயிருக்கும். சற்குரு தான் உண்மைச் சொல்லைப் பிரித்து மெய்ப்பொருளைக் காட்டுவார். அவ்விதம் பிரித்து எடுத்துத் தனியே பாடத் தெரிந்தவனே பூரணமானவன் என்று கபீர் சொல்கிறார்.

[*ஐந்து உரைகள், கோசங்கள் என்று சொல்லப்படும். அவை அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமய கோசம் என்று பேசப்படும். அவை எல்லாம் உண்மைத் தத்துவத்துக்கு உரைகள் போல.

1 கருமேந்திரியங்கள்: கை, கால், வாய், எருவாய், கருவாய் — 5
ஞானேந்திரியங்கள்: மெய், வாய, கண், மூக்கு, செவி.— 5

2. கூர்மம் முதலியவை வாயுக்கள் : தமிழில் பின் வருமாறு மொழிபெயர்க்கப் படுகின்றன.

கூர்மம்—விழிக்காற்று: சேஷன் அல்லது நாகன் = தும்மற் காற்று: கிர்கலா அல்லது கிருகரன் = கொட்டாவிக் காற்று. தனஞ்ஜயன் = வீங்கற்காற்று. தேவதத்தன் = இமைக்காற்று.

3. பதினான்கு உறுப்புகள்: கருமேந்திரிய ஞானேந்திரியங்கள் மொத்தம் கூட்டினால் பதினான்கு தனித்தனி உறுப்புக்களாகும். கண்கள்—2. மூக்கு-1, செவி-2, வாய்-1, மெய்-1, கால்கள்-2, கைகள்-2, நாக்கு-1, எருவாய்-1, கருவாய்-1: ஆக-14.

4. தத்,த்வம், அஸி என்பது வேதாந்தக் கொள்கையின் பேச்சு. அது நீயாக இருக்கிறாய் (பரம்பொருளே நீ) என்று பொருள்படும். அது என்பது எது, அதன் முழு இலக்கணம் என்ன? நீ யார்? இரண்டும் எப்படி ஒன்றாக முடியும் என்றெல்லாம் எடுத்து விளக்குவதே வேதாந்த சாத்திரத்தின் பரப்பு, உபநிடதங்களின் உள்ளடக்கம்.

5 ஜஹதலட்சணம் = விட்ட ஆகு பெயர்.
அஜஹதலட்சணம் = விடாத ஆகு பெயர்.

அந்தப் பரம்பொருள் இந்தப் பாடலில் வந்துள்ள தத்துவங்களுடன் ஒட்டியும் ஒட்டாமலும். ஒட்ட ஒட்டாமலும் அறியப்பட வேண்டியிருக்கிறது என்பதைக் குறிக்கவே கபீர் ஜஹத், அஜஹத் என்ற இரண்டு லட்சணங்களையும் எடுத்துப் பேசுகிறார்.]

## 2

என் கண்ணில் முத்து வந்திருக்கிறது, (நான் அதைப் பார்த்திருக்கிறேன்) ஒருவன் இலேசானது என்று சொல்கிறான். ஒருவன் பளுவானது என்று சொல்கிறான். இருவரும் ஏமாந்தவர். பிரும்மா விஷ்ணு மகேசுவரன் களைத்தனர்; அவரைத் தேடி அடைந்தவரல்ல. ஆதிசேஷன், சாரதா, சங்கரர் படித்தும் பேசியும் களைத்துப் பலவாறு புகழ்பாடி நிற்கின்றனர். எள்ளுக்கும் உள்ளே- எள்ளின் உள்ளே இருக்கிறார். சாதுக்கள் அபூர்வமாகத் தான் அடைந்தனர். நான்கு தளமுள்ள கமலமான மூலாதாரச் சக்கரத்திலிருந்து திரி குடியில் (புருவங்களுக்கு இடையே) அலங்கரித்து ஓம்காரத்தைப் பார்த்திருக்கிறேன். ரகாரப் பதம், வெண்மையான சூனியம், மதம், ஆறுதளச் சக்கரம் (இலிங்க மூலத்தின் அருகே உள்ளது) எல்லாம் பார்த்திருக்கிறேன்.

பரப்பிரும்பம் மகா சூனியத்தின் நடுவில் (இருக்கிறார்.) அவர் தான் நிரக்ஷரரைத் தோற்கடித்தார். புருவமத்திக் குகையில் சோஹம் இருந்து புல்லாங்குழல் அதிகம் வாசிக்கிறார். சத்ய லோகத்தில் சத்ய புருஷன் அமர்ந்திருக்கிறார். பார்க்கமுடியாத, அடைய முடியாத இரண்டுக்கும் பிரகாசமாகிவிட்டது. பெயர் அற்ற புருஷன் எல்லோருக்கும் சுவாமி, பிரம்மத்தையும் தாண்டிச் சென்றவர். இந்த விஷயமெல்லாம் உடலின் அண்டத்தின் பிரதி பிம்பமாகப் பார்த்திருக்கிறேன். பிண்டம் (உடல்) பிரும்மாண்டத்தின் பிரதி பிம்பம். அசல், நகல் இரண்டையும் கரை கண்டு விட்டேன். கபீர் சொல்கிறார்: "சத்ய லோகம்தான் உண்மை. அந்தத் தனித் தலைவனை அடைந்து விட்டேன்."

## 3

சாதுக்களே! பீஜகமே (ஆதார மந்திரம்-கபீர்தாஸர் மதம்) மனத்துக்குப் பிரமாணம். பலர் தேடித் தேடிக் களைத்தனர். அபூர்வமாக ஓரிருவர்தான் அறிந்தனர். நான்கு யுகத்திலும், நான்கு வேதங்களிலும் பல சமயங்களை வெகுவாகப் பாடியிருக்கின்றனர். விஷ்ணு, பிரும்மா, ருத்திரன், இருடிகள் பாடினர். ஆதிசேஷன்கூடக் கரை காணமுடியவில்லை. ஒருவர் 'நிர்க்குணம்' என்பார். ஒருவர் 'சகுணம்' என்பார். ஒருவர் ஜோதி என்று நிலை நாட்டுவார். ஈசுவரனுக்குப் பெயர் எல்லோரும் சொல்வர். உருவத்தைக் காட்டார். ஒருவர் "சூட்சுமம், அஸ்தூலம்" என்பார். ஒருவர் அக்ஷரம்தான் நிஜமான உண்மை என்பார். சற்குருவை அருமையாகத்தான் அறிகின்றனர். பொய்யை எல்லாம் ஏமாந்து தேடித் திரிகின்றனர்.

பேராசை கொண்ட பக்தி விருப்பத்தைப் பூர்த்தி செய்யாது. இறைவன் மிகவும் கெட்டிக்காரன். அடைய முடியாத, பார்க்க முடியாத உலகத்தின் தலைவனை எல்லோரும் பார்த்தோம் என்பார்கள். வழியும் தெரியாது. வழிச் செல்பவனையும் காணோம். தேடித் திரிகின்றனர்.

ஒருவர் சூனியம் கண்டேன்; சோதியே பிரமாணம் என்பர். ஒருவர் சொல்வார் : உருவம் இல்லை; வரி வடிவம் இல்லை. அதை யார் தியானத்தில் பிடிப்பது என்பார். ஒவ்வொரு மயிர்க்காம்பிலும் படைத்தவர் வெளியாகிறார். ஏன் ஏமாற வேண்டும்? கட்சி எதிர்க்கட்சி பேசி எல்லோரும் களைத்தனர். ஒருவரும் கர்த்தாவை எண்ணவில்லை. எந்த உருவம் உண்மை

ஆண்டவன்? இதை ஒருவரும் விவரிக்கவில்லை. அநேக அடையாளங்கள் பேசி நம்பிக்கை ஏற்படச் செய்வர். உண்மையை மறந்து விடுவர். கோடிப் பிறவிகளை அழுது இழப்பர். தரிசனத்தை எங்கும் அடைந்திரார். பெருங்கருணையாளன், பரம புருஷன், உத்தமன் அவனை எந்த மனிதனும் அடையாளம் காணலாம். அவனிடம் மனதினை இழந்து தானே இன்பம் அடைய லாம். பல மதச் சம்பிரதாயங்களின் ஞானிகள், கொலைகாரர் வேலை செய்து பக்தியைக் கெட்டிப்படுத்துகிறார்கள்! பீஜக மதத்தை மிகச் சிலர்தான் அறிவர். தான் என்ற முனைப்புக் கொண்டவர்கள் ஏமாந்து திரிகின்றனர்.

கபீர் சொல்கிறார்: "படைத்தவனுள் எல்லாம் அடக்கம்; கர்த்தா எல்லாவற்றிலும் இருக்கிறார். இந்த ரகசியம் தெரியாமல் எல்லோரும் மோகத்திலும் விழுந்திருக்கின்றனர். சாதுவை, நல்லவராயுள்ள ஓரிருவர்தான் அறிவர்.

## 4

அந்த ஆண்டவனுடன் சேர். இரண்டு வகைத் துக்கத்தையும் தீர்த்துக்கொண்டு துணையுள்ளவனாக ஆகு. அவன் தசரதன் குலத்தில் பிறந்து வரவில்லை. இலங்கையரசனை ஒறுக்கவில்லை. தேவகி கருவிலிருந்து வந்தவன் அல்லன். யசோதாவின் மடியில் விளையாடவில்லை. பூமியை ஆளவில்லை. ஒருவரையும் அடக்க வில்லை. பாதாளத்தில் அமுக்கிப் பலியை ஏமாற்றவில்லை.

அவன் அரசனான பலியிடத்தில் வீண் கட்சி செய்யவில்லை. ஹிரண்யாகுசனை எடுத்து அடிக்கவில்லை. (க்ஷத்திரியர் களை) வீரர்களைக் கொன்று உலகத்தை க்ஷத்திரியர்கள் களற்றதாக ஆக்கவில்லை. (பரசராமர் அவதாரம் எடுத்தது அவரல்ல!)

அவன் கோவர்த்தன மலையைத் தன் கையில் தாங்கவில்லை. இடையர்களுடன் காடுகளில் சுற்றவில்லை. அவன் கண்டகி நதிக் கரையில் இருக்கும் சாளக்கிராமக் கல் இல்லை. நீரில் துளையும் மீன், ஆமையுமல்லன், துவராபதியில் உடலை விட்டவனும் அவன் அல்ல. ஜகன்னாதத்தில் சரீரத்தைப் புதைத்தவனும் அல்லன்.

கபீர் கூவிச் சொல்கிறார்: "அந்த வழியில் ஏமாறாதே. அங்கே அனுமானத்தில் பேசுகிறார்கள். அவர் (ஸ்)தூலமல்ல; அஸ்தூலம்.

[மேலே குறிப்பிட்டவர் எல்லாம் பரம்பொருள் அல்லர். பரம்பொருள் பருப் பொருளல்ல, கண்கள் பார்க்க முடிவதற்கு.]

## 5

சந்தர்களே, வந்து போவதெல்லாம் மாயை. ஆளுகின்ற அவருக்குக் (எமன்) காலன் கிடையாது. மீனாவதற்கும் ஆமையாவதற்கும் என்ன கருத்து? (இல்லை.) அவர் சங்காசுரனைக் கொல்லவில்லை. (கொன்றவர் அவர் இல்லை.) அவர் தயவு நிறைந்தவர். எவரிடத்திலும் பகை கொண்டவர் அல்லர். அவர் யாரைக் கொல்வார்? சொல்லுங்கள். அந்தக் கர்த்தர், (ஆண்டவன்) பன்றி என்று சொல்லப்படமாட்டார்; அவர் பூமியின் சுமையைத் தாங்கியவரும் அல்லர். இதெல்லாம் ஆண்டவன் வேலையே இல்லை.

உலகம் பொய்யைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. தூணை உடைத்து எவன் வெளியே வந்தானோ அவனை உலகம் நம்புகிறது. ஹிரண்யாட்சனை நகத்தினால் வயிறு கிழித்தவன் ஆண்டவன் அல்ல. (அவர்) வாமன ரூபம் எடுத்துப் பலியிடம் பிச்சை கேட்கவில்லை. கேட்பது மாயை. விவேகம் இல்லாமல் உலகம் எல்லாம் மோசம் போகிறது. மாயை உலகத்தை ஏமாற்றுகிறது. பரசுராமன் வீரர்களைக் கொல்லவில்லை. அந்த வஞ்சனை மாயை செய்தது. சத்குருவின் பக்தி பேதம் அறியாது உயிர்க்குப் பொய்யற்றதைத் தருகிறது. ஆக்கியவன் (ஆண்டவன்) சீதையை மணக்கவில்லை. கடலிற் கல்லால் (பாலம்) கட்டவில்லை. அவரும் இரகுநாதனும் ஒன்று என்று நினைப்பவன் குருடன்.

இடையனாக ஆயர்பாடிக்கு அவர் வரவில்லை. வந்து தன் கையால் கம்சனைக் கொல்லவில்லை. எல்லோரிடமும் தயவு காட்டும் ஆண்டவன் யாரிடமும் தோல்வியுறவில்லை. யாரையும் வெற்றி கொள்ளவில்லை. கர்த்தா, புத்தர் என்று சொல்லப்பட மாட்டார். அசுரனைக் கொன்றதுமில்லை. உண்மை ஞானம் அற்றதாகச் செய்து மாயை உலகை ஏமாற்றி அழித்துவிட்டது. அந்தக் கர்த்தா களங்கம் உள்ளவராக ஆகவில்லை. இந்த ஏமாற்றம் எல்லாம் மாயை செய்தது. பதி, சதி எல்லாரையும்

ஏமாற்றிற்று. பத்து அவதாரம் எல்லாம் ஈசுவரனுடைய மாயை. அவற்றைக் கர்த்தாவினுடையவை என்று சொல்லிவிட்டனர். கபீர் சொல்கிறார் : "சந்தர்களே கேளுங்கள். உருவம் எடுத்து மறைகிறவன் வேறு ஒருவன். அது அந்த அண்டவன் அல்ல."

## ஆண்டவன் பெருமை

### 6

உருவம் அடையாளம் ஆகியவை என்ன என்று எப்படி விரித்துப் பேசுவேன்? பார்த்தவர் வேறு யார்தான் வரப் போகிறார்கள்? ஓங்காரம் எல்லையற்றது. அதே ஆதிபுருஷனை அறியவில்லை. அந்தப் பொருளின் 'குலரகசியத்'தை என்ன சொல்வேன்? நட்சத்திரங்கள் இல்லை. சூரியன் சந்திரன் இல்லை. தந்தையின் விந்து ஒன்றும் கிடையாது. நீர் இல்லை; தரையும் இல்லை: நிலைத்து நிற்கும் காற்றுப் போன்றதும் இல்லை, என்ன பெயர் வைப்பது? அந்த ஆணையாளனை எப்படி வருணிப்பது? இரவு பகல் ஒன்றும் ஆவதில்லை. அப்படிப்பட்டவருக்கு என்ன சாதி குலம் சொல்வது? சூனியமான ஆன்ம ஒளி நிறைந்த மனத்தில் ஒரு சோதி வெளியாயிற்று. அந்தப் புருஷ ஒளி எதையும் ஆதார மாகக் கொண்டதில்லை. அந்த ஒளிக்கு நாம் அழிகிறோம்; அதற்கு நாம் ஆழ்ந்த பெருமை காட்டுகிறோம்.

### 7

எல்லா உலகத்துக்கும் ஒரே காலன்தான். ஒரே பெயர்தான் உலகத்துக்குப் பிரியமானதும். பெண் ஆண் என்று ஒன்றும் சொல்ல முடியாது. (ஒன்றும் மாறுபாடு இல்லை.) எல்லா உருவத்துள்ளும் அவர் அடங்கியிருக்கிறார். உருவம் கொண்டது, அருவமானது என்று ஒன்றும் பேசமுடியாது. லேசானது, கனமானது என்று நிறுத்துப் பார்க்க முடியாது. பசியும் இல்லை, தாகமும் இல்லை. வெயிலும் இல்லை, நிழலும் இல்லை. அந்த நிலையில் துக்கம் சுகம் ஒன்றும் இரா. அதனுடைய என் (கருத்து) அபரமம், பரமம் முதலிய வழிகளில் இல்லை. கபீர் கூவிச் சொல்கிறார் : "அதை அற்புதம் என்று சொல்."

### 8

ராமனுடைய குணம் தனித்தது, தனித்தது, தனித்தது. புரியாதவர்களுக்கு எவ்வளவு தூரம் எடுத்துச் சொல்வது?

புரிந்தவர் நன்கு யோசியுங்கள். ராமச்சந்திரன் என்று தவசி போன்றவர்கள் எவ்வளவு பேர் இந்த உலகத்து இன்பம் ஊட்டியவர்? குழலூதிக் கண்ணன்கள் தாம் எவ்வளவு பேர்? அவர்களுக்கும் முடிவு இல்லை. மீன் ஆமை பன்றி உருவம் கொண்டவர்கள்; வாமனன் என்ற பெயர் தரித்தவர்கள்; எவ்வளவு குற்றமற்ற புத்தர்கள் ஏற்பட்டனர்?—அவர்களுக்கும் எல்லை இல்லை. எவ்வளவு சித்தர்கள், சாதகர்கள், சந்நியாசிகள்? அவர்கள் எல்லாம் வனத்தில் வசித்தவர்கள். எவ்வளவோ பேர் கோரக் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கும் முடிவு கிடைக்கவில்லை. எவருடைய நிலையைப் பிரும்மா அடையவில்லையோ, சிவன், ஜநகர் முதலியவர் தேடிக் களைத்தனரோ அவருடைய குணத்தைச் சாதாரண மனிதன் எப்படித் தெரிந்து சொல்வான்?—என்று கபீர் கூவிக் கேட்கிறார்.

## 9

ஹரியை வைத்துக் கொண்டு (உலகம்) நடத்தும் சூதாட்டத்தை நாம் இப்பொழுது அறிந்து கொண்டோம். பறை (ஆடம்பரம் காட்டி) அடித்துக்கொண்டு எல்லோரும் வேடிக்கை காட்டுகிறார்கள். பிறகு எல்லோரையும் கூட்டுகிறார்கள். ஹரியின் ஆட்டத்தில் தேவர், மனிதர், முனிவர் எல்லோரும் மோசம் போகின்றனர். மாயை ஏமாற்றி விட்டது. வீட்டில் மந்திரம் போட்டு எல்லோரையும் ஏமாற்றி விட்டது. இதயத்தில் ஞானம் ஏற்படவில்லை. மந்திரம் பொய், மந்திரவாதி உண்மை: சாதுக்களின் புத்தி இம்மாதிரி. யாருடைய அறிவு எப்படியோ அதற்குத் தக்க நிலையையே அவரவர்கள் அடைந்தனர்.

## 10

'க்ஷேமம், குசலம், சஹிசலாமத்' (எல்லா வகையிலும் நன்மையுடன் இருத்தல்) என்பதை யாருக்குக் கொடுத்திருக்கிறார்? சொல். போவது வருவது இரண்டு விதத்திலும் கொள்ளை! எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டார். தேவர், மனிதர், முனிவர் எல்லோரும் சரி; பீர், ஔலியா அவர்களையும் சரி, தலைவர் எல்லோரையும் படைத்தார். எவ்வளவுதான் என்னுவது? எண்ணற்ற கோடி வரையுள்ளவர்; அவர்கள் எல்லோரும் பிரயாணம் செய்துவிட்டார்கள்.

நீர், காற்று, வெளி அவையும் போய் விடும். சந்திரன் போவான். சூரியனும் போய்விடுவான். அதுவும் போய் விடும், இதுவும் போய் விடும். யாரும் (எதுவும்) இங்கு எப்பொழுதும் இருக்க முடியாது. (குசலம்) நலம் என்று சொல்லிச் சொல்லியே உலகம் அழிவை அடைகிறது. 'குசலம்' என்பது காலதேவனின் பாசம்தான். உலகம் எல்லாம் அழிந்துகொண் டிருப்பதுதான். ஸ்ரீராமன் ஒருவர் தாம் (அவிநாசி) அழியாதவர்.

## 11

அப்படி அறிந்து கொள். அப்பா, அவ்விதம் கொள், நான் எவ்விதம் சொல்வேன்? அது ஆழ்ந்தது. வெளியே என்றால் சற்குரு வெட்கப்படுவார். உள்ளே என்றால் பொய் என்பாய். உள், வெளி எங்கும் இடையறாது நிற்கும் குருவின் பெருமையை (நீயே) பார்த்துக்கொள். பார்வைக்குள்ளோ, பிடிக்குள்ளோ அகப்படுவர் இல்லை அவர். அவர் பார்க்க முடியாதவர், அடைய முடியாதவர். புத்தகத்தில் அவரை எழுதிவிடவும் முடியாது. யார் அறிந்தனரோ அவரே நன்கு தெரிந்துகொண்டார். இல்லை என்றாலும் (உன்னால் பார்க்க முடியவில்லை என்றாலும்) சொன்னதை நம்பு.

நீரின் வழிச் சென்றால்தான் மீனைப் பார்க்க முடியும். பரமதத்துவத்தை எப்படி அறிவாய்? பூவின் மணத்தைவிட மெலிந்தது (அது). பரமதத்துவத்தை அப்படி அறி. ஆகாயத்தில் பறவை பறந்து சென்று விடுகிறது. பின்னால் தேடியும் பார்வைக்குத் தட்டுப்படுகிறதில்லை.

கபீர் சொல்கிறார் : "சற்குருவின் தயவினால் (அதிர்ஷ்டம் கொண்ட) சிலர் அருமையாகச் சப்தத்தைத் தொடுகிறார்கள்."

## 12

பாபா (அந்தப் பரம் பொருள்) அடைய முடியாதது. பார்க்க முடியாதது எப்படி? அதை இவ்விதம் சொல்லித் தெரிவிக்கிறேன். எது பார்வைக்கு வருகிறதோ அது அந்தப் பொருள் அல்ல. இருக்கிறது; ஆனால் அதைப்பற்றிப் பேசிவிட முடியாது. அடையாளம், வார்த்தைக் குறிப்புக்கள் இவற்றின் மூலம் குறிப்புக் காட்டி அறிவுறுத்தலாம்; ஊமை மொழியின் மூலம்! கண்கள் பார்க்க முடியாதது. கைப்பிடிக்குள் பற்ற முடியாதது.

அந்த அற்புதம் அழியவும் இல்லை. இந்த ஞானக் கதையை என் குருநாதன் சொன்னார்.

பண்டிதர்களே, யோசித்துப் பாருங்கள். பார்க்காமல் நம்பிக்கை வராது. சொல்லி ஒருவரும் நம்புவதில்லை. அறிந்தவன் சப்தத்தைப் புரிந்து கொள்வான். ஆச்சரியம் அஞ்ஞானிகளுக்குத் தான். ஒருவர் நிராகாரத்தைத் (அருவத்தைத்) தியானம் செய்கிறார். ஒருவர் உருவம் கொண்ட கடவுளைத் தியானம் செய்கிறார். அவரோ இந்த இரண்டிலிருந்தும் தனித்தவர். அறிந்தவர் அறிவர்.

'காஜி' கிதாப்' குரான் எல்லாம் சொல்வார். பண்டிதர் வேதம், புராணம் எல்லாம் படிப்பார். ஆனால் அந்த 'அக்ஷரம்' (அழியாப் பொருள்) பார்க்கப்பட்டதில்லை. (பண்டிதர், காஜிகளால்) மாத்திரையும் சேர்க்கமுடியாது. காலும் வாங்க முடியாது. (எள்ளளவும் கூட்டிக் குறைத்துவிட முடியாது) நாதவாதிகள், மந்திரவாதிகள் படித்தல் ஆய்தல் என்று எவ்வளவோ கெட்டிக்காரத்தனம் செய்கின்றனர். ஆனால் கபீர் சொல்கிறார்: "நாமத்தின் பக்தியை எவர் அறிந்தாரோ அவர் அழிவு வெள்ளத்துள் விழ (சிக்க) மாட்டார்."

[அக்ஷரம் என்ற சொல்லின் எழுத்து என்ற பொருளுக்கு ஒத்து வரும்படி நீட்டல் குறுக்கல் அடையாளங்களான மாத்திரை அல்லது கால் வாங்குவது முடியாது என்கிறார்.]

## 13

அவதூதரே! இயற்கையின் போக்கு தனிப்பட்டது. அது ஏழையை அரசனாக்கி வைக்கும். அரசனைப் பிச்சைக்காரனாக்கும். இதனால்தான் இரும்பில் பழம் ஏற்படுவதில்லை. சந்தனத்தில் பூப் பூக்காது. மீன் காட்டில் வேட்டியாடி நடம் புரியும். சிங்கம் சமுத்திரத்தின் அடியில் தவிக்கும். முத்துக் கொட்டை மரமாயிற்று. மலயமலை நான்கு பக்கமும் மணம் வீசுகிறது. மூன்று உலகம் பிரும்மாண்ட கண்டத்தில் குருட்டு வேடிக்கை காட்டுகிறது. நொண்டி, மேரு என்ற நன் மலையைத் தாண்டுகின்றான். மூன்று உலகத்தையும் சுதந்திரமாகச் சுற்றி வருவான். ஊமை, ஞானம், விஞ்ஞானம் எல்லாம் வெளிப்படுத்துவான்; அநாஹத நாதம் பேசுவான்,

ஆகாயத்தைக் கட்டிப் பாதாளத்துக்கு அனுப்புவான். ஆதி சேடனைச் சுவர்க்கத்தில் இருக்கச் செய்வான்.

கபீர் சொல்கிறார்: ''ராமன் அரசன். அவர் எது செய்தாலும் அவருக்கு அழகாக இருக்கும்.''

(யோக சித்தி அடைந்தவன் நடத்தையே தனி. அவன் பேசும் மொழியே, அவனைப் பற்றிப் பேசும் மொழியே தனி. உலகினர் போக்கில் பார்த்தால் அவன் அதிசயங்களைப் புரி கின்றான் என்பர். மீன், சிங்கம் முதலியவற்றுக்கெல்லாம் 'கூடார்த்தங்கள்' கொள்ளல் வேண்டும். (மீன் = மாயை. சிங்கம் = உயிர் போன்றது.)

## கர்த்தாயுகம்

## 14

அவதூதரே! மனத்தை அலையவிடுவதை நிறுத்திவிடும். பரப்பிரம்மத்துக்குத் தனித்த அந்த நற்கதி எதனால் கிடைக்குமோ அந்தப் பதத்தைப் பிடித்துக்கொள். அப்பொழுது 'மகாதேவனும்' இல்லை, 'மகம்மதுவும்' இல்லை; ஹரியும் இல்லை; 'ஹஜ்ர'த்தும் இல்லை. ஆதம் இல்லை: பிரும்மம் இல்லை. அப்பொழுது வெயிலும் இல்லை, நிழலும் இல்லை. எண்பதாயிரம் பைம்பரும் இல்லை. எண்பத்தெட்டாயிரம் முனிவர்களும் இல்லை. சந்திரன், சூரியன், நக்ஷத்திரக் கூட்டம் ஒன்றுமில்லை; மீன், ஆமை, உலகம் கிடையா. 'வேதம்' 'கிதாப்' 'ஸ்மிருதி' இல்லை. சமயம் இல்லை. உயிர், மாயை இல்லை. 'பாங்கு' (முகம்மதியர் நமாஸ் படிக்கும்பொழுது முல்லா போடும் அழைப்புக் கூவல்) இல்லை. 'நமாஸ்' (முகம்மதியர் தொழுகை) கமலா, இராமன், குதா ஒன்றும் கிடையா. முதல் ஈறும் நடுவும் கிடையா. நெருப்பு, காற்று, நீர் கிடையா. எண்பத்து நான்கு லட்சம் உயிர்கள் கிடையா. 'சாக்கி' 'சப்தம்', 'வாணி' (பக்திப் பாடல்கள், உபதேசச் சொற்கள்) கிடையாது.

கபீர் சொல்கிறார்: "ஏ யோசனை இல்லாதவர்களே, கேளுங்கள். மேலே யோசியுங்கள். பூரணபிரும்மம் (என்று அழைக்கப் படுபவர்) எங்கிருந்து வெளியாவார்? இந்தச் செயற்கை முறைகளை (கிரித்திரமங்களை) எல்லாம் யார் ஏற்படுத்தினார்?

## 15

எங்கே காற்று தண்ணீர் இல்லையோ அங்கே படைப்பை யார் உண்டாக்கினார்கள்? அங்கே அரும்பும் கிடையாது, பூவும் கிடையாது. அங்கே கருவும் கிடையாது, ஆதாரமும் (வேரும்) கிடையாது. அங்கு வித்தையும் கிடையாது, வேதமும் கிடையாது. சப்தமும் கிடையாது, வருத்தமும் கிடையாது. அங்கே பிண்டமும் கிடையாது, வாசனையும் கிடையாது. பிடிப்பு பூமி, ஆகாயம் வானம் ஒன்றும் கிடையா. அங்கே குருவும் கிடையாது, சீடனும் இல்லை. செல்லமுடியும், செல்ல முடியாது என்ற பேச்சும் இல்லை: வழியும் கடினமானதில்லை. பேரும் ஊரும் இல்லாத, சொல்லமுடியாத அந்த நிலையைப் பற்றி என்ன சொல்வேன்? குணங்கள் அற்றது, உணர்ந்து அறியக் கூடியது அது. அதற்கு என்ன பெயர் சொல்லி அழைப்பேன் ?

### சத்திய லோகம்

[கபீர் மதப்படி மூலக்கடவுள் வசிக்கும் இடம் தியானத்தின் மூலமே அறியப்பட வேண்டியது. ஜீவன் முக்தர்கள் போய்ச் சேரும் பரமபதம்.]

## 16

இந்த ஏற்பாடு செய்தாரே அந்த ஆண்டவனுக்கு (இறைவன், சாஹப்) நான் அடைக்கலம். (சோத்தம் = தோத்து நிற்கின்றேன்.) அவருடைய ஒளியை எவ்விதம் சொல்வாய்? என்னால் சொல்ல(ப்பட) முடியாது. சோதி இல்லாமலேயே எங்கே ஒளி ஏற்படுமோ அவ்வித விளக்காக அது காணப்படுகிறது. அந்தப் 'புருஷன்' சமீபத்தில் அன்னம் (முக்தாத்மா) எக்களிப்புடன் நடம் புரிகின்றது. பலப் பல வண்ணங்கள் கொண்டு தாமரைகள் ஒளிர்கின்றன. தலையில் குடை அலங்கரித்து நிற்கிறது. கோடிக்கணக்கான சூரிய சந்திரர்கள் ஒரு வரிசையில் பிரகாசிக்கின்றனர். கையைப் பிடித்து நகைமுகம் காட்டிப் பேசும்போது அன்னம் இன்பம் கொள்கிறது. வம்சம் - அம்சம் இவற்றையெல்லாம் யார் அறிந்து விசாரித்தார்களோ அந்த உயிர்கள் வீடு அடைகின்றனர்.

பதினான்கு உலகங்கள்வரை வேதத்தின் வட்டம், அதுவரை தான் எமனுடைய ஆட்சி. உலகம் வேதம் இவற்றின் சுளுக்கை யார் அறுத்தார்களோ அவர்கள் அந்த உலகத்துக்குச் செல்லுகின்றனர். ஏழு வேட்டைக்காரர்கள், பதினான்கு பார்த்தர்களும் (புலன்கள்?) தனித்தனி ஆட்டம் ஆட்டுவிப்பர். நான்கு அம்சங்களை யார் விசாரித்து அறிந்தானோ அந்த ஜீவன் முக்தியடைவான்.

பதினான்கு உலகங்களில் பதினான்கு யமன்கள் வசிக்கின்றார்கள். அதுவரைதான் காலனின் பரப்பு. அதற்கு அப்பால் 'நிரஞ்சனன்' (கரையற்ற மூலதேவன்) சூனியத்தின் நடுவே அமர்ந்திருக்கிறான். பதினாறாம் உலகத்தில் ஆறு எழுத்துக் கொண்ட பகவான். அவர்தாம் இந்தச் சிருஷ்டியை ஏற்படுத்தினார். அக்ஷரக் கலை சிருஷ்டியிலிருந்து வெளியாயிற்று. அதிலேயே அடங்கும்.

பதினேழாவது எண்ணில் அதரத் தீவு இருக்கிறது. அங்கே சொல்லுக்கு அப்பாற்பட்டது வீற்றிருக்கிறது. அங்கே 'சகி' அநேக விதமான ஒளி காட்டி நாட்டியமாடுகிறான். அங்கே அநாஹத வாத்யம் வாசிக்கப்படுகிறது. அதற்குமேல் பரமபதம் இருக்கிறது. அதன் மர்மத்தை ஒருவரும் அறியவில்லை. நாம் சொல்வதை யாரும் ஒப்புக்கொள்கிறதில்லை. வேறு ஒருவன் வந்ததும் இல்லை. வேதங்களைச் சான்றாகக் கொண்டு எல்லா உயிரும் சிக்கலுற்றன. பரமபதம் என்ற இடத்தில் தங்கின. மீண்டும் மீண்டும் கெட்டிக்காரத்தனமாகச் சுற்றுகிறார்கள். அந்த வீட்டைமட்டும் அடைந்ததில்லை.

யாராவது உண்மையின் அம்சத்தை (யாவது) விரும்பினால் அவன் என்னை நம்புவான். கோடிக்கணக்கானவர்கள் முயன்றார்கள், களைத்தார்கள். வேறு வழியில் கிடைக்கவில்லை. பதினாறாவது எண்ணுக்கு அப்பால் சமர்த்தனுடைய இடம்; அவர்தான் என்னை உலகுக்கு அனுப்பினார். கபீர் சொல்கிறார் : "வேதத்துக்கு முதற்பொருளின் பேச்சைப் பற்றிய ரகசியம் யாருக்கும் தெரியாது."

*14 உலகங்கள்: பூ, புவ, சுவர், மஹர், ஜன, தபோ, சத்யலோகம் ஆக மேலுலகங்கள் 7; அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ரசாதல, பாதாளம் ஆக கீழுலகங்கள் 7.*

*7 வேட்டைக்காரர் : தோல், ரத்தம், மாமிசம், மேதை, எலும்பு, மஜ்ஜை, சுக்கிலம் : முதல் பாடலில் காண்க.*

4 அம்சங்கள் : பிரகிருதி, ஈசன், ஜீவன், மாயை.

[பதினேழு உலகங்கள்; அதற்கப்பால், அதையும் தாண்டிப் பரமபதம் இருக்கிறது என்கிறார் கபீர். அதை சத்ய லோகம், சாகேதம் என்றும் அழைப்பார். தியானத்தின்மூலம் உடலிலேயே படிப்படியாக ஏறிச் 'சூன்ய' நிலையில் ஆத்மா பரமாத்மாவாக மாறும் நிலைதான் அது.]

## 17

அந்த உலகத்தை நாம் அடைந்தபொழுது துக்கம் எல்லாம் தொலைந்தது. சற்குரு அன்னத்தின் (பரிசுத்தமான உயிர்) உருவத்தைத் தந்தார். எப்படிக் குளவி புழுவைத் திருப்பிக் குள்வி யாக்கிற்றோ அப்படியே (குருவும்) தன்னைப்போல் உருவம் தந்து பறக்கவைத்து இட்டுச் சென்றார். 'நாசூத்' என்ற உலகைவிட்டு 'மலகூத்' என்ற உலகத்தில் சேர்ப்பித்தார். விஷ்ணுவின் ஆட்சி நாடு காணப்பட்டது. அங்கே இந்திரன், குபேரன் இருக்கின்றனர். அரம்பையின் நாட்டியம் உண்டு. முப்பத்து மூன்று கோடி தேவர் கள் இருந்தனர்.

வைகுண்டத்தைவிட்டு அன்னம் (ஜீவன்) மேலே சென்றது. சூனியத்தில் சோதி வெள்ளமாய் ஒளிர்ந்தது. சோதி யின் ஒளியில் 'நிஸ்தத்துவத்'தைப் பார்த்துத்தான் அச்சம் ஒழிந்து துணிவு கொண்டதாக ஆயிற்று. எதை வேதம் பார்க்க முடியாதது, நிர்க்குணம் என்று சொல்கிறதோ அதுவே மூன்று தேவர்களுக்கும் தந்தை. அவர்களுக்கு மேற்பட்ட அந்த வெண்ணுடல் கொண்ட பகவான் அவர்களுக்கு அப்பாற்பட்ட பகுதியில் இருக்கிறார்.

நான்கு இடங்களில் பதினாறு கண்டங்களாக இருக்கிறது. அண்டத்தின் எல்லை முனை அங்கிருந்து ஆரம்பமாகிறது. அந்த அண்டத்தையும் தாண்டி அசிந்தயம் என்ற ஸ்தானத்தை அன்னம் சென்று பார்த்தது. ஆயிரம் மேலும் பன்னிரண்டு ருத்திரர்களும்கூட இருக்கின்றனர். அநாஹத நாதம் எழுப்பி ஆனந்தம் கொண்டாடுகின்றனர். அவர்கள் உடலின் மகிமையை என்ன என்று சொல்வேன்! ஒளி பெற்ற உடலின் சோபை வெகுதூரம் பரவிக் கிடந்தது. அரண்மனை பொன்னால் ஆகி அதில் மாணிக்கங்கள் பொருந்தியிருந்தன. அங்கே தங்கக் கலசங்கள் அகண்டமாகப் பரவியிருந்தன.

'அசிந்தத்'தைத் தாண்டி 'சோஹ'த்தின் இடம். முப்பத்தாறு (கோடி) அன்னங்கள் அங்கு இருந்தன. ஒளியின் அரண்மனை, ஒளியின் பூமி; அங்கு ஆனந்தத்தினால் 'தொந்தம்' ஓடி விடுகிறது. 'ஸோஹங்க'த்தில் இருப்பவர்களுடன் இந்த அன்னம் அநேக விதமாக ஆடிப் பாடி மகிழ்ந்தது.

அன்னம் எப்பொழுது ஆறு சக்கரங்களையும் (மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தம், ஆக்ஞா ஆகிய ஆறு சக்கரங்கள் முறையே குறிக்குக் கீழே, குறியின் அடிப்பாகத்தில், தொப்புளுக்கு அருகில், இதயத் தருகே, கழுத்தின் அருகே, புருவங்களின் நடுவில் இருக்கின்றன) தாண்டி ஏழாவது தளத்தில் பார்வையைச் செலுத்தியது. ஸோஹங்கத்தின் அப்பால் சுரதி (தியானம்) 'இச்சை' என்று சொல்லிற்று. அங்கே அன்னம் ஆயிரம் வாமனரைப் பார்த்தது. அந்த உருவம் அழகின் குவியலாய் ஆகியிருந்தது. ஹிந்துக்கள் ஓர் உவமையும் சொல்லி வெற்றி பெறவில்லை. 'சுரதி'யைச் சந்தித்து விட்டுச் சப்தத்தை (ஞானத்தை) ஊன்றிக் கொண்டு 'அங்குரத்தின்' தளத்தைப் பார்த்தது. சூனியத்தின் நடுவில் நிர்மலமான மேடையில் தெய்வத்தின் 'சகஜ' ஸ்தானம் இருக்கிறது.

ஒன்பதாம் தளத்தில் எப்பொழுது இந்த அன்னம் சேர்ந்ததோ ஒரு கணநேரம் அங்கே (டேரா போட்டது) தங்கிற்று. அங்கிருந்து சரிகைக் கம்பியின் கயிற்றைப் போட்டு அதன்மேல் ஏறி ஆடிற்று. மிகவும் ஆனந்தத்துடன் அந்த முடிச்சை விட்டபோது அன்னம் என்னுடைய 'சத்திய லோகம்' எங்கிருக்கிறதோ அங்கு வந்து சேர்ந்தது. பெண், ஆண் அன்னங்கள் ஆடிப் பாடி வாத்யங்கள் முழக்கி, நீர், நிறை குடம் ஏந்தி அதை அழைக்க வந்தன. யுகம் யுகமாகப் பிரிந்திருந்த நீ வந்து சேர்ந்தாய் என்று சொல்லி அன்பு காட்டி அங்கங்கள் உறத் தழுவிக்கொண்டன.

'புருஷன்' இந்த அன்னத்துக்கு எப்பொழுது தரிசனம் தந்தாரோ அப்போதே அநேக ஜன்மங்களின் தாபம் நீங்கித் தீர்ந்தது. திரும்பி உருவத்தை ஒரே மாதிரி செய்தபோது பதினாறு (கோடி) சூரியன் உதித்தது போலும் (ஆயிற்று!) எப்பொழுது இந்த அன்னத்துக்கு ஞானமயமான உடல் கிடைத்ததோ அப்பொழுது அதற்குப் பூவின் ஒளி கிட்டிற்று. அமுதத்தின் உணவை உண்டது. ஆண், பெண் அன்னங்கள்

சச்சிதானந்தத்தின் தலையில் பூ முடி அணிவித்தன. குடை கவிழ்த்தன. அநேக மின்னல்கள், பலவிதமான ஒளிகள் காட்டி அங்கே மின்னின. மேகங்கள் இடித்து ஒலி செய்து சுருண்டு வந்தன. மேகங்கள் சூழ்ந்து பொழிய ஆரம்பித்த அந்த இடத்தில் ஞானத் தொனி எழுந்து எல்லோருக்கும் இன்பத்தைத் தந்தது.

அந்த அன்னம் கூட்டத்துடன் சேர்ந்து அந்தச் சப்தத்தைக் கேட்டது. ஒரே ஒளி, ஒரே நிறமாயிற்று. மனம் விரும்பிய முக்தியை அடைந்து அங்கே விளையாடல்கள் புரிகின்றது. கருமம் பிரமை எல்லாம் அதைவிட்டு ஓடிவிட்டன. அங்கே ஏழை, அரசன் என்று ஒருவரும் பிரித்துப் பேசவில்லை. அங்கே பல விதமாகக் களியாட்டம் புரிந்தது. காமம், குரோதம், மதம், லோபம், அபிமானம் எல்லாத் தொல்லைகளையும் விட்டு, சத்திய ஒலியுடன் சேர்ந்தது.

புருஷனின் உடலின் மகிமையை என்ன என்று சொல்வது? உலகில் இரண்டாவது ஒன்றும் கிடையாது. சந்திர சூரிய கணங்களின் சோதி உவமை காட்டிப் பேசி விவரிக்க இயலாதது. ஒரே இழையின் பிரகாசம்! அம்மா! எந்த வம்சத்தவன் அங்கே அடைய அனுமதி பெறுகிறானோ அவனே புருஷனுடைய லோகத்தைச் சென்றடைகிறான்!

கபீர் சொல்கிறார்: "இந்த விதம்தான் அடைகிறான் ஒருவன். சத்தியலோகத்தை, சத்தியத்தின் வழியை வெளிப் படையாகப் பாடினேன்."

## 18

வரிசையாக 'நாசுத்', 'மலக் கூத்', 'ஜபருத்', லாகூத்', 'ஹாஹூத்' முதலிய உலகங்களுக்குச் சென்று பிறகு ஒவ்வொன்றாய் விட்டு 'சாகூத்', 'ராகுத்தையும்' விட்டு விட்டுக் குதித்து 'ஆகூத், சாகூத்'துக்குச் சென்றேன். சாகூத்தில்தான் பதி (இறைவன்) இருக்கிறார். அங்கேதான் 'சாகேத்' (சத்திய லோகத்தின்) அரண்மனை அலங்கரிக்கப்பட்டு நிற்கிறது.

கபீர் சொல்கிறார்: "அங்கே சுவர்க்கம் நரகம் எல்லாம் களைத்தன (ஒழிந்தன). வேதம் சாஸ்திரங்கள் 'சாஹூத்', 'காஜி' எல்லோருமே களைத்தவர். (அவை. அவர் எல்லாம் அவ்விடத்

தைப் பற்றி அறியவில்லை; பேசவில்லை, அல்லது அங்கே அவர்கள் இல்லை).

## 19

எங்கே சற்குரு (வஸந்தருது) இளவேனில் விளையாட்டை விளையாடுகிறாரோ அங்கே பரமபுருஷன், சாது சந்தர்கள் எல்லோரும் இருக்கின்றனர். அங்கே மூன்று உலகத்துக்கும் மாறுபட்ட அரசு நடக்கிறது. அங்கே அநாஹத ஒலி நாலா பக்கம் முழங்குகிறது. அங்கே பிடிப்பற்ற விளக்குகள் எரி கின்றன. அருமையாகத்தான் மக்கள் அங்கே அடைய முடியும். அங்கே கோடி கிருஷ்ணர்கள் இரண்டு கைகளையும் கூப்பு கின்றனர். அங்கே கோடி விஷ்ணுக்கள் தலை வணங்குவர். அங்கே கோடி பிரமர்கள் புராணம் வாசிப்பர். அங்கே கோடி மகாதேவர்கள் தியானத்தில் அமர்வர். கோடி சரசுவதிகள் சங்கீதம் எழுப்புவர். கோடி இந்திரர்கள் பாடத் தொடங்குவர்.

அப்படிப்பட்ட இடத்தில் கந்தர்வ கணம், முனி கணம் செல்ல முடியா; அங்கேதான் வெளியாவார் அவர். அங்கே சந்தனம், வண்ண நீர் எல்லாம் தெளிக்கப்படும். மிகவும் ஆழமாகப் பூமணம் நிரம்பியிருக்கும். நல்ல அன்பு, நிறம், நல்ல மணம் கொண்டவர்களாக அந்த உலகத்தில் எல்லோரும் வாசம் செய்கிறார்கள். நான் 'அஜரத் திவு' சென்றடைந்தேன். 'அஜர' புருஷனுடைய தரிசனம் பெற்றேன்.

கபீர் சொல்கிறார்: "பெயரை (கடவுளுடைய திருநாமத்தை) இதயத்தில் ஏற்றுக்கொள். நரகத்திலிருந்து காப்பாற்ற வல்லது அது ஒன்றுதான்."

## 20

அந்த இடத்தில் எப்பொழும் இளவேனில் விழாக்கள்தாம். ஐயமே இல்லாமல் அதுவே அமராபுரி. அங்கே நோய் துயரம் ஒன்றும் கிடையா. எல்லோரும் எப்பொழுதும் இன்பம் கொண்டாடுகிறார்கள். சூரியன் சந்திரன் பகல் இரவு ஒன்றும் கிடையா. சாதி வேறுபாடுகள் கிடையா. உயர் சாதி, மட்டமான சாதி என்று ஒன்றும் கிடையா. அங்கே கிழத்தனம், மரணம் முதலியன ஏற்படுவதில்லை. எல்லோரும் விநோதமாய் விளையாடிக் காலம் கழிக்கின்றனர். புஷ்பக விமானம் எப்பொழுதும் ஒளியுடன் இருக்கிறது. எல்லோரும்

அமுத உணவு கொள்கின்றார்கள். உடல் அழகின் எல்லையாக இருக்கிறது; பதினாறு சூரியர்கள் எழுந்ததுபோல்!

ஓர் அன்னம் நல்ல ஒளி பொருந்தியிருக்கிறது. அதன் மயிர் நக்ஷத்திரம் உதித்ததுபோல் ஒளிர்கிறது. அங்கே குற்றமற்ற மணம் கிளம்பி நான்கு யோசனை தூரம் மூக்கை வசப்படுத்துகின்றது. தலையில் அழகிய வெண்குடை கவிந்திருக்கிறது. அங்கே ஏழை, அரசன் என்ற வேறுபாடே தெரியவில்லை. அங்கே நரகம், சுவர்க்கம், விடுதிகள் கிடையா. எல்லோரும் அமுத மொழியில் நல்ல பேச்சுப் பேசுகின்றனர்.

கபீர் சொல்கிறார் ; "இந்தச் சுகம் நம்முடைய வீட்டில் கிடைக்கிறது. உண்மையான ஞானத்தைப் பெற்றுச் சென்று நிலையாக உட்காருங்கள் (தியானம் செய்யுங்கள்)."

## 21

நீ உருவத்தைக் கண்ணால் பார். பிரும்மாண்டத்துக்கு அப்பாற் பட்டது. நீ இதயத்தில் சிந்தித்து ஆய்ந்து பார். இந்த நாடு நம்முடையது. (உடலுக்கு வெளியில் உள்ளதை உள்ளேயும் பார்க்கலாம்.)

முதலில் குருவைத் தியானம் செய். மனத்தைத் தியானத்தில் ஈடுபடுத்தி (பிராண) வாயுவைக் கட்டுப்படுத்து. இனிமையான தொனியில் திருநாமத்தைச் சொல். சற்குருவின் காட்சி கிட்டும். சகோதரா, சற்குருவின் காட்சி எப்பொழுது கிட்டிற்றோ உடனே அவர் உனக்கு நாமத்தின் உண்மையைக் காட்டிக் கொடுப்பர். தியானம், ஞானம், இரண்டுக்கும் உள்ள வேற்று மையை விலக்கித் தருவார். 'சங்கத்'துக்கு அப்பால் பார்.

சற்குருவின் கிருபையினால் பார்வை தெளியும். அண்டத்தின் உச்சியில் ('பேஹதம்' என்ற) எல்லையற்ற மைதானம் உண்டு. அங்கே தாசன் சகஜமான இடம் அமைத்துக்கொண்டான். முதல் தீவு 'சர்தார்' தீவு. அந்த பேஹதத்தில் ஏழு சூனியங்கள். அவற்றின் உயரம் ஏழு சங்குகள். மூன்று சூனியங்கள் வரை காலம் சொல்லப்படும். அவற்றிற்கு மேலே 'சத்தியத்தின்' பரப்பு.

முதல் சூனியம் அபய சூனியம். சகோதரா! கன்னி கிளம்பி இங்கே வெளியாகிறாள். அவளிடம் யோகத்தைக் கேள்

அந்தப் பெண் நமக்கு 'சுவாமி'. இரண்டாவதைச் 'சகல சூன்யம்' என்று சொல்வர். மரியாதையுடன் நிரஞ்சனர் அங்கே ஆளுபவர். அமரர் கோட்டையின் நகல் அது. அண்டத்தின் நடுவில் ஆக்கிவைத்துப் பரந்திடச் செய்திருக்கிறார். மூன்றாவது மஹா சூன்யம். மஹா காலம் இங்கே கன்னியைப் பிடிக்கிறது. சாதுக்களான யோகிகள் வந்து அழியாதவர்களாக ஆகிறார்கள். கழுத்து, நகம், துவாரங்களை வெளியேற்றி விடுகின்றனர்.

நான்காவது சூனியம் 'அஜோஷம்' என்று சொல்லப் படுகின்றது. சுத்தப் பிரும்மத்தின் தியானம் அடங்கியிருக்கிறது. 'ஆத்யா தேவி' இங்கே தான் விதை எடுத்துவந்தாள். பார், படைப்பு பரவியிருக்கிறது. ஐந்தாவது சூனியம் அகேலம் எனப்படுகின்றது. அங்கே நியாயம் சொல்பவன் கைதியாய் அமர்ந்திருக்கிறான். சற்குரு அவனுக்கு நியாயம் புரிவித்தான். எல்லா நீதிபதிகளும் அரைகுறையாகப் பழுத் தவர்களே.

ஆறாவது சாரசூனியம் எனப்படுகின்றது. சாரநிதி இங்கே தான் இருக்கிறது. கீழே அதனுடைய படைப்புதான் எங்கும் பரவியிருக்கிறது.

ஏழாவது சத்தியசூனியம் என்று சொல்லப்படுகிறது. இதில் தான் சத்திய நிதி இருக்கிறது. அது தான் எல்லாவற்றிலும் மாறுபட்ட நிஸ்தத்துவப் படைப்பைச் செய்தது.

ஏழாவது சூன்யத்துக்கு மேலே சத்திய நகரம் இருக்கிறது. பறவைகளின் பாதை, அழகான வழி. (நடந்து செல்ல) வழி இல்லாமலே சென்றடைந்தோம்: விளையாட்டு மிகச் சிறந்தது.

முதலில் 'சமாதி வட்டம்' என்று சொல்லப்படுகிறது. உண்மையான அன்னம் சத்குருவிடம் அறிவு பெறுகிறது. வேதத்தின் மயக்கம் எல்லாவற்றையும் பறக்க அடித்து விடுகிறது. முக்குணத்தையும் விட்டு விசித்திரமாயிற்று.

இரண்டாவது 'அகாத வட்டம்' எனப்படுகிறது. முதலில் சத்குருவுக்குக் கெடுதல் செய்து பிறகு காலடிகளைப் பிடித்துக் கொண்டவன் இங்கே வந்து அடைகிறான்.

மூன்றாவது வட்டம் 'முனி' என்ற பெயருடையது. எந்த முனிவர்கள் என்னுடைய சற்குருவை அறிந்தார்களோ அவர்கள்

கருமம், மயக்கம் எல்லாவற்றையும் விட்டு இங்கே வந்திருக்கிறார்கள்.

நான்காவது வட்டம் "தொனி". சகோதரா, எந்த அன்னங்கள் தொனியைத் தியானம் செய்தார்களோ, அவர்கள் தொனியுடன் இங்கே நம்மிடம் வந்தடைந்தவர்கள். இந்தத் தொனி 'சப்த'த்தின் நடுவில் அமைந்திருக்கிறது.

ஐந்தாவது வட்டம் "ராசி" என்று சொல்லப்படுகிறது. அதன் நடுவில் காட்சி மிகவும் பிரமாதம். அவ்விடத்தின் விளையாட்டுக்கள் கோடி வகைகள் (அனந்தம்). ராசியின் விலாசம் (கேளிக்கை) மிகவும் சிறப்பானது.

ஆறாவது வட்டம் "விலாசம்" என்று சொல்லப்படுகிறது. யார் தன்னுடைய குருவின் அன்பைக் காத்தானோ அவன் உடல் பிரிந்தவுடன் இங்கே வந்தடைந்தான். பிறகு அவன் உலகில் மீண்டும் பிறவி எடுக்கிறதில்லை.

ஏழாவது வட்டம் "விநோதம்" என்றறி. கோடி வம்சங்களுக்குக் குரு அங்கே இருக்கிறார். தெரிந்துகொள், இருட்டில் ஒளியைப் போல் அவர்கள் கலிகாலத்தில் அறிவு ஊட்டினர்.

எட்டாவது வட்டம் "அநுரோதம்" என்னப்படுகிறது. அங்கே சேணியன் பாவு போடுகிறான். அவனைக் கபீர் என்று சொல்வார்கள். அவர் சந்தர்களுக்கெல்லாம் (அடியார்களுக்கெல்லாம்) தலைவராக வைத்துக் கொண்டாடப்படுகிறார்.

இப்படி ஆயிரம் கோடி வட்டங்கள் மேலேயும் கீழேயும் படிகள் போல் அமைந்திருக்கின்றன. நியாயத்தின் சிம்மாசனம் தலை திரும்பி அமர்ந்திருந்தது. சத்குரு அதைக் கைதி (தளையி) லிருந்து விடுவித்திருக்கிறார்.

அநுரோத வட்டத்துக்கு மேலே நிர்வாண பதத்துக்குக் கீழே உள்ளது அது. ஐந்து சங்கு அதன் உயரம். அற்புதமான ஆடம்பரம் பரவிக் கிடக்கிறது. பதினாறு குழந்தைகளுக்காகத் தீவுகளை ஏற்படுத்தினார். அவற்றில் ஏழு குழந்தைகள் வசிக்கின்றன. இங்கேதான் கபீர் நியாயம் செலுத்துபவர்; அவரே எல்லோருக்கும் தலைவர் ஆவர்.

நிர்வாணபதம் அநந்தமானது, அபாரமானது. புதுத் தோற்றம் கொண்ட உலகம். "சத்புருஷன்" புதுத்தோட்டம் ஏற்றுக்கொண்டார். சந்தர்களுக்கெல்லாம் சற்குரு அவர்.

மேலே சத்தியலோகம் இருக்கிறது. சகோதரா, அதன் உயரம் ஒரு சங்ககோசமாகும். (கோசம் = 2 மைல்) வைரம், பச்சை, சிகப்பு எல்லாம் பொருந்தியிருக்கின்றன. அற்புதமான விளையாட்டு மிக மிக நன்றாக இருக்கிறது.

தோட்டங்களும் பூங்காக்களும் மலர்கின்றன, அமுதக் கால் கள் ஓடுகின்றன. அன்னம் நன்கு விளையாடுகின்றது. அநாஹத நாதம் பாடுகின்றது. அதன் நடுவே ஆதாரமற்று சிம்மாசனம் பிரகாசிக்கின்றது. புருஷனுடைய சப்தம் அங்கே அதிகம் ஒலிக்கிறது. அந்தப் புருஷனுடைய தரிசனம் எப்படி என்றால்—ஒரு மயிர்க்கெதிரே கோடி சூரியர்கள் வெட்கி மறைவர்—அப்படியாம். ஆண் பெண் அன்னங்கள் ஆரத்தி எடுக்கின்றன. பதினாறு சூரியர்கள் அங்கே திரிகின்றனர். வீணை ஏழு நாதங் களை ஒலிக்கிறது. இதயத்தின் நடுவே உருவுகின்றது.

அதன் மேல் "ஆகம மஹல்" என்று விசித்திரமான ஒன்று. அதன் பரப்பு கோடி சங்கமாகும்.

தோட்டம் கிணறு எல்லாம் அமுததாரையாம். நீரூற்றுக்கள் ஆதாரமில்லாமலேயே பாய்கின்றன. முத்தாலான அரண்மனை; வைரத்தாலான முற்றங்கள். அன்னங்களும் சகோரப் புட்களும் வெண்ணிறமாக உள்ளன. ஆயிரம் இரட்டைகள் கொண்ட அன்னத்தின் கூட்டங்கள்—அவ்வளவு அழகைப் பார்க்கிறோம்.

'அதர' சிம்மாசனத்தில் ஸ்வாமி இருக்கிறார். அருணன் சூரியன் சந்திரன் போல் இல்லை. அன்னங்கள் சாமரம் வீசு கின்றன. செல்வதற்கு மிகவும் கடினமான இடம்.

அதரிக்கும் மேல் அதரம் இருக்கிறது. அதன் உயரம் சங்க சங்கமாகும். ஒளி வெள்ளம்—எல்லாம் அங்கே ஒளி வெள்ளம் தான். தோட்டம் பூங்கா வெல்லாம் மின்னுகின்றன. கிளைகள், இலைகள் எல்லாம் ரத்தினங்கள் நிறைந்து இருக்கின்றன.

முத்தாலான அரண்மனை; ரத்தின அட்டாரி. தேகமற்ற புருஷன் எழுந்தருளி யிருக்கிறார்.*

கோடி சூரியர்களின் பிரகாசம், அன்னத்தின் ஒளி. அவ்விடத்தின் தொனி ஒப்பற்றது. அன்னம் அரசன் தலையில் குடை கவிக்கிறது. கையில்லாமலே சாமரம் வீசுகிறது.

அன்னத்தின் விளையாட்டை மனம் வைத்துக் கேள். ஒரு அன்னத்தின் சித்தத்தில் வந்ததை மற்றோர் அன்னம் புரிந்து கொண்டு விடுகிறது. பேசாமலேயே வார்த்தைகளைச் சொல்லி விடுகின்றன.

அதற்கு அப்பால் நிர்லோகம் இருக்கிறது. கேள் சகோதரா! "அநாமி, அகஹன்" என்று அதன் புருஷன் சொல்லப்படுகிறான்.

யார் அங்கு வந்து சேருவானோ அவனே அறிவான். சொல்வதற்கும் கேட்பதற்கும் அது அப்பாற்பட்டது.

உருவம், சொரூபம் என்று ஒன்றும் அங்கே கிடையா. இடம் தடம் என்று ஒன்றும் காணப்படா. அகலம் நீளம் ஒன்றும் கண்ணுக்கு எட்டவில்லை. பிறகு கணக்கு எப்படிச் சொல்வேன்? யார் மேல் ஆண்டவன் தயை புரிவாரோ அவர் தான் ஆகாய மார்க்கமாக அங்கே வரமுடியும். வழியில் எழுபது பிரளயம் தாண்டினால் அப்பொழுது அற்புதமாக அந்தக் காட்சி கிடைக்கும்.

கபீர் சொல்கிறார்: "வாயால் சொல்லப்படாதது. காகிதத்தில் எழுதியும் கணக்கிட முடியாதது. ஊமை வெல்லம் சாப்பிட்டது போல அடையாளத்தாலும் சைகையாலும் சொல்லிக் காட்டவேண்டியது தான்."

## 22

அமுத ரசம் பொழிகிறது. குளம் நிரைகிறது. ஒலி ஆகாயத்தில் எழுகிறது. நதி பொங்கிக் கடலை வற்ற வைக்

---

* எண்ணளவை:
1 சங்கம் - 10 கர்வம்
1 கர்வம் - 100 அரபு
1 அரபு - 100 கோடி

கிறது. (பக்தி, சம்சார சாகரத்தை வற்ற வைக்கிறது) ஒன்றும் வருணிக்கத் தக்கதாக இல்லை. அங்கே திங்கள் கிடையாது, ஞாயிறு கிடையாது. இரவு கிடையாது, விடிவு கிடையாது. சிதாரும் புல்லாங்குழலும் நாதம் எழுப்புகின்றன. மெதுவான குரலில் 'ரம்' என்ற தொனி எழுகின்றது.

அநேக திரைகள் ஒளிர் கின்றன. நீரில்லாமல் மழை பொழிகின்றது. சிவன், பிரும்மா, விஷ்ணு, இந்திரன், சாரதா ஆகியோர் தத்தம் மதிக் கேற்றவாறு அநுமானம் செய்கின்றனர். பத்து அவதாரங்களும் தாமே திறமை யாக ஒரே தத்துவமாக ஆகிப் பிரகாசிக்கின்றனர். கபீர் பிறர் அறியாத செய்தியைச் சொல்கிறார். அருமையாக ஓரிருவரே அறிய முடியும். அறிந்தவர் மீண்டும் எமனுடைய கொலைகார வீட்டுக்கு மீண்டும் வரமாட்டார்.

## 23

ஜோதி, நம்முடைய பூரண புருடன் இருக்கும் வீடு; எல்லா வற்றிற்கும் அப்பாற்பட்டது. (தனித்தது.) அங்கே சுகம், துக்கம், உண்மை, பொய், பாவம், புண்ணியம் ஒன்றும் கிடையா. பகல் கிடையாது. சந்திரன் சூரியன் இல்லை. சோதி இல்லாமலே ஒளி வீசுகிறது. அங்கே சபம், தபம், வேதம், சாத்திரம், வாணி (உபதேச மொழிகள்) ஒன்றும் இல்லை. செய்கை, தரித்தல், இருத்தல், பிடித்தல் இவை எல்லாம் அங்கே இல்லாதவையாம்.

பற்றுக் கிடையாது. பற்றின்மை கிடையாது. வெளி உள்ளென்றும் ஒன்றுமில்லை. பிண்டம் பிரும்மாண்டம் என்று மில்லை. ஐந்து தத்துவம், மூன்று குணம், 'சாக்கி', 'சப்தம்' என்றெல்லாம் கிடையா. மரம் இல்லாமலேயே பழம் பழுத்து விளங்குகிறது. ஓ(ஹ)ம் ஸோஹம் அர்த்த, ஊர்த்வ சுவாசம் ஒன்றும் கிடையாது. பிறகு எதை எழுதுவது?

சகோதரா! சர்க் குணமும் இல்லை, நிர்க் குணமும் இல்லை. சூக்குமமுமில்லை; தூலமுமில்லை. அக்ஷரமு (அழியாதது)மில்லை; அடைய முடியாததும் இல்லை. இவை எல்லாம் உலகின் மயக்கங்கள். 'புருஷன்' இருக்கும் இடத்தில் அங்கே ஒன்றும் கிடையாது. கபீர் சொல்கிறார்: "நாம் அறிந்தே பேசுகிறோம். நான் சொல்லும் அடையாளத்தின் வழியே யார் பார்த்தாலும் அவன் நிர்வாணபதம் அடைவான்."

## 24

'சுருதி சரோவரத்தில்' ஸ்நாநம் செய்து மங்களம் பாடுங்கள். சப்தம் என்கிற கண்ணாடியில் பார்த்து நெற்றியில் திலகம் அணியுங்கள். அன்னமே, சத்திய லோகம் சென்று அதிக சுகம் அடையுங்கள். புருஷனுடைய சரணத்தைத் தொட்டுவிட்டு மீண்டும் வராமல் இருங்கள். (திரும்பி வராத நிலையை அடைவீர்கள்) அங்கே அமுத உணவு; அமுதம் பருகுங்கள். வாயில் சப்தமாகிய வெண் தாம்பூலம் கொள்ளுங்கள். பூவின் ஒப்பற்ற மணம். அன்னமே, வீட்டில் சென்று வாருங்கள். அமுத ஆடை போர்த்துத் தலையில் மணி மகுடம் அணியுங்கள்.

அந்த வீட்டில் பிரமாத ஆனந்தம் கிடைக்கும். அன்னமே, சுகம் கொள்ளுங்கள். அழகிய உடல், அந்த உடலைப் பார்த்துப் பார்த்து வாருங்கள். ஒளி மசியற்று எழுதப் பெற்ற அந்தக் கடிதத்தைப் படியுங்கள்.

கையில்லாமல் தாளம் போட்டு, காலில்லாமல் நாட்டியம் ஆடுங்கள். விளக்கில்லாமல் ஒளி வீசும்; அந்த அடைய முடியாத வீட்டைப் பாருங்கள். சப்தக் கதவு திறந்தது. புருஷனைத் தரிசியுங்கள். இறைவன் எதிரே நின்று சித்தத்தில் பக்தி கொள்ளுங்கள், அன்னமே! மன மாணிக்கத்துடன் அங்கே காட்சியைக் காணுங்கள்.

கபீர் சொல்கிறார்: "இந்த நற்பேறு எளிதில் கிடைக்காத ஒன்று. குருவின் சேர்க்கையின் தீவிர அன்பு கொண்டு, அன்னமே, அங்கே சென்று சேருங்கள்."

## கர்த்தாவின் இடம் (படைப்பவனுடைய இடம்)

## 25

சந்தர்களே, அத்யாத்ம யோகமே அது. ஒரே பிரமம்தான் எல்லா உடலுக்குள்ளும் பரவியிருக்கிறார். வேறு ஒருவரும் கிடையாது. நான்கு இதழ்கள் கொண்ட முதல் ஞானக் கமலம் எங்கே இருக்கிறதோ அங்கே கணேசன் வாசம் செய்கிறார். அவருடைய சக்தி 'ரித்தி சித்தி' யாகும். அவரை உபாசித்து ஜபம் செய்வதனால் ஒளி ஏற்படுகிறது.

ஆறு தளங்கள் கொண்ட கமலத்தில் பிரமன் வாசம் செய்கிறார். சாவித்திரி உடன் இருந்து சேவை செய்கிறார். அங்கே இந்திரனுடன் கூட எல்லாத் தேவர்களும் ஆறாயிரம் ஜபம் செய்கிறார்கள். எட்டு(த் தள)க் கமலத்தில் ஹரியுடன் லக்ஷ்மி காற்று மூன்றும் சேவை புரிகின்றனர். அங்கே ஆறாயிரம் ஜபம் ஜபித்தால் போதல் வருதல் (பிறப்பு இறப்பு) நீங்கிவிடும். பன்னிரண்டு (தளக்) கமலத்தில் சிவன் வசிக்கிறார்; கிரிஜா சக்தியுடன் அங்கே ஆறாயிரம் ஜபம் செய்தால் ஞானம் சுரதிக்கு அப்பால் அழைத்துச் சொலும். பதினாறு (தளக்) கமலத்தில் ஜீவன் வசித்தால் சக்தி அவித்தையை அறிந்து கொள்கிறான். அங்கே ஓராயிரம் செபம் செபித்தால் அப்படிப்பட்ட மறை பொருள் வெளியாகிறது.

புருவக்குகையில் இரண்டு தளக் கமலம் இருக்கிறது அங்கே பரமஹம்ஸம் வாழ்கிறது. அதை ஓராயிரம் முறை செபித்தால் கருமம் - மருள் எல்லாம் நசிக்கின்றன. ஆயிர(தள)க் கமலத்தின் ஒளியைப் பார். பரமன் (பரப் பிரம்மம்) அங்கே வசிக்கிறார். பிரியமான அட்சய புருஷன் அவர். சத்குரு சொன்னார். அந்தச் சுரதி கமலத்தில் ஓராயிரம் முறை செபம் செய்தால் "சகஜம்" ஏற்படும். அறுநூற்றிருபத் தோராயிரம் முறை ஜபம் செய்தால் 'அஜபா' நிலை அறியலாம். இந்த ஞானத்தை யாராவதுதான் அறிய முடியும். ரகசியம் சொல்லப் பட முடியாதது. யாரால் முடியுமோ அவன் மனத்தைப் பார்த்துக் கொள்ளட்டும். கபீர் நன்றாக விளக்கிச் சொல்லியிருக் கிறார்.

## 26

ககனக் குகையில் (இதயக் குகையில்) ரஸம் என்றும் இளமை யுடன் சொட்டுகிறது. தியானம் செய்தால் அங்கே தெரியும்; வாத்தியங்கள் இல்லாமலே 'ஜன் ஜன்' என்று ஒலி எழுகிறது. குளம் இல்லாமலே கமலங்கள் பூக்கின்றன. அவற்றில் ஏறி அன்னம் ஆடல் புரிகிறது. சந்திரன் இல்லாமல் ஒளி தென்படுகிறது. அங்கும் இங்கும் அன்னங்கள் கண்ணில் படுகின்றன. பத்தாம் துவாரத்தில் (பிரும்மரந்திரத்தில்) கள் வைத்திருக்கிறது. பார்க்க முடியாத (அலக்) தேவனைத் தியானம் செய்கிறவன் அருகே பயங்கரமான எமன் வரமாட்டான். ஆவல், வெகுளி, பெருமை, பற்று முதலியன எரிந்துவிடும். யுகம் யுகமாக ஏற்பட்ட தாகம் அடங்கும். கர்மம், பிரமை, பாவம், வியாதி எல்லாம் தீரும்.

கபீர் சொல்கிறார்: "அவன் அமரனாவான்; ஒரு பொழுதும் சாக மாட்டான்."

## 27

பக்தா, நீ என்னை எங்கே தேடுகிறாய்? நான் தான் உன் அருகில் இருக்கிறேனே. நான் வெள்ளாட்டிலும் இல்லை; செம்மறியாட்டிலும் இல்லை; வெட்டும் கத்தியிலும் இல்லை; அரிவாளிலும் இல்லை; தோலிலும் இல்லை; வாலிலும் இல்லை; எலும்பிலும் இல்லை; மாமிசத்திலும் இல்லை. நான் கோயிலிலும் இல்லை; மசூதியிலுமில்லை; சபாவிலும் இல்லை; கைலாசத்திலும் இல்லை; நான் எந்தக்கிரியை கருமத்திலும் இல்லை; யோகம் வைராக்யத்திலும் இல்லை; உண்மையாகத் தேடுபவனாகியிருந்தால் ஒரு நிமிஷம் தேடினவுடனேயே நான் கிடைத்து விடுவேன். நான் பட்டணத்துக்கு வெளியே குடியிருக்கிறேன். என் ஊர் கோட்டைக்குள் (உடற் கோட்டைக்குள்) இருக்கிறது.

கபீர் சொல்கிறார்: "ஏ சாது சகோதரர்களே, கேளுங்கள் எல்லோர் மூச்சுக்கும் மூச்சாக நான் இருக்கிறேன்."

## படைத்தவனை அடைய வழி

## 28

ஞானத்தைப் பந்தாக்கிச் 'சுரதி'யை மட்டையாக்கி மைதானத்தில் 'சௌகானம்' (ஒரு பந்து விளையாட்டு) விளையாடு. அறிவிலியே உலகில் மயங்குவதை விட்டுவிடு. எம் பெருமானுடைய வீட்டுக்கு அருகில் வந்துவிடு. எம்பெருமானுடைய இருப்பிடத்தின் மகிமையை ஆதிசேடன் கூறுகிறார். ஆதிசேடனுடைய தலையில் பாதத்தை வை. காமக் கூட்டத்தை ஒழித்து, கமலதளங்களைப் பற்றி ஏறி, பிரும்மத்தை ஊடுருவிக் கோபத்தை விட்டொழி. பத்மாசனம் போட்டு, காற்றை அடக்கி ஆகாய அரண்மனையில் காமனை எரி. கபீர் சொல்கிறார்: "கருமத்தின் ரேகையில் எவர் முளை அடிப்பாரோ*" அந்த சந்தர் தான் ரத்தினம் (சிறந்தவர்.)"

## 29

இரண்டு இசைகள் இயற்கையாகவே செல்கின்றன. தொப்புளிலிருந்து எதிர்த்து வருகின்றன. நடுவில் இடா,

* கருமத்தின் ரேகையில் முளை அடிப்பது—கருமத்தின் அழியாத போக்குக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பது.

பிங்கலை, சுழுமுனை மூன்று நாடிகளிலும் உணவு பெறுகின்றன. பூரகம், கும்பகம், ரேசகம் செய்து அருவி போல் செல்கின்றன. கபீர் சொல்கிறார்: "இந்த உடல் ஊஞ்சல்; தயை மறந்தால் பிறகு வருந்துகிறார்கள்."

## 30

முர்ஷிதுடைய (முஸ்லிம் குரு) கண்கள் இடையே நபி இருக்கிறார். கருமை வெண்மை மச்சங்களின் இடையே உள்ள மணியில் 'அவிகத'மானவரும் பார்க்கமுடியாத வருமான 'நபி' இருக்கிறார். கண்களின் இடையே பறவை மின்னுகிறது. பறவைக்கு நடுவே வாசல். அந்த வழியாகத் தொலைநோக்குக் கண்ணாடியைச் செலுத்திப் பிறவிக் கடலில் இறங்கு. சூனியமான நகரத்தில் நம்முடைய இருப்பு. அங்கே பூரணமாய் (உடலுடன்) போய்ச் சேர்வோம். கபீரும் இறைவனும் எப்பொழுதும் உடன் இருப்பவர்கள். 'சப்தமஹலுக்கு' அழைத்துச் செல்வர்.

கண்களாகிற அரண்மனையில் அன்பன் இருக்கிறான். தரிசனம் செய்துகொள்.

## 31

காமம் குரோதம் மதம் லோபம் இவற்றை மற. சீலம் சந்தோஷம் பொறுமை இந் நற்குணங்களை ஏற்றுக் கொள். கள் ஊன் பொய் இவற்றை விட்டுத் தொலை. ஞானமாகிற குதிரை மேல் ஏறிப் பிரமையை விட்டு விலகு. 'தியௌதி' நேதி, பஸ்தி (உடலின் யோகாசனப் பயிற்சி வகைகள்) முதலியவற்றைத் தெரிந்துகொள். பத்மாசனத்தை ஒழுங்காகப் போட்டுக் கொள். கும்பகம் செய், ரேசகம் செய். முதலில் மூலத்தைச் சுத்தம் செய்வது தான் எல்லாம் (முக்கியமான வேலை.) ஆதாரக் கமலம் மிகவும் ஆற்றல் கொண்டது என்பர். சேவல் போன்ற சிகப்பு நிறம் என்று அறிந்து ஜபம் செய். அங்கே கணேசரைக் கோயில் கொள்ளச் செய். இருத்தியும், சித்தியும் சாமரம் போடும் (கைவரும்.)

ருசியை ஆறு இதழ்த் தாமரைச் சக்கரத்துக்கும் எடுத்துச் செல். பிரம்மா சாவித்திரி இவர்களின் உருவத்தைப் பார். பெண் பாம்பின் (குண்டலினி சக்தியின்) தலையைத் திருப்பி அடி. அங்கே ஓங்காரம் சப்தம் கேட்கும்.

தொப்புளில் எட்டு இதழ்த் தாமரை அமைந்திருக்கிறது. அதில் வெண் சிங்காதனத்தில் விஷ்ணு அமர்ந்திருக்கிறார். 'ஹ்ரீங்' என்று ஜபம் செய். சுகம் கிடைக்கும். சிவனும் லக்ஷ்மியும் ஆதாரம்.

இதயத்தில் பன்னிரண்டு இதழ்த் தாமரை இருக்கிறது. கௌரியுடன் சிவனைத் தியானம் செய். அங்கே 'சோஹம்' என்ற சத்தம் இசை பரப்பும். கணங்கள் 'ஜய் ஜய்' என்று சத்தம் எழுப்பிக் கொண்டிருப்பர்.

கழுத்தில் இரண்டு இதழ்த் தாமரை இருக்கிறது. அதன் நடுவில் தான் அவித்தைப் பெண் (மாயை) இருக்கிறாள். ஹரி, ஹரன், பிரம்மா (மூவரும்) சாமரம் போடுகின்றனர். 'சிருங்கன்' பெயர் உச்சரிக்கப்படுகிறது.

அதன் மேல் கஞ்சம் என்கிற கமலம் இருக்கிறது. கொக்கு, வண்டு இரண்டு உருவங்கள் தோற்றுகின்றன. உண்மை மனம் அங்கே தான் ஆட்சி செலுத்துகிறது. அது கண்களுக்குப் பின்னால் இருக்கிறது.

கமலங்களின் மாறுபாடுகளைச் சொன்னேன். இந்த ஏற்பாடு எல்லாம் நம்முடைய பிண்டத்துக்குள்ளே (உடலுக் குள்ளே). சத் குருவுக்குத் தலை வணங்கு. அடியார்கள் சேர்க்கையைக் கொள். சத்திய நாமத்தைச் சொல். கண், காது, வாயை மூடிக்கொள். அநாஹத நாதத்தைக் கேள். இரண்டு அடையாளத்தையும் ஒன்றாகச் சேர். அப்பொழுது பார்ப்பாய் ஆனந்தத்தை உள்ளேயும் வெளியேயும்.

சந்திரனையும் சூரியனையும் (நாடிகள்) ஒரே வீட்டில் கொண்டு வா. சுழுமுனையில் தியானம் செய். திருவேணி சங்க மத்தில் ஆழ்ந்து விடு. காலையில் எழுந்து அக்கரை செல்.

மணி சங்கு இரண்டின் ஒலியையும் கேள். ஆயிரம் இதழ்த் தாமரையின் ஒளி ஏற்படும். அதன் நடுவே கர்த்தா இருக்கிறார்; அவரைப் பார். வளைந்த குழாய் வழியே நுழைந்து கரையேறு.

'டாகினி'கள் 'சாகினி'கள் மிகவும் சிரிக்கிறார்கள். யமகிங் கரர்கள் தர்ம தூதர்கள் அழைத்தனர். சற்குருவின் பெயரைச் சொன்னேன். சத்தியப் பெயரைக் கேட்டவுடன் எல்லோரும் ஓடி விட்டனர்.

ஆகாய மண்டலத்தின் நடுவே மேலே வாய் கொண்ட கிணறு. குருவின் வாயால் (சொற்படி கேட்டு) சாது அள்ளிப் பருகுகிறார். குருவில்லாதவர் உள்ளத்தில் இருள் இருக்கிறது. அவர் பருகாமலேயே தாகத்தால் இறந்தனர்.

திரிகுடி (புருவ நடுக்குகை) அரண்மனையில் எல்லா வித்தையும் இருக்கிறது. மேகம் இடிக்கிறது. பேரிகை ஒலிக்கிறது. சிவப்பு நிறச் சூரியன் வெளிச்சம் தருகிறது. நாலிதழ்த் தாமரையின் நடுவில் ஒங்காரம் இருக்கிறது. இந்தக் கோட்டையை எவன் பிடித்தானோ, வாயில்களையும் நன்கு அறிந்தானோ, எவன் பத்தாவது (பிரம்மரந்திர) வாயிலுக்குச் சென்று (அதன்) பூட்டைத் திறந்தானோ அவனே சாது.

சகோதரா, மேலே 'சுவேத சூனியம்' இருக்கிறது. மானசரோவரில் அமிழ்ந்து முழுகு. அன்னங்களுடன் சேர்ந்து அன்னமாகலாம்; அமுதம் ஆகாரமாகக் கிடைக்கும். கிங்கரி, சாரங்கம், சிதார் எல்லாம் பாடும். அந்த வெளியின் தர்பாரில் அக்ஷரப் பிரமம் இருப்பார். பன்னிரண்டு சூரியர்கள் அளவு அன்னம் வெண்மையாக இருக்கும். எட்டு இதழ்க் கமலத்தின் நடுவே கேட்கும் சத்தம் 'ர' என்பதாகும் (ரரங்காரமாகும்).

மகா (சூனிய) வெளிச் சமுத்திரத்தின் துறை மிகவும் கடினமானது. சத்குரு இல்லாமல் வழி தெரியாது. புலி சிங்கம் பாம்புகள் அதிகம் கடிக்கும். அங்கே 'சகஜ அசிந்த்'ரின் பரப்பாகும்.

எட்டு இதழ்த் தாமரையில் பரப் பிரம்மம் இருக்கிறார். இடது பக்கத்தில் பத்துத் தளத்தில் 'சகஜர்' இருக்கிறார். இப்பொழுது கமலங்களை விட்டுவிடுகிறோம்.

ஐந்து பிரம்மாக்களும் ஐந்து அண்டங்களைத் தேர்ந்து எடுத்துக்கொண்டனர். ஐந்தாவது பிரம்மா நிரட்சரத்தைத் தெரிந்துகொண்டார். அங்கே நான்கு இடங்களும் ஒளிக்கப் பட்டன. அதன் நடுவில் சிறைப் புருஷனுடைய அரசவை இருக்கிறது.

இரண்டு மலைகளின் சேர்க்கையைப் பார். புருவக் குகையில் 'சந்தரை'க் கூவு. அன்னம் அபாரமாக விளையாடுகிறது. அங்கே குருவினுடைய அவை இருக்கிறது. எண்பத்தெட்டாயிரம் விளக்குகள் அலங்கரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அரண்

மனையில் வைரமும் பச்சையும் பொதிந்து இருக்கின்றன. இடைவிடாமல் புல்லாங்குழல் (முரளி) வாசித்துக் கொண்டிருக்கிறது. அங்கே 'சோஹம்' ஜன்ஜன் என்று ஒலிக்கிறது.

சகோதரா, 'ஸோஹம்' எல்லையை விட்டபொழுது மீண்டும் சத்தியலோகத்தின் எல்லை வந்தது. அங்கே அதிக நன்மணம் வீசுகிறது. அதற்கு எல்லையோ முடிவோ கிடையாது. அன்னத்தின் உருவம் பதினாறு (கோடி) சூரியன்போல் இருக்கிறது. வீணை நல்ல தொனியைக் கிளப்புகிறது. அது ஒப்பற்றதாயிருக்கிறது. அன்னம் அரசன் தலையில் சாமரம் போடுகிறது. இது சத்திய புருடனுடைய அவையாகும். கோடி சூரியர்கள் உதித்தாலும் அவ்வளவு சந்திரர்களே தோன்றினாலும் புருடனுடைய ஒரு ரோமத்தின் ஒளிக்குச் சமமாக மாட்டார்கள். புருஷன் தரிசனம் அப்படி.

மேலே 'அலக்' உலகம் இருக்கிறது. அங்கே 'அலக்' ஸ்வாமியுடைய ஆட்சி நடக்கிறது. அரபு (நூறு கோடி) சூரியர்கள்கூட ரோமத்துக்குச் சமமாக மாட்டார்கள். அதற்குமேல் 'அகமம்' என்ற அரண்மனை ஒளிர்கிறது. அதன் அரசர் அகம புருஷர் ஆவர். கரபு (நூறு அரபு) சூரியர்கள்கூட வெட்கப்படுவர்; அப்படி அகமர் ஒளி பொருந்தியிருக்கிறார்.

அதற்கப்புறம் 'அகஹ்' என்ற உலகம் இருக்கிறது. அங்கே அநாமி புருஷன் இருக்கிறார். யார் அங்கே செல்கிறாரோ அவரே அறியமுடியும். சொல்வதற்கும் கேட்பதற்கும் அப்பாற்பட்டவர்.

உடலின் ரகசியத்தைச் சொன்னேன். இவை எல்லாம் பிண்டத்தின் (உடலின்) உள்ளே இருக்கின்றன. மாயை' அறியாமை வலையைப் பின்னி இருக்கிறது. அதன் செயல் மிகவும் பெரிது. ஆதி மாயை சாமர்த்தியம் செய்தாள். பொய்யான ஏமாற்று உடலைக் காட்டினாள். அண்டத்தில் காணமுடியாத சிருஷ்டியைச் செய்து அதன் பிரதிபிம்பத்தை வைத்தாள் (உடலுக்குள்.)

நம்முடைய சப்தமும் நடையும் பக்ஷியினுடையது. கபீர் சொல்கிறார்: "சத்குரு கரையேற்றிவிட்டார். கதவு திறந்தது; சப்தம் 'ஜன்' என்று ஒலித்தது. பிண்டம் அண்டம் இரண்டையும் தாண்டிய இடம் நம்முடைய இடம்."

32

கண்களால் காட்சியைப் பார். அது பிண்டத்துக்கு அப்பாற் பட்டதாகும். இதயத்தில் எண்ணிப் பார். அதுவே அண்டத்தின் நடுவில் இருக்கிறது.

திருட்டுத்தனம் வஞ்சனை நிந்தனை பொய் எல்லாவற்றை யும் விட்டுவிட்டுச் சற்குருவுக்குத் தலைவணங்கு. சத்சங்கம் செய். சத்திய நாமத்தைச் சொல். எதிரே காட்சியைக் காணலாம்.

எந்த மக்கள் இவ்விதம் நல்ல பலன் சேர்த்தார்களோ அவர்கள் ஒளி உலகெங்கும் பரவிற்று. எட்டுப் பிரமாண இடத்தில் சுகம் அடையலாம். பிண்டத்தின் உள்ளேயும் பார். எவன் சொல்ல இயலாத அமரபுரியைப் போலவே மற்றோர் உலகமும் செய்து அதில் சுத்த பிரும்மத்தையும்:நிறுவி, அநாமி என்ற பெயரையும் ஏற்றுக் கொண்டானோ அவனே அண்டத்தின் அறிய இயலாத அரசனாகும்.

[பிண்டத்துக்குள் பிரம்ம ரந்திரத்தில் காணும் அவனே அண்டத்திலும் சத்தியலோகத்தில் காணப்படுகிறான். அண்டத் தின் அமைப்பின்படியே பிண்டத்தின் அமைப்பாம். அண்டம்-வெளியுலம்; பிண்டம்-உடல்]

அண்டத்தின் ஏழாவது சூனியம் அதன் ஒளிக்கு நகல் செய்து மஹாகாலன் அங்கே வந்து தங்கினார். அவர் பெயர் அகமராம்.

[நகல்-போல ஆக்கப்பட்டது-போலி]

அண்டத்தின் ஆறாவது வெளி அகம அரண்மனையின் நகல் தயாராகி நிர்க்குண காலம் அங்கே தங்கிற்று. 'அலக்' புருஷனாம் அவர்.

அண்டத்தில் ஐந்தாவது சூனியம் சத்திய லோகத்தின் போலியாம். மாயையுடன் நிரஞ்சனர் இருக்கிறார். சத்திய புருஷனுடைய தரிசனம் அங்கே. நாலாவது சூனியம் அண்டத் தில் நிர்வாண பதத்தின் நகலாம். சத்குரு 'அவிகதக் கலை' யாகி இங்கே வந்தார். இது எல்லாம் அந்த சோஹம்' தான்.

புது வெளியின் மஹிமையைக் கேள். ஒரு சூனியம் இரண்டு வெளியாயிற்று. மேலே மகா சூனியம் வலுத்தது. கீழே சூனியம் பரவிற்று.

ஏழாவது சூனியத்தில் மகாகாலர் இருக்கிறார். அவருடைய கலை மகா சூனியத்தில் நிரம்பியிருக்கிறது. அவர்தான் பரப் பிரம்மத்தை நிறுவினார். அந்த நிரட்சரம்தான் எல்லாம்.

ஆறாம் வெளியில் நிரட்சரரின் ஆட்சி நடக்கிறது. அவர் கலை வந்து சூனியத்தில் அடங்குகிறது. அவரை மீண்டும் அட்சரப்பிரமம் என்று சொல்கிறோம். அந்த ஒளிதான் ரரங்காரம்.

ஐந்தாவது ஒளியில் நிரஞ்சனர் அரசு நடக்கிறது. கலை இரண்டாவது சூனியத்திலும் மண்டிற்று. புருஷன் பிரகிருதியின் பதவியை அடைந்து சுத்த சற்குணமாகப் பரவியிருக்கிறார்.

புருஷன் பிரகிருதி இரண்டாவது வெளியில். அவர் கலையை முதலிலேயே கேட்டு வந்தோம். 'சோதி, நிரஞ்சனன்' என்று பெயர் பெற்றுத் தூலமான சர்க்குணமாகப் பரவியிருக் கிறது.

முதல் சூனியத்தில் இருக்கும் சோதியின் கலை அவித்தை மங்கையாம். ஆண்களுடன் பெண்களையும் பெற்றாள். கடல் பூமி எங்கும் பரவியிருக்கிறாள்.

ஏழாம் வெளியில் மீண்டும் இறங்கி வந்தோம். பிரம்மா விஷ்ணு சமாதியை எழுப்பினோம். பிள்ளைகளுடன் பெண்கள் மணந்தனர். 'சிரிகம்' என்ற பெயர் உச்சரிக்கப்பட்டது.

ஆறாம் வெளியில் சிவனுடைய இருப்பிடம். கங்கை, கௌரி, இருத்தி இவர்களுடைய மேடை. கைலாச மலையில் கணங்கள் சத்தம் இடுகின்றனர். அங்கே ஸோகம் தான் தலைமை.

ஐந்தாம் வெளியில் விஷ்ணு வீற்றிருக்கிறார். லக்ஷ்மியுடன் சிம்மாசனத்தில் அலங்காரமாயிருக்கிறார். ஹிரிங் ஒலி வைகுண் டத்தில் பக்தர் குழாங்கள் (செய்கின்றனர்). அடியார்களுக் காகவே அவர் இருக்கிறார்.

நாலாம் வெளி பிரம்மாவின் பரப்பாகும். சாவித்திரியுடன் விளையாடுகிறார். பிரம்மா இருத்தியின் காரணமாக 'ஓம்' பதத்தை உண்டாக்கினார். இந்த உலகத்தைப் படைத்தார்.

மூன்றாவது வெளியில் 'தர்மராஜா' வசிக்கிறார். நரகம் சுவர்க்கம் இரண்டையும் அவர்தான் ஆக்கினார். கர்மத்தின்

பலனை ஜீவர்கள் அனுபவிக்கிறார்கள்; அப்படி நியாயத்தைப் பரப்பினார் அவர்.

இரண்டாவது வெளியில் இந்திரர் வசிக்கிறார். அங்கே தேவர்கள் முனிவர்கள் வசிக்கின்றனர். அங்கே அரம்பை நித்தியம் நடம் புரிகிறாள். 'கலிங்க' சப்தம் உச்சரிக்கப்படுகிறது.

முதல் ஆகாயம் மிருத்யுவினுடைய உலோகம். அங்குத்தான் பிறப்பு இறப்பின் ஏமாற்றம் எல்லாம். சத்குருவின் பெயரைச் சொல்கின்ற அந்த அன்னம் சத்திய லோகத்தை அடைகிறது.

பதினான்கு (மேல்) உலகங்களையும்பற்றிச் சொன்னேன். இப்பொழுது கீழே உள்ளதைப்பற்றி விசாரிப்போம். ஏழு உலகங்களுக்கு ஆறு காவலர்கள். தனித்தனி அவற்றின் பரப்பைக் கேள்.

ஆதிசேடன், பசு, பன்றி, மீன், கச்சம், கூர்மம் இந்த ஆறும் (பூவுலகம் நீக்கி ஆறு) ஏழு உலகத்தில் இருக்கின்றன. இது தான் பாதாளத்தின் பெருக்காகும்.

## ராம நாமத்தின் பெருமை

### 33

ராமன் பெயரினால், பிண்டம் பிரும்மாண்டம் எல்லாம் ராமன் பெயர் கேட்டு (உண்மை தெரியாமல்)ப் பிரமை அடைகிறது. நிர்க்குணம் நிராகாரத்துக்கப்பால் பரப்பிரம்மம் இருக்கிறது. அதன் பெயர் தான் 'ராமன்' அல்லது ரரங்காரம் என்று அறியப்படுகிறது. விஷ்ணு பூஜை செய்கிறார்; சிவன் தியானம் செய்கிறார். பிரம்மா பலவாறு புகழ்பாடித் துதிக்கிறார். கபீர் சொல்கிறார்: "யாரும் பேசிக் கரை ஏறிவிட முடியாது. (முடியப் புகழ்ந்துவிட முடியாது) ராமநாமம் சொல்ல முடியாத கதை."

### 34

ஏ நாக்கே, ராம குணத்தைத் திளைத்துத் திளைத்து அருந்திடு- குணம் கடந்த வேரற்றவனை அடை. சகோதரா, எதை வழிபட்டால் நல் நினைவும் நல்லறிவும் ஏற்படுமோ அந்த நிர்க் குணப் பிரம்மத்தை உருப் போடு, நஞ்சைவிட்டு ராமநாம

(அமுத)த்தை நினைக்க மாட்டாய்; பெறு கெட்டவனே! பேராசைக்கு கெதிரே முழுகுவது ஏன்? ராமரசம் அருந்தியவர் எல்லோரும் கரையேறினார்கள். வீண்பேச்சுப் பேசியவர்கள் எல்லோரும் அமுந்தினார்கள். ஏ மனமே, ராமன் என்று சொல்ல ஆரம்பித்ததிலிருந்து பிறகு சொல்வதற்கு ஒன்றும் இல்லை. ராமநாமம் அறியாமல் யோகம், யாகம், ஜபம் தானம் இவை எல்லாம் எதற்காகும்? காமக் குரோதம் இரண்டையும் அழித்துக் குருவின் பிரசாதத்தினால் எல்லோரும் கரையேறினார்கள். பிரமையை அழித்தவரான கபீர் சொல்கிறார்: "அழியாத 'ராமன்' கிடைத்தார்."

## 35

இந்த உலகத்தில் ராமநாமம்தான் சாரம். இராமனின் பெயர் அமுதவாணியாம். ராமன் பெயரால் கோடி பாதகங்கள் தொலையும். ராமனின் பெயரில் நம்பிக்கை வை. சாதுக்கள் ராமன் பெயர் சொல்லியே பக்தி செய்கிறார்கள். பக்தியும் ராமன் பெயர் சொல்வதாலேயே வலுவடைகிறது. இராமன் பெயர் சொல்லியே சூரர்கள் எதிர் எதிரே சண்டையிடுகிறார்கள்; சண்டையில் இறங்கி யுத்தத்தில் வெற்றியும் பெறுகிறார்கள். ராமன் பெயரைச் சொல்லிப் பெண் சதியாகிறாள். சாம்பலாகிக் கணவனுடன் எரிந்து பறக்கிறாள். ராமன் பெயர் சொல்லி எல்லாத் தீர்த்தத்தையும் சுற்றி வருகிறோம். தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கிறோம். ராமன் பெயர் சொல்லியே மூர்த்தி பூஜை செய்கிறார்கள். தானம் கொடுக்கும்போதும் ராமன் பெயரைத்தான் சொல்லுகிறார்கள். ராமன் பெயர் சொல்லியே பிராமணன் உஞ்சி விருத்தி செய்கிறான். (ஐயம் ஏற்கிறான்.) இராமன் பெயர் கிடைப்பது கடினம் என்றறி.

இராமன் பெயர் நான்கு வேதத்துக்கும் அடிப்படை. வேதங்களைப் பிழிந்தெடுத்துச் சலித்துக் கைவந்த தத்துவம் அது. ஆறு சாஸ்திரங்களைக் கடைந்தெடு; இராமநாமம்தான் கிடைக்கும். ஆறு 'தரிசனங்'களிலும் (சித்தாந்தங்களிலும்) அந்தக் கதைதான். ராமநாமம் ஆழம் காணாத விளையாட்டாம். தேடிக் காணமுடியாமல் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். இராமன் பெயரைத்தான் சிவன் யோகத்தில் தியானம் செய்கிறார்.

இராமன் பெயரைச் சொல்லிச் சித்தர் சாதகர் ஆயினர். சம்பு, சநகர், நாரதர் ஆகியோர் எல்லோரும் ஞானிகளானார் கள். ராமன் பெயர் சொல்லி ராமசந்திரன் பார்வை பெற்றார்; குரு வசிஷ்டர் மந்திரதானம் செய்ய முடிந்தது.

எவ்வளவுதான் சொல்வேன், ஆழம் காணா விளையாட்டை எடுத்து? யார்தாம் ராமநாமத்தை அறியமாட்டார். ராமன் பெயரைச் சொல்லித்தானே கிருஷ்ணன் கீதை சொன்னார், சேது கட்டினார். அப்பொழுது மர்மம் புரிந்தது. அது பெருஞ் சோதி. குணம் உருவம் அற்றது. அதற்குப் பெயர் நிரங்காரம் என்றறி. உருவம் கிடையாது. அமைப்புக் கிடையாது. வேதம் துதி செய்கிறது. சத்தியப் பொருளின் போக்கு சொல்லமுடியாத கதையாம்.

## 36

விஷ்ணு யாரை நினைக்கிறாரோ, சிவன் தியானத்தில் நிறுத்தி யாரை நினைக்கிறாரோ, பிரம்மா புகழ் வேதாந்தம் பாடுகிறாரோ, பிரம்மா சநகர் முதலானோர் யாருமே அவரைப் பார்க்க முடியாதோ அவர் பெயர்தான் 'ராமராயர்' (ராஜா ராம்) என்று சொல்லப்படுவது. கபீர் சொல்கிறார்: "ராம நாமத்தை யார் உலகுக்குக் கொண்டு வந்தாரோ அவரைக் கண்டு பிடி (புகழ்)."

## 37

நாம 'அமலம்' (பெயர் தரும் போதை) என்றும் இறங்கி விடாது. மற்றப் போதை கணம் ஏறும், கணம் இறங்கும். 'நாம அமலம்' தினம் மேலும் மேலும் ஏறிக்கொண்டேதான் இருக்கும். பார்த்தால் ஏறும். கேட்டால் இதயத்துடன் ஒட்டிக் கொள்ளும். எண்ணினால் உடலையே சுழற்றிவிடும். ஒரு கோப்பை குடித்தால் நல்ல மயக்கம் ஏறியவனாக ஆகலாம். நாமம் கிடைத்ததால் தொந்தம் ('இரட்டை'யால் எழும் தொல்லை) எல்லாம் ஒழிந்தது. எந்த மகன் நாம அமலரசத்தை அருந்தினானோ அவன் கரை ஏறினான். (நற்கதி அடைந்தான்.) வேசை நல்ல பேறு பெற்றாள். கசாப்புக்கடைக்காரன் வீடு பெற்றான். கபீர் சொல்கிறார்: "ஊமை வெல்லம் தின்ற கதை. நாக்கு (வாக்கு வன்மை) இல்லாமல் அதன் பெருமையை என்ன சொல்வது?

## சப்த மகிமை (சொல்லின் பெருமை)

### 38

சாதுக்களே! 'சப்த சாதனை' செய்யுங்கள். எந்தச் சப்தத்திலிருந்து எல்லாச் சப்தங்களும் வெளியாயினவோ அந்தச் சப்தத்தைப் பிடித்துக் கொள்ளுங்கள். சப்தங்களுக்கெல்லாம் எது குருவோ, எந்தச் சப்தத்தைக் கேட்டால் படிப்பினை ஏற்படுமோ அந்தச் சப்தத்தை மிகச் சிலரே அறிகின்றனர். யாருக்கு உள்ளர்த்தம் தெரியுமோ அந்தக் குரு மஹாத்மா. அந்தச் சிஷ்யன் சரியான சிஷ்யன். வேதம் புராணம் எல்லாம் அந்தச் சப்தத்தைச் சொல்கின்றன. எல்லோரும் சப்தத்தை நிலை நிறுத்துகிறார்கள். தேவர்கள் முனிவர்கள் சந்தர்கள் சப்தம் செய்கின்றனர். ஆனால் ரகசியம் அறியப் பெறவில்லை.

சப்தத்தைக் கேட்டுக் கேட்டு வேடம் போடுகிறார்கள். சப்தத்தை (உலகில் ஈடுபட்டவர்களும்) அன்புடன் சொல்கிறார்கள். ஆறு* 'தரிசனங்'களும் வேதத்தைப் பற்றிச் சொல்கின்றன. வைராகிகளும் சப்தத்தைப்பற்றிப் பேசுகின்றனர். சப்தத்தினால் தான் மாயை உலகத்தை உற்பத்தி செய்தது. இது சப்தத்தின் பரவலேதான். கபீர் சொல்கிறார்: "எங்கே சப்தம் இருக்கிறதோ, அங்கே விசித்திரமான ரகசியம் இருக்கிறது."

### 39

சாதுவே, சப்தம் எல்லாவற்றினும் தனித்தது. அறிந்தவர்கள் தான் அறியமுடியும். யோகிகள், யதிகள், தவம் புரிபவர்கள், சந்நியாசிகள் உடலில் சாம்பலைப் பூசுகிறார்கள். ஆனால் மூலமந்திரத்தைச் சற்குருவின் தயவினால் பெற்றால் ஒழிய கரை எப்படி ஏறமுடியும்? யோகம், யாகம், விரதம், நியமம், சாதனை, கர்மதர்ம அலுவல்கள் இவற்றை எல்லாம் தாண்டியது முக்தி. யமன் வாசலை எப்படித் தவிர்க்க முடியும்? நிகமம் (வேதம்) யாருடைய குணத்தை 'நேதி' (இது இல்லை அது இல்லை) எனப் பாடுகிறதோ, எவன் சங்கரன் யோகத்துக்கு ஆதாரமோ, பிரம்மா விஷ்ணு யாரைத் தியானத்தில் தாங்குகிறார்களோ அந்த இறைவன் (சுலபத்தில்)

---

* நியாயம், வைசேஷிகம், ஸாங்கியம், யோகம், பூர்வமீமாம்சை, உத்திர மீமாம்சை, என ஆறு வகைச் சாத்திரங்கள்.

அடையப்படாதவன். அபாரமானவன். சகோரப் புள் சந்திர னிடம் ஈடுபட்டிருக்கும் வகையில் சத்குருவின் பாதங்களில் ஈடுபட் டிருங்கள். கபீர் சொல்கிறார்: "சகோதர சாதுக்களே, நகம் முதல் தலை வரையில் சப்தம் (ஊடுருவி இயைந்து) நிற்கிறது. நாம்சப்தத்தை அவ்விதம் மதித்துப் பயன் கொள்கிறோம்."

## 40

சகோதரா, சப்தத்தைத் தேடிக்கொள். சப்தத்தைப் புரிந்துகொள். சப்தமே சப்தம் என நீ நட. சப்தம் ஆகாயம்; சப்தம் பாதாளம். சப்தத்தினால்தான் பிண்டம், (உடல்) பிரும்மாண்டம் (உலகம்) பரவுகிறது. சப்தம் பேச்சில் இருக்கிறது. சப்தம் காதில் நீங்காது இருக்கிறது. சப்தத்தின் காரணமாகத் தான் உருவம் ஏற்படுகிறது. சப்தமே வேதம்; சப்தமே நாதம்; சப்தத்தைத்தான் சாஸ்திரங்கள் பலவாறு பாடுகின்றன. சப்தம் தான் யந்திரம். சப்தம் தான் மந்திரம், சப்தத்தைத்தான் குரு சிடனுக்கு உபதேசம் செய்கிறார். சப்தமேதான் தத்துவம். தத்துவம் தாண்டியதும் அதுவே. சப்தம் உருவம் கொண்டது; அருவமானதும் அதுவே. சப்தம் தேவன். சப்தமே நாரி (பெண் = மாயை). சப்தம்தான் மூன்று தேவர்களையும் நிலை பெறச் செய்தது. சப்தம் பார்க்கப்படுவது பார்வையின் எல்லை மீறியதும் அதுவே. ஓங்காரம் அது தான். சப்தம் பிரும் மாண்டத்துக்கும் போகும். கபீர் சொல்கிறார்: "சப்தத்தைப் பரீக்ஷை செய்து அறிந்துகொள். சகோதரா, சப்தம்தான் படைப்பையே செய்தது."

(சப்தம் - சொல், மந்திரச் சொல், அடிப்படை ஒலி ஓம்.)

## மாயப் பிரபஞ்சம்

### (மாயையின் வஞ்சனை உலகம்)

## 41

இராமா! உன் மாயை, தொந்தத்தை (மயக்கப் பனித் திரையை) ஏற்படுத்துகிறது. அதன் போக்கு புத்தி ஒன்றும் புரிவதில்லை. தேவர் மனிதர் முனிவரையும் அது ஆட்டி வைத்து விடுகிறது. "சால்மலி விருக்ஷம்" (இலவ மரம்) உயர்ந்து என்ன செய்வது? புஷ்பங்கள் தனித்த ஒரு வகையினவாய் இருக்கின்றன. எவ்வளவு பறவைகள் (சாதகப் புட்கள்) காத்து நிற்கின்றன. தொட்டவுடன் பஞ்சாய்ப் பறக்கின்றன, அவற்றின் பழங்கள்.

ஈச்ச மரமே, உன் பெருமைதான் என்ன? பழத்தை ஒருவரும் அடையமுடியாது. முதுவேனிற்காலம் (அருங்கோடை காலம்) வந்து ஏறிவிட்டது. அச்சமயம் நிழலும் உபயோகப்படுவதில்லை. (இந்த மாயை) கெட்டிக்காரி; தன் கெட்டிக்காரத்தனத்தினால் பெண் - பொன் இவற்றைப்பற்றிச் சொல்லிக் கொடுத்து விடுகிறாள். கபீர் சொல்கிறார்: "ஏ சாதுக்களே, கேளுங்கள்! இராமன் பாதத்தில் அன்பு வையுங்கள். (அதுவே தப்ப வழி.)"

## 42

மாயை பெரும் வஞ்சமகள். நாம் அறிவோம். முக்குணம் கொண்ட சுருக்கைக் கையில் எடுத்துக்கொண்டு சுற்றுகிறாள். சொல்லை இனிமையாகப் பேசுகிறாள். கேசவனிடம் கமலா உருவத்தில் அமர்ந்தாள். சிவன் வீட்டில் பவானியாக இடம் பெற்றாள். பண்டாவுக்குச் சிலையாக (பூஜை மூர்த்தியாக) அமர்ந்தாள். புண்ணிய ஊரில் நீராய் மாறித் தங்கினாள். யோகியிடம் யோகினியாக அடைந்தாள். அரசனின் அரண்மனையில் அரசியாக ஆட்சி செய்கிறாள், சிலருக்கு வைரமாய்ச் சேர்ந்தாள். சிலரையோ செல்லாக்காசின் உருவத்திலேயே மயக்கினாள். பக்தனுக்குப் பத்தினியானாள். பிரும்மாவுக்குப் பிரும்மாணியானாள். கபீர் சொல்கிறார்: "சந்தர்களே இது எல்லாம் சொல்ல இயலாத கதையாகும்."

## 43

எல்லோரும் பித்துக் கொள்கிறார்கள். ஒருவரும் (தப்பிப்) போவதில்லை. திருடனுடன்கூட வீட்டின், எலியும் சேர்ந்து விட்டது. யோகி யோகம் தியானம் இவற்றில் வீண்பெருமை கொண்டு மயங்குகிறான். பண்டிதர் புராணம் படித்து மயக்கம் அடைகின்றனர். தவம் செய்பவன் தவத்தின் ரகசியத்தில் கிறக்கம் கொள்கிறான். சந்நியாசி நாம் என்று பெருமை மயக்கம் கொள்கிறான். மௌலானா 'மோசாப்' படித்துக் கர்வம் கொள்கிறான். காஜி நியாயம் அளித்துத் தற்பெருமையில் மயங்குகிறான். சுகதேவர், உத்தவர், அக்ரூரர் இவர்கள் மயங்கினர். அனுமான் வாலைக் கொண்டு கர்வம் அடைந்தார். சம்சாரம் (உலகில்) பூராவும் மாயையின் ஒட்டத்தில் மதம் கொண்டது. அரசன் அகங்காரத்தில் மதம் கொண்டான். சிவன் ஹரியின் பாதத்தில் சேவை செய்து மதம் கொண்டிருந்தார். கலியில் ஜயதேவன் பெயரில் மதம் கொண்டார். இது சத்தியம், சத்தியம் என்று சொல்லி வீட்டுக்குள் இருந்த பகையே ராவணனை அழித்ததுபோல், ஸ்மிருதியும் வேதமும் அழிகின்றன. இதுதான்

சஞ்சலமுற்ற மனத்தின் கீழ்த்தரமான வேலை. (அதனால் தான்) கபீர் சொல்கிறார்: "மனமே ராமன் பெயரைப் பாடி வழிபடு."

## 44

குருட்டு மாயை படைப்புக்கு வைரி. மூன்று உலகத்திலும் வஞ்சனையைப் பரப்புகிறாள். பெயரை அழித்துப் பிரம்மாவை ஏமாற்றினாள். தேவர்களுடன் திரிபுரம் சினந்த சிவனையும் ஏமாற்றினாள். அரசனை (நிரஞ்சனனை) ஏமாற்றினாள். விஷ்ணுவிடம் பதினான்கு உலகங்களின் தலைமை வந்தது. எந்தப் பொருளுக்கு முதல் முடிவு தெரியாதோ அந்தப் பொருளுக்கு நீ ஏன் அஞ்சுகிறாய்? அது சோதி. நீ விட்டில் ஆகிறாய். உயிரை யமலோகம் அனுப்புகிறாய். வேப்ப மரப் புழுவுக்கு வேம்பு இனிப்பு.

கிராமத்தான் (விஷயம் தெரியாதவன்) நஞ்சை அமுதம் என்பான். நஞ்சில் என்ன நன்மை (குணம்) இருக்கமுடியும்? பயன் கொஞ்சம் இருக்கும்; வேரே அழிந்துவிடும். நஞ்சும் அமுதமும் ஒரே மாதிரி சமமாகப் போயின. யார் பகுத்து அறிய முடியுமோ அவர்கள் நஞ்சை அறிவார்கள். அறியாத காரணத் தால் மனிதன் புத்தி என்ன ஆகிவிட்டது? (கெட்டுவிட்டது) பழக்க அறிவு இல்லாமல் அசட்டு உலகம் உண்மை உணரவில்லை. மதியில்லாதவனுக்கு என்ன குணம் சொல்வது? பேராசையுடன் ஒட்டிய நம்பிக்கை தங்கிவிட்டது.

சாகிறவனாக இருக்கிறாய். செத்து விடுவாய், செத்தால் (தாரை தப்பட்டை) வாத்தியங்கள் முழங்கிவிடும். உலகம் கனவை விரும்புவதாக ஆகிவிட்டது. உண்மையான அறிவாளி சொல்லிக் கொண்டே இருக்கிறார். (பயனைக் கேட்பதில்லை.)

## 45

மாயை (டம்பம், அபிமானம், உலகப் பதவி, பணம் இவற்றின் செருக்கு) சராசந்தன் மூலம் சிசுபாலனை அழித்தது; ஸஹஸ்ரார்ஜுனனை வஞ்சனையால் கொன்றது, ராவணனைப் பெருவஞ்சனையால் அழித்தது. இலங்கையில் தங்கச் சுவர்தான் தங்கிற்று. துரியோதனன் பெருமை போயிற்று. பாண்டவர்கள் உண்மை அறியாமல் இருந்தனர். மாயையின் ஆட்டத்தில் எல்லா அரசரும் அழிந்தனர். உயர்ந்த நடுத்தரமான வாத்தியங்கள் முழங்கின. ஆறு நான்கு எல்லா (மற்றவர்கள்)ருடைய சொத்துக் களும் பூமியில் புதைந்தன. ஓர் உயிரும் உண்மை தெரிந்து நம்பு வதில்லை. எவ்வளவுதான் சொல்வது? எல்லோரும் தெளியாமல்

செல்கிறார்கள். தெளிந்தவர்கள் (அப்படிக் கூறிக் கொள்பவர்) தெளியாதவர் (இரண்டு வகையினர்) பூசலும் ஒன்றாக ஆயிற்று.

இந்த மாயை உகை மோகினி. ஓடி ஓடி உலகத்தை மயக்கம் கொள்ளச் செய்கிறாள். அரிச்சந்திரன்(கூட) சத்தியத்தின் காரணமாக வீடு வீடாக விலை கூறப்பட்டான்.

## 46

ரகுநாதனுடைய இந்த மாயை பித்துக் கொண்டவள், வேட்டையாடச் செல்கிறாள். கெட்டிக்காரி, வஞ்சகி, பொறுக்கிப் பொறுக்கி அடிக்கிறாள். ஒருவரையும் அருகில் விட்டு வைப்பதில்லை. மௌனிகள் (யோகிகள்), வீரர்கள் (அர்ஜுனன் போன்றவர்கள்), திகம்பரர்கள் (சுகர், தத்தாத்ரேயர் போன்ற வர்கள்) இவர்களை எல்லாம் விழ்த்தினாள். அவர்கள் தியானம் செய்தவர்கள், யோகிகள் தாம். காட்டில் திரிந்தவர்கள். மாயையை அனுபவிக்காதவர்கள், அவர்களையும் வீழ்த்திற்று. வேதம் படிக்கின்ற பண்டிதர்கள், பூசனை செய்கின்ற இல்லறத் தோர் 'பொருளாய்வு' செய்கின்ற பண்டிதர்கள் எல்லோருக்கும் கடிவாளம் மாட்டிற்று. சிருங்கி இருடியை வனத்தில் பிடித்தது. ஊருக்கு இழுத்து வந்தது. பிரும்மாவின் தலையை உடைத்தது. மச்சந்த நாதர் (மாயையின் அதிகாரத்தால்) முதுகு காட்டி ஓடினார். சிங்களத் தீவுக்குச் சென்றார். சாக்தன் வீட்டில் 'கர்த்தா தர்த்தா'; ஹரிபக்தனிடம் தாசி; (இந்த உருவத்தில் மாயை வலை வீசுகிறது.) கபீர் சொல்கிறார்: "ஏ சாதுக்களே! மாயை எவ்விதம் வந்தாலும் அவ்விதமே திருப்பி விடுங்கள்."

(தட்சப் பிரஜாபதி யாகத்தில் பிரும்மாவின் தலை உடைந்தது)

## 47

பெண் பாம்பு உண்டாக்கித் தந்தது. அது பாம்பையே கடித்துத் தின்றது. (குண்டலினி சக்தியையே இந்த மாயை அழித்து விடுகிறது.) குருவின் பாதத்தைப் பார்த்து நின்ற ஓரிருவரே பக்தரானார்கள். சிருங்கி முனி ஓடினார். காட்டி லேயே வசித்தார். பின்னால் மாயைப் பாம்பு அவரையே அழுத்திப் பிடித்துக் கடித்துத் தின்றது. சிவபிரான் பெரிய சூலம் தாங்கி ஓடினார் கைலாசத்துக்கு. பருவதப் பிரகாசம் ஜோதி உருவத்தில் வெளிப்பட்டது. தேவர், மனிதர், முனிவர், யோகிகள், யதிகள் ஒருவருமே தப்ப முடிந்ததில்லை. (மாயை) எண்ணெய் உப்புக்கூடத் தேடுவதில்லை; பச்சையாகவே

பிடித்துத் தின்றுவிடுகிறாள். இந்தப் பெண் பாம்பு சாதுக்களிடம் பயப்படுகிறது. அங்கே செல்வதில்லை. கபீர் சொல்கிறார்: "குரு மந்திரத்தால் அது மடிந்துவிடும்."

## 48

பண்டிதரே அறிந்து கொள்ளுங்கள்—யோசித்துப் பாருங்கள். இது புருஷனுடைய (நிரஞ்சனனுடைய) மனைவி (மாயை) பிராமணர் வீட்டில் பிராமணியாயிருப்பாள். யோகியின் வீட்டில் பணிப் பெண்ணாக இருப்பாள். கமலா படித்துப் படித்துத் துருக்கப் பெண்ணாகி விட்டாள். கவியிடம் தனியாக இருப்பாள். வரனை வேண்டமாட்டாள். மணம் புரிய மாட்டாள். புத்திரன் பிறப்பு ஏற்படும். இந்த ஆதிக் குமரி, குமரன் கிழவன் ஒருவரையும் விடமாட்டாள். தாய் வீட்டிலும் இருக்க மாட்டாள். மாமன் வீட்டுக்கும் போக மாட்டாள், தலைவனுடனும் தூங்க மாட்டாள். கபீர் சொல்கிறார்: "யுகம் யுகமாக வாழ்வாள். குலம் கோத்திரம் இழப்பாள்."

## 49

பண்டிதரே நீர் அறிவீரா? யார் (அந்தப்) பெண் (மாயை)? ஒருவரும் விவாகம் ஆகிக் குமாரியாக இருந்ததில்லை. இவளை எல்லாத் தேவர்களும் சேர்ந்து அரியிடம் கொடுத்தார்கள். அவள் நாலு யுகமும் அரியுடன் கூட இருக்கிறாள், இவள் முதலில் பத்மினி உருவத்தில் வந்தாள். இவள் பாம்பு. எல்லா உலகத்தையும் பார்வையிலேயே சாப்பிட்டு விடுகிறாள். இவள் என்றும் இளம் பெண். அவன் சிரேஷ்டமான தலைவன். மிகவும் தேசுள்ள மங்கை அவனிடத்தில் விருப்பம் கொண்டாள். கபீர் சொல்கிறார்: "அவளிடம் உலகத்துக்கெல்லாம் ஆசை. அவள் தன் இச்சைப்படி எல்லோரையும் அழித்துக்கொண் டிருக்கிறாள்."

## 50

நாரி (மங்கை - மாயை) கையிதழ்களாலேயே விளையாடுகிறாள்: (கை காட்டியே காரியத்தைச் சாதித்துக் கொள்கிறாள்) யார் பண்டிதர்களோ அவர்கள் விசாரித்து (யோசித்து) அறிந்து கொள்ளுங்கள். உடை கட்டிக் கொள்வதில்லை. திறந்தபடி இருக்கிறாள். உயிரற்றவர்கள் (மனோபலம் அற்றவர்கள்)—அவர்களுக்குப் பணத்தில் அதிகம் பிரியம். அவர் நேராகவோ

மாற்றியோ வாத்தியம் வாசிக்கிறாள். சிலரைக் கொல்லு கிறாள். சிலரைத் தூக்கி விடுகிறாள். கபீர்-அடியாருக்கும் அடியார்-சொல்கிறார்: "அவள் சிலருக்குச் சுகம் தருகிறாள், சிலருக்கு வருத்தம்(தருகிறாள்)."

## 51

சந்தர்களே, ஓர் ஆச்சரியம் நடந்தது. சொன்னால் யார் நம்புவார்கள்? ஒரு புருஷன், ஒரு மங்கை. அதைப்பற்றி எண்ணிப் பார். ஒரே அண்டம். அதிலிருந்து எல்லா எண்பத்து நாலாயிரம் (ஜீவராசிகளும்) வெளியாயின. உலகம் பிரமையில் மயங்குகிறது. ஒரே பெண் உலகம் முழுமைக்கும் வலை விரித்தாள். உலகம் முழுவதும் மோகத்தில் ஆழ்ந்தது. தேடினார்கள்—பிரம்மா, விஷ்ணு, மகேசுவரன் மூவரும்—ஆனாலும் ஒருவரும் முடிவைக் காணவில்லை. நாகபாசத்தை எடுத்துக்கொண்டாள். உடலுக் குள்ளேயே வீசி உலகத்தையே நாசம் செய்கிறாள். ஞானமாகிற கத்தி இல்லாமல் எல்லா உலகமும் சண்டையிட்டு மாள்கிறது; ஒருவராலும் பிடிக்க முடிந்ததில்லை. தான் மட்டும் பூ. பிஞ்சு, பழம் உள்ள தோட்டமாயிருந்து தானே பொறுக்கிப் பொறுக்கி உண்கிறாள். கபீர் சொல்கிறார்: "யாரை குரு விழிப்படைச் செய்தாரோ அவர்கள் தாம் (தப்பி) முன்னுக்கு வந்தார்கள்."

## ஜகத்தின் உற்பத்தி (உலகம் பிறந்த கதை)

## 52

உயிரின் உருவம் ஒன்று உள்ளே இருக்கிறது. உட்சோதி ஒளி தந்தது. இச்சை என்ற பெண் உருவம் எடுத்தாள். அவள் பெயர் காயத்ரி என்று ஏற்பட்டது. அந்தப் பெண்ணுக்கு மூன்று மக்கள் பிறந்தனர், பிரம்மா, விஷ்ணு, சம்பு என்று பெயர்கள் ஏற்பட்டன. அப்பொழுது பிரம்மா தாயைக் கேட்டார்: 'உன் புருஷன் யார்? நீ யாருடைய மனைவி?' (அவள் சொன்னாள்:) 'நீ நான், நான் நீ. வேறு ஒருவரும் இல்லை. நீ என் புருஷன்; நான் உன் மனைவி.'

தகப்பன் மகன் இருவருக்கும் ஒருத்தி மனைவி? மாயை ஒருத்தி தான் அப்படிப் பிறந்தாள். இது நன் மகனுக்குச் சரியாகப் படவில்லை. தந்தையைத் தேடிக் கொண்டு புறப் பட்டான்.

## 53

உள்ளொளி சப்தம் ஒரு பெண். அரி, அயன், முப்புரம் எரித்தோன் மூவரும் அவளுடையவர்கள். (விதாதா) படைத்தவன் பதினான்கு உலகத்தையும் ஆக்கினார். அவர்கள் பெயர் ஹரி, ஹரன், பிரும்மா (அரி, அரன், அயன்), மீண்டும் அவர்கள் மூன்று ஊரை ஆக்கினார்கள். அவர் மீண்டும் அண்டத்தையும் பிரும்மாண்டத்தையும் ஆக்கினார். பொய்யான ஆறு தர்சனத்தைப் (வேதாந்தங்களைப்) பரப்பினார். வயிற்றில் (இருக்கும் பொழுது) யாரும் வேதம் படிப்பதில்லை. 'சுந்நத்' செய்து கொண்டு துருக்கன் பிறப்பதில்லை. பெண்ணின் கருப்பையிலிருந்து பிறக்கிறோம். உருப் பல, செய்கை பல. உண்மையில் நமக்கும் உனக்கும் ஒரே ரத்தம் தான். ஒரே பிராணன் தான். மோகம் பாம்பு. ஒரே தாய்தான் உலகை ஆக்கினாள்! எந்த ஞானத்தால் தனியானோம்? காண முடியாத அதன் போக்கை யாரும் அறியவில்லை. ஒரே நாக்கினால் எவ்வளவு தான் சொல்வேன்? வாயில் பத்து லட்சம் நாக்குகள் இருந்தால் அப்படிப்பட்ட மடாதிபதி வந்து சொல்லலாம்.

கபீர் கூவிச் சொல்கிறார்: "இந்த விவகாரத்தைத் தெரிந்து கொள். ராமன் பெயர் அறியாமல் உலகம் முழுகி அழிகிறது."

## 54

முதலில் வெளியானது யார்? பிறகு அந்த இடத்தில் வெளிப்படுத்தியது யார்? பிரம்மா விஷ்ணு சிவன் சக்தி வெளியாயினர். முதலில் அவர்கள் தாங்களே அனுமானம் செய்து பக்தி செய்தனர். காற்று, நீர், நிழல் வெளியாயின. மாயை மிகவும் பரவி வெளிப்பட்டது. அண்டம், பிண்டம், பிரும்மாண்டம் எல்லாம் வெளியாயின. பூமி, நவகண்டங்கள் வெளியாயின. சித்தர், சாதகர், சந்நியாசிகள் வெளியாயினர். இவர்கள் எல்லாம் அழியாத பிரம்மத்தில் ஈடுபட்டிருந்தனர். தேவர், மனிதர், முனிவர் சமூகங்கள் உண்டாயின. எல்லோரும் தேடினர், தேடிக் களைத்தனர். சீவர்கள், சிவர்கள் எல்லோரும் தோன்றினர். எல்லோரும் அந்தத் தலைவனுடைய அடியார்கள். கபீர் வேறு ஒன்றையும் அறியமாட்டார். அவருக்கு ராமன் பெயரில் தான் நம்பிக்கை.

## 55

முதலில் அவர் ஒருவர் தான் வந்தார்; அவர் நிராகாரர், நிர்க்குணர், நிர்நாமர் (உருவம், குணம், அற்றவர்; செப

நிலைக்கும் மீறி அடையத் தக்கவர்) அப்பொழுது பூமி, ஆகாயம், காற்று ஒன்றும் கிடையா. அப்பொழுது நெருப்பு, நீர் நிலைகள் கிடையா. அப்பொழுது ஐந்து தத்துவங்கள் மூன்று குணங்கள் இல்லை. மாயை சிருஷ்டியும் அப்பொழுது ஆகவில்லை. மூலம், முடிவு, நடு என்ற ஒட்டம் (தொடர்ச்சி) கிடையாது. இருட்டு, வெளிச்சம் இரண்டும் கலந்த நிலை, அப்பொழுது இல்லை. அப்பொழுது பிரும்மா, விஷ்ணு, மகேசுவரனும் இல்லை. சூரியன், சந்திரன் கணேசரும் இல்லை. மீன், ஆமை, பன்றி (அவதாரங்களும்)யும் கிடையா. புரட்டாசி, பங்குனி முதலிய மாதங்களும் ஏற்படவில்லை. கஞ்சன், கிருஷ்ணன், பலி, வாமனன், ரகுபதி, ராவணன் எல்லாம் அப்பொழுது இல்லை. அப்பொழுது ச(ற்)குணம் எங்கும் பரவவில்லை. அப்பொழுது பத்து அவதாரங்களும் ஏற்படவில்லை. அப்பொழுது சரசுவதி, கங்கை யமுனையும் கிடையா. கடல், சமுத்திர அலைகளும் கிடையா. தீர்த்தம், விரதம், செபம், பூசை ஒன்றும் இல்லை. தேவர் என்றும் தைத்தியர் என்றும் மற்றவர் என்றும் இல்லை பாவம், புண்ணியம், குரு உபதேசம், படித்தல், சிந்தித்தல். எழுதுதல் என்று ஒன்றும் அப்பொழுது இருந்ததில்லை. வித்தை. வேதம், புராணம், சமய நூல்கள், குரான் ஒன்றும் அப்பொது ஏற்படவில்லை.

கபீர் நன்கு யோசித்துச் சொல்கிறார்: "அப்பொழுது செயற்கைப் பொருள் ஒன்றும் கிடையாது. அங்கே அடைய முடியாத - அறிய முடியாத நிலையில் பரம புருடன் மட்டும்தான் இருந்தார்."

## 56

அடைய முடியாத சிருஷ்டிகர்த்தாவான ஒருவர் அவர். அவருக்குத் தாயும் கிடையாது, தந்தையும் கிடையாது. கர்த்தா வுக்கு உறவினர் (சகோதரர்கள்) மனைவி ஒன்றும் கிடையாது. அப்பொழுது அகண்டமாய், அடைய முடியாதவராய்க் கரைகாண முடியாதவராய் இருப்பவர் அவர். கர்த்தா ஒன்றும் சாப்பிடுவ தில்லை, குடிப்பதில்லை. அவர் என்றும் உயிர் விடுவதுமில்லை. உயிருடன் இருப்பதும் இல்லை. அவருக்கு ஓர் உருவமும் கிடையாது. ஓர் எல்லைக் கோடும் கிடையாது. நிறமும் கிடையாது. உருவமும் கிடையாது. சாதி கோத்திரம் ஒன்றும் மில்லை. அவர் வர்ணனையை என்னால் செய்ய இயலாது. உருவமும் அல்ல: அருவமானவரும் அல்ல; அவருக்குப் பெயர் இல்லை நிறம் இல்லை. வர்ண மற்றவரும் அல்ல. அவருக்குத்

தனி இடமும் கிடையாது. கபீர் விசாரித்துச் சொல்கிறார்: "யாருக்கு நிறம், இடம் கிடையாதோ, உருவற்றவராய், குணமற்றவராய் இருக்கிறாரோ அவரே எல்லா இடத்திலும் நிறைந்திருக்கிறார்."

## 57

கர்த்தா படைப்பு(மை) வேலையைச் செய்தார். ஓம் காரத்திலிருந்து சிருஷ்டியை ஏற்படுத்தினார். ஐந்து தத்துவங் கள், மூன்று குணங்கள் இவற்றை உண்டாக்கினார். அதிலிருந்து செயற்கைகள் எல்லாம் படைத்தார். பூமி வெளி இரண்டையும் செய்தார். திங்கள், ஞாயிறு ஒளி எல்லாம் செயற்கைதாம். ஐந்து தத்துவம், முக்குணம் அவையும் செயற்கைப் பொருள்களே. மாயையின் படைப்பும் செயற்கையே. தொடக்கம், முடிவு, நடு இவற்றின் தொடர்பு எல்லாம் செயற்கையே. இருட்டுக் கிணறு, வெளிச்சம் எல்லாம் செயற்கை தாம். குணம் உள்ளதன் பரப்பெல்லாம் செயற்கை, (பொறிகள் காணக்கூடும் பொருள்கள் எல்லாம்); விட்டுணுவின் பத்து அவதாரங்கள், கஞ்சன், பலி, வாமனன், ரகுபதி, (இ)ராவணன், ஆமை, மீன் (மச்சம்), பன்றி, புரட்டாசி, பங்குனி முதலிய மாதங்கள், சமுத்திரம், சமுத்திர அலைகள், சரசுவதி, யமுனை, கங்கை எல்லாம் செயற்கைப் பொருள்களே. ஸ்மிருதி, வேதம், புராணம், 'காஜி' புத்தகங்கள், குரான் எல்லாம் பொய்யே (செயற்கைப் பொருளே). யோகம், பூசை, மற்றத் தேவி தேவதைகள், பாவம், புண்ணியம், குரு உபதேசம், படித்தல், எழுதுதல், சிந்தித்தல் எல்லாம் கிருத்திமம் (செயற்கை). கபீர் யோசித்துச் சொல்கிறார்: "கிருத்திமம் கர்த்தாவாக முடியாது. இந்த மந்திரம் எல்லாம் கிருத்திமம். (மாயை - சிருஷ்டி - செயற்கை. ஆகவே பொய்.) உண்மையை எல்லோரும் கேளுங்கள்."

(எல்லாம் கண்கட்டு வித்தையில் வந்த பொருள்களே! அதாவது உருவெளிப் பொருள்களே எல்லாம்.)

## 58

படைப்பவன் ஒருவன் (உள்ளவன்) மற்றவை எல்லாம் (பொய்த் தோற்றம் =) மந்திரப் பொருள். பீர் காஜி ஒருவருமே நிலையானவரல்ல. பிரம்மா, விட்டுணு, மகேசுவரன் எல்லாம் மாயம். இந்திரன் சந்திரன் கணேசன் நீர் நிலம் எல்லா உலகும்

பொய். உலகம் ஆகாயம் எல்லாம் பொய் என்று அறி. சமிருதி வேதம் எல்லாம் பொய் வருணனை. மந்திரவாதியின் ரகசியம் பார்க்கப்படவில்லை. சித்தர் சாதகர், குருவின் உபதேசம் எல்லாம் பொய்ப் படைப்பு. எங்கெங்கெல்லாம் இந்த மாயம் தோற்றம் அளிக்கிறது! யோகம், வேள்வி, விரதம், பூசை எல்லாம் மாயம். மற்றத் தேவிகள், தேவாலயங்கள் எல்லாம் அப்படியே பொய். தீர்த்தம், விரதம், ஆசாரம் எல்லாம் பொய். யோகம், வேள்வி விவகாரங்கள் எல்லாம் பொய். நீர், நிலம் எல்லாத்தோற்றமும் பொய். பொய்யுடன் கண்கட்டு வித்தையும் சேர்ந்தது. இந்தப் படைப்பு அவ்வளவும் எல்லாம் கண்கட்டு வித்தையே. கண்கட்டு வித்தையில்தான் உலகம் தங்கியிருக்கிறது. கபீர் சொல்கிறார்: "இந்தக் கண்கட்டு வித்தையில் ஒருவரும் அந்த வித்தைக்காரனை அறிந்துகொள்ளவில்லை. (உலகம் எல்லாம் உருவெளித் தோற்றமே தவிர, உண்மையல்ல.)

## மனத்தின் பெருமை

## 59

சந்தர்களே! இந்த மனம் மிகவும் பொல்லாதது. யாருக்கு மனத்துடன் உறவுகொண்டு அதை இழுத்துப் போக நேரிட்டிருக்கிறதோ அவனுக்குத்தான் அது தெரியும். மனத்தின் காரணமாக இவர்கள் நிழல் அந்த நிழலில் சிக்கியது. (உண்மைப் பொருளில் கற்பனைப் பொருள் ஏறி மறைகிறது). நிர்க்குணம், சர்க்குணம் என்பதெல்லாம் மனத்தின் கண்கட்டு வித்தை. அதில் உண்மையானவர்கள், கெட்டிக்காரர்கள் எல்லோருமே திரிகிறார்கள். மனம்தான் பதினான்கு உலகத்தை ஏற்படுத்தியது. ஐந்து தத்துவங்களையும் மூன்று குணங்களையும் ஆக்கியது அதுவே. மூன்று உலகங்களின் உயிரையும் வசமாக்கிக் கொண்டது. இதை ஒருவரும் அறிந்து கொள்ளவில்லை. யார், நாம் இந்த உருவம், எல்லைக் கோடு அற்ற மனத்தை அழித்தேன் என்று சொல்கிறானோ அவன் கனவிலும் காணமுடியாத பல வண்ணச் சித்திரங்களை ஒவ்வொரு கணமும் காணவாம். ரசாதலம், முப்பத்திரண்டு பிரும்மாண்டம் எல்லாவற்றிலும் (அரசு) நியாயம் செலுத்தலாம். அறுசுவையில் மனம் ஆழ்ந்து அநுபவிக்கத் தொடங்கிவிட்டால் அதை எப்படி அடையமுடியும்? எல்லாவற்றிற்கும் மேல் அட்சரமான (அழிவில்லாத) பெயரில் மனத்தை எடுத்துச் சென்று வைத்தால் அப்பொழுது மனத்தின் கதி தெரியும். இந்த உண்மையைக் கபீர் (தம் வாயால்) சொல்கிறார்.

## நிர்வாண பதம்

### 60

பண்டிதர்களே! நன்கு அலசித் தெளிந்து போதல் வருதல் (இறப்புப் பிறப்புச் சுழல்) எப்படி ஒழியும் என்று சொல்லுங்கள். அறம், பொருள், இன்பம் வீடு என்ற பயன்கள் எல்லாம் எத்திசையில் இருக்கின்றன? அப்பா! வடக்கு, தெற்கு, கிழக்கு மேற்கு, சுவர்க்கம் பாதாளம் எதிலும் கோபாலன் இல்லாத இடம் கிடையாது. நரகம் எதற்குப் போகிறாய்? தெரியாதவனுக்குத் தான் சுவர்க்கம் நரகம் எல்லாம். ஹரியை அறிந்தவனுக்கு அல்ல. எந்தப் பயத்தைக் கண்டு எல்லோரும் அஞ்சுகிறார்களோ அந்த அச்சம் நமக்குக் கிடையாது. பாவம் புண்ணியம் என்ற ஐயம் இல்லை. நரகம், சுவர்க்கம் போவதும் இல்லை. கபீர் சொல்கிறார்: "ஏ சந்தர்களே 'பதம்' எங்கேயோ அங்கேதான் சேர்வேன்."

### 61

தோழி! திருமாலும் மாயையும் இருக்கிற வைகுண்டத்துக்குப் போ. நான்கு முக்திக்கும் எல்லையிலுள்ள அந்தப் பரமபதத்தை எடுத்துக்கொள். எதிரே சூனிய சொருபமான 'அலக்' காணப்படாமல் இருக்கிறது. அது நிரஞ்சன தத்துவம் என்று அறி. மனத்தில் பிரமை கொள்ளாதே.

எதிரே பகவான் இருக்கிறார். நிரட்சர நாமம். அவர் கோடி இடங்களை அழிக்கமுடியும், ஆக்க முடியும். அப்பால் மிகவும் ஆழமான பெரிய கடல் உள்ளது. யார் படகு எடுத்து வர முடியும்? யார் அங்கே இறக்கிவிட முடியும்? 'அஜபா'வைப் படகாகக் கொண்டு 'சுரதி'தான் இறக்கிவிடமுடியும். அழிவில்லாதவன் பெயரைச் சொல்லிக்கொண்டு அன்னங்கள் (முக்த ஜீவன்கள்) கரையேறுகின்றனர். அக்கரை ஏறிப் புருஷோத்தமனைச் சோதித்து அறிந்து கொள். அவருடைய அகண்டமானத பதம்தான் நிர்வாணபதம். அருகே ஒருவரும் வீடு பேறு விரும்புகிறதில்லை. விரும்பினால் அந்தப் பதத்தை விட்டுத் திரும்பி விடுகின்றனர். அன்புள்ள அன்னங்கள் எப்பொழுதும் சொல்லிக் கொண்டும் கேட்டுக்கொண்டும் இருக்கிறார்கள்.

அங்கே பன்னிரண்டு மாதமும் இளவேனிலும் அமர விழாவும் தான். கபீர் நன்கு தெள்ளத் தெளிந்து சொல்கிறார்: "அங்கே அசையாமல் இரு."

## 62

உண்மையான நற்செயல், உண்மைப் பெயர்-இவற்றை உலகம் அறிகிறதில்லை. அன்பு, நம்பிக்கை இல்லாத காரணத்தால் ஒத்துக்கொள்வதும் இல்லை. எல்லையற்ற உயிர்கள் கொண்ட இவ்வுலகம் இனியனை அறிந்துகொள்ளவில்லை. எண்பத்து நான்கு கோடி வகை உயிர்களுக்கும் என்ன சொல்லித் தெரியப் படுத்துவது? எதிரே இடையறாப் பெருவெளியாக நிர்வாணபதம் இருக்கிறது. அங்கே தூக்கம், பசி ஒன்றும் இல்லை. நிரட்சரமான (அழியாத, எழுத்தில்லாத) பெயர் உண்டு.

கபீர் கூவிச் சொல்கிறார்: "மனத்துக்கு இனியோனே கேள். சத்திய லோகம் சென்ற (அன்னம்.) உயிர் திரும்பி ஒருபொழுதும் வருவதில்லை.

## 63

அன்னமே, நம் உலகத்துக்கு வாரும். அங்கே அமுதப் பழத்தை அடையலாம். நம் உலகம் அடையமுடியாதது, தொலைவில் உள்ளது. ஒருவரும் அங்கே சென்று அடைய முடியாது. யார் மிகவும் அடிமையாகிறார்களோ அவர்களுக்குக் காட்டித் தருவேன். அழியும் உலகத்திலிருந்து அன்னம் வந்தது. புஷ்பத் தீவுக்கு வந்தது. 'அன்பு'த் தீவில் அமர்ந்து மனத்தில் தியானித்தால் இந்த உலகம் தோன்றும்.

மண் பிண்டம் ஒழியும். இந்த மாற்றம், திரிபு எல்லாம் தொலையும். தாமரை எப்படி நீரில் இருக்கிறதோ அப்படியே நம் அன்னமும் வாழும். நம் உலகத்துக்கு வந்தால், அன்னமே நீ இன்பம் அடையலாம். இன்பக் கடலில்முழுகலாம். தேய்வு அழிவு இல்லாமல் ஆகி விடலாம். கபீர் சொல்கிறார். "ஏ தரும தாஸனே! அன்னத்துக்கு வாழ்த்துக்கள். வெண் சிங்காசனத்தில் இடம் தருவேன். யுகம் யுகமாக அரசாள வைப்பேன்."

# சற்குரு மகிமையும் இலக்கணமும்

## 64

சற்குருவின் சந்தைக்குச் செல்லுங்கள்: ஞானமும் அறிவும் கொண்டு வாருங்கள். தலைவருடன் அன்பு செய்து பரமபதம்

அடையுங்கள். சற்குரு எல்லாம் தந்து விட்டார். தருவதற்கு இனி ஒன்றும் இல்லை. நாம்தான் பேறு கிட்டாத பெண். (சுகத்தை விட்டுத் துக்கத்தை எடுத்துக் கொண்டோம்.)

இனியன் அரண்மனை சென்றேன். இதயம் ஏற்றுக்கொள்ள வில்லை. இதயத்தில் வஞ்சம் பரவியிருந்தது. பெருமையும் நாணமும் நிரம்பியிருந்தன. வழி வழுக்கல் நிறைந்தது. அடிக்கடி விழுவேன். மீண்டும் மீண்டும் பிடித்துக்கொண்டு எழுந்து அடி வைப்பேன்.

அன்பனுடன் சேருவதற்கு ஆசையிருக்கிறது பிறகு ஏன் வெட்கம் உனக்கு? இன்று நல்ல நாள். ஏன் சென்று உடனே அடையக் கூடாது? அன்பின் உடல் அருமையாகக் கிடைத்திருக் கிறது. நாதா! மனம் உடல் எல்லாவற்றையும் அடைக்கலம் செய்விக்கிறேன், சிரித்துப் பேசுங்கள்.

குரு கோபித்துக் கொண்டிருந்தால் உடனே சமாதானப் படுத்தவேண்டும். எளியவராகவும் அடிமையாகவும் ஆகிக் குற்றம் குறையை மன்னிக்கச் செய்யுங்கள். குரு கருணை உடைய வராதலால் தயவுடன் மனத்தைப் பார்ப்பார். ஒரு கணம் கழி வதற்குள் கோடி கருமங்கள் அழிந்துவிடும். கபீர் அறிவுறுத்திச் சொல்கிறார்: "நன்றாய் அறிந்து இதயத்தில் வைத்துக் கொள். யுகம் யுகமாய் அரசாளலாம். இந்தக் கெட்ட புத்தியை மட்டும் விட்டுவிடு."

## 65

சகோதரா, சாது சற்குரு என்று, கண்களால் 'அலக்' என்றே பார்க்க முடியாத ஒருவரைக் காட்டித் தரும் ஒருவரைத் தான் சொல்லலாம். அசைந்தும் நழுவாமல், பேசியும் மறக்காமல் உபதேசத்தை எப்பொழுது நிலை பெற்றதாக ஆக்குகிறாரோ அப்பொழுது சொல்லலாம். பிராணன், பூசை, கிரியைகள் இவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட 'சகஜ சமாதி'யைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். வாயிலை அடைக்கக் கூடாது. காற்றை நிறுத்தக் கூடாது. அநாஹதத்தில் சிக்கல் ஏற்படச் செய்யக் கூடாது. இந்த மனது எதுவரை செல்லுமோ அவ்வளவு தொலைவுக்குப் பரமாத்மாவைக் காட்டித் தரவேண்டும். செயல் புரிந்தும் செயலழிந்தவனாக இருக்கும் சூழ்ச்சி சொல்லித் தரவேண்டும். எப்பொழுதும் இன்பம், துயரமே கூடாது. போகத் திலும் யோகம் எழுப்பவேண்டும் (இன்பம் நுகரும் போதே

கடவுளுடன் ஒட்டியிருக்கத் தெரிய வேண்டும்.) பூமியையும் விட்டு ஆகாயத்தையும் விட்டு நட்ட நடுவே மண்டபம் அமைத்துத் தரவேண்டும். 'சூனிய உச்சி'யின் சாரமான சிலையின் மேல் அசையாமல் இருக்கை விரிக்க வேண்டும். உள்ளே உள்ளதை வெளியே பார்க்க வேண்டும். மற்றதொன்றும் கண்ணில் படக் கூடாது. கபீர் சொல்கிறார்: "அன்னம் (ஜீவன்) போக்குவரத்து ஒழிந்து வாழ வேண்டும்."

## 66

சாதுவே, அந்தச் சற்குருதான் எனக்குப் பிடித்தவர், எவர் உண்மைப் பெய(ரின் ரசத்தை)ரைக் கோப்பை கோப்பையாக நிரப்பித் தானும் குடித்து என்னையும் குடிக்க வைப்பாரோ, அவர் கூட்டம் போடமாட்டார். 'மஹந்த்' (மடாதிபதி) என்று அழைக்கப்படமாட்டார். பூசை நிவேதனம் என்றெல்லாம் கேட்க மாட்டார். கண்களின் திரையை அகற்றி 'ஆத்ம தரிசனத்தைக்' காட்டித் தருவார். 'அநாஹத' சத்தத்தைக் கேட்கச் செய்வார். மாயை தரும் இன்பத்தைத் துன்பம் என்று தெளிய வைப்பார். கூடவே கனவுகளையும் நடக்க விடமாட்டார். பகலும் இரவும் சாதுக்களின் சேர்க்கையில் மணம் பெற்று இருக்க வைப்பார். 'சத்தத்தில்' கூடும் இன்பத்தை அடையச் செய்வார். கபீர் சொல்கிறார்: "அவருக்குப் பயம் இருக்காது. பயமற்ற பதவியையும் காட்டித் தருவார்."

## 67

பத்துத் திக்கின் ஏமாற்றத்தையும் தவிர்த்த அந்தப் பெரியவன்* நல்ல இடத்தில் அமர்ந்திருப்பான். பத்துத் திக்கின் கணக்கை அறிந்த அந்த உத்தமன் பற்றற்ற தன்மையில் உறுதி கொண்டிருப்பான். இந்தப் பொறிகளின் உண்மை கண்டவன் அந்த ஞானி. பற்றற்று இருப்பதன் புகழ் பாடுவான்.

இந்த விவகாரம் தெரியாதவன் சரியான யுக்தியை எவ்விதம் செய்ய முடியும்? (தெரியாத ஒருவன்) உயிர்க் கொலை செய்து பெருமை கொள்வான். வழி மாறினால் ஞானம் கெடும். 'பதம்', 'சாக்கி' கிரந்தங்களில் உறுதி கொண்டவன்

---

* கண்ட்ஹாரன் என்ற சொல்லைக் கபீர் இங்கு ஆண்டிருக்கிறார். அதற்குக் கருத்தில் ஏகைபுள்ளவன் என்று பொருள். சித்தி பெற்ற பெரியவர் என்ற கருத்தில் இந்தச் சொல் ஆளப்பட்டிருக்கிறது

சோதனைக்கு இடமின்றிச் சிறந்த வீட்டை அடைவான். "சப்தம், சாக்கி" முதலியவை கற்றும் சந்தேகம் பேசினால் பூதமாகி நரகத்தில் விழுவான். மறை பொருளை அறியாமல் கண்ட ஹாரன் (ஞானி) என்று சொல்லப்பட்டால் அடுத்த பிறவியில் நாயின் வாழ்க்கையை அடைவான். பதம் சாக்கி (பெரியவர் களின், குறிப்பாகக் கபீரின் உபதேசங்கள்) சாத்திர நூல்கள் முதலியவற்றை நன்கு தெளியாதவன் நரியைப்போல் ஊளையிட்டு அழிவான். நம்முடைய 'பதம், சாக்கிகள்' எல்லாம் மறை பொருளை விளக்கிச் சொல்கின்றன. அறிந்தவன் கரையேறலாம். முழுமையுள்ள குரு எது வரை கிடைக்க வில்லையோ அதுவரை இந்தப் பிறவிக் கடலுக்குத் திரும்பி வர வேண்டியதுதான்.

யார் (உண்மைப் பொருளைக்) காட்டித் தருவானோ, சப்தத்தைத் திருத்தி வெளிப்படக் காட்டுவானோ அவனே முழுமையடைந்த குரு. ஒருமுறை உள்ளத்தில் பழக்கம் கிடைத்தவன் (பேசி அறிந்தவன்) பிறவிக் கடலைத் தாண்டுவான். மீண்டும் வரமாட்டான். சப்தத்தின் உண்மைக் கருத்தை அறிந் தவனே முழு ஞானி. கபீர் சொல்கிறார்:* "சோஹம் சப்தத்துக்கு அப்பால் தூமாக்ஷன் (சிவன்) இருக்கிறார்."

## 68

உண்மையான குருவுக்கு நான் பணிகிறேன். அவர் தந்த திறவுகோலைப் பயன் கொண்டால் (காட்டிய வழியால்) கெடுதல் வெளியேறும். (கால்) நகம் முதல் தலைவரை தலைவன் நிறைந்து இருக்கிறான். அவனை ஏன் தொலைவில் உள்ளவன் என்று சொல்கிறாய்? சற்குருவின் தயவினால் அமுதரசத்தில் நனைந்து இன்பம் பெறுகிறோம். உடல், மனம், பணம் எல்லா வற்றையும் தந்து விடு.

கபீர் சொல்கிறார்: "சந்தர்கள் இன்பம் தருகிறவர்கள். அவர்கள் தயவினால் இன்பக் கடலை, அழியாத வீட்டை அடைந்தோம்.

---

* 'சோஹம்'— 'நானே அது' என்று பொருள்படும். கபீர்தாசரின் சாத்திரத்தில் 'சோஹம்' ஒரு நிலை: அதை அவர் போய்ச் சேரும் எல்லையிடமாகக் கருதுவதில்லை.

## 'சந்தர்'கள் இலக்கணம்

## 69

பாகவதர்கள் அன்னத்தின் (ஜீவன் முக்தர்) நிலையடைந்து சுற்றுகிறார்கள். குற்றமற்றப் பெயரைப் பொறுக்கிப் எடுத்துப் பாடுவார்கள். நன் முத்துக்களை வைத்துக்கொண்டு (மற்ற அன்னங்களின்) அலகுகளுக்கும் இன்பம் தருவார்கள். ஒன்று மௌனமாக இருப்பார்கள் அல்லது ஹரியின் புகழ்பாடுவார்கள். அவர்கள் மானசரோவரத்தின் கரையில் (தூய மன அமைதி நிலையில்) வசிப்பவர்கள். இராமன் திருவடியில் முடிவான எண்ணம் கொண்டு மற்ற எதிலும் படாத உள்ளமுடையவர்கள். காக்கையின் கெட்ட புத்தி அவர்கள் அருகேகூட வராது. ஒவ்வொரு நாளும் அன்னங்களைத் (பாகவதர்களை) தரிசிப்பார்கள். அவர்கள் நீரிலிருந்து பாலைப் பிரிக்கத் தெரிந்தவர்கள். (மெய், பொய் இவற்றைப் பிரித்து அறியத் தெரிந்தவர்கள்) கபீர் சொல்கிறார்: "அப்படிப்பட்டவர்களே என்னுடையவர்கள்."

## 70

எவர் வாயில் சீலம், திருப்தி இவற்றின் சொற்கள் குடியிருக்கின்றனவோ அந்தச் சாதுக்கள் உண்மை, பொய் (நல்லது, கெட்டது) இரண்டையும் பகுத்தறியத் தக்க இரத்தின வணிகர்கள். ஆநந்தம் உள்ளே இருப்பதால் அவர்கள் முகம் எப்பொழுதும் மலர்ந்தே இருக்கும். உதடுகளில் இனிமையும் சிரிப்பும் கொண்ட சொல் இருக்கும். உண்மையிலிருந்து விலகமாட்டார்கள்; பொய் சொல்லமாட்டார்கள். 'சுரதி' (ஆன்ம இன்பம்) யிலேயே விருப்பம் கொண்டவர்கள். அவர்களே சிறந்த ஞானியாம்.

எல்லோரையும் கூப்பிட்டு ஞானத்தைச் சொல்கிறேன்; மனத்தில் உள்ள துயரம் அறிந்து உபதேசம் செய்கிறேன். ஞானத்தின் முழுமை கொண்டவர்; அன்பில் சூரர்; தயவு, பக்தி இவற்றை மனத்தில் உறுதியாகக் கொண்டவர்; தொடக்கம் முதல் முடிவு வரை ஒரேவிதமாக இருப்பவர். இவ்விதமான மனிதர்கள் மிகவும் அருமையாகவே கிடைக்கக்கூடியவர்கள். வஞ்சகர்கள், கயவர்களே உலகில் நிறைந்துள்ளனர். அன்னத்தின் போக்கைக் காகங்கள் எவ்வாறு உணர முடியும்? மிகவும் 'நய'மானவர்கள் பேச்சில்; சரிதான்—ஆனால் உள்ளத்தில் கரவு உள்ளவர்கள். அவரிடம் தயவு இருக்காது. கொக்குப் போல் தியானத்தில் அமர்ந்து பிறரைச் சாடுபவர்கள்! அவர்களுக்கு நான் என்ன சொல்வேன்?

கெட்ட புத்தி கொண்ட உயிருக்குச் சந்தேக வாழ்வு தீராது. பல பிறவிகள் நரகச் சுரங்கத்தில் அழுந்தியிருக்க வேண்டியதுதான். காகம் தீய புத்தி கொண்டது. அது நற்புத்தி அடையப் போவது எங்கே? கடினமானதும், கல் போன்றதும் அச்சுறுத்தக் கூடியதுமான குரல் கொண்டது. நெருப்புக் குவிய லான உடலில் குளுமையே கிடையாது. அமுதம் நஞ்சு இரண்டை யும் ஒன்றாகக் கருதிச் சுவைக்கக் கூடியது. நற்புத்தி இல்லாது உண்மைப் போக்குத் தெரியாமல் புழுதியில் அலைகிற ஒருவருக்கு என்ன உபதேசம் சொல்வது? நற்செயல், உண்மையின்போக்கு, நேர்மையானது இவற்றையெல்லாம் காகமும் கொக்கும் எவ்வாறு அறியும்?

கபீர் சொல்கிறார்: "எப்பொழுதும் பாலையும் நீரையும் பிரிக்கக்கூடிய தியான சக்தி உள்ள மகனே உண்மையான இரத்தின வியாபாரியாகிறான்."

## 71

சாது உலகில் இருக்கும் தன்மை தாமரை நீரில் இருப்பது போல் இருக்கும்: எப்பொழுதும் சேர்ந்தே இருக்கும். ஆனால் நீரைத் தொடாது. நீரில் வாழும் பறவைபோல் நீரிலேயே வசிக்கும். இதழை (இறகை) நீர் தொளைக்காது; எந்தவிதமான வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை. நீரின்மேல் மீன் நீந்து கிறது. ஆனால் நீருக்குப் பாரம் தோன்றுவதில்லை. தடங்கள், மறைவு ஒன்றையும் சட்டை செய்வதில்லை. நீரின் ஓட்டத்தில் நீந்துகிறது. (சாதுவின் மனம் உலக நீரில் நீந்தினாலும் அதை அந்த நீர் தடங்கல் செய்ய இயலாது). சமுத்திரத்தில் இருக்கும் சிப்பி ஆகாயத்தில் கவனம் வைத்திருப்பதுபோல், அந்தத் தலைவனின் அடிமை (சந்தர்), 'கும்ப' (பிராணாயாம)க் கலை யில் விளையாடுகிறார். யுக்தியாகிற மூலிகையை அடைந்து தலை யில் சுற்றிக்கொள். நஞ்சு (உன்னை) அவனைத் தொலைக்க இயலாது. குருவின் நடுநிலையை அடையலாம்.

பால்சோறு, நெய்யுணவு பலவிதப் பொங்கல்கள், இனிப்புப் பண்டங்கள் அவற்றுள் ஒன்றின் நிறத்தையும் நாக்குச் சற்றுக்கூட ஏற்காது. புற்றில் பாம்பு வசிக்கிறது. யாரும் பிடித்துவிட முடியாது. ஆனால் குரு மந்திரத்தினால் தானாகவே வந்து விடும் என்று கபீர் சொல்கிறார்.

(பாம்பு = குண்டலினி சக்தி.)

## 72

பார்க்கப் பித்துக்கொண்ட பைத்தியம்; தன்னிச்சையாகத் திரியும் பக்கிரி, 'கற்பில்' உறுதி கொண்டவள்; அவள் தனித்தவளாக ஆகிவிட்டாள். இதயத்தில் ஒவ்வொரு கணமும் அன்புக்கு உரியவன் இருக்கிறான். சோதனைக்காரன் ஆவலும் வெறியும் கொண்டிருந்தால்தான் குருவின் சொல்லமுதைக் குடிப்பான். அன்பின் அமுதக் கோப்பையைக் குடித்தவுடன் எல்லாத் தோழர்களும் நகர்ந்தனர். எட்டு யாமமும் மதம் பிடித்த யானைபோல் ஆட்டம் போட்டுக்கொண் டிருப்பான் (குடித்தவன்). மோகத்தின் மூச்சை அறுத்து, ஐயம் இன்றி அமர்ந்தான். அவன் கண்ணில் அரசன் ஆண்டி (என்ற மாறுபாடு) ஒன்றும் படுவதில்லை.

கீழே பூமியே இருக்கை; மேலே ஆகாயமே கூரை. மண்ணின் உடையணிந்து பரிசுத்தமாக வாழ்வான். அடியவனுக்குக் குரு கிடைத்துவிட்டால் பிறகு அழிவே கிடையாது.

கபீர் சொல்கிறார்: "தன் வீடு சென்றுவிடு. அங்கே எமன் வரமாட்டான்."

## 73

எந்தக் குலத்தில் பக்தர்கள் உண்டோ அந்தக் குலம் மிகவும் பாக்கியம் செய்தது. நல்ல குலம், கீழ்க்குலம், ஏழை பணக்காரன் என்ற பேச்செல்லாம் அங்கே கிடையா. அங்கேதான் உண்மையான தூய வாழ்வாம்.

பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் யாரும் பக்தன் போல் ஆகமுடியாது. அவன் (பக்தன்) இருக்கும் இடம் ஊர் எல்லாம் நற்பேறு பெற்றது. அவன் கூட இருப்பதே புண்ணியமாம்.

சத்திய நாமத்தைச் செபித்துப் புண்ணியமடைகிறான். அவன் தன்னையும் குலத்தையும் கரையேற்றுகிறான். கபீர் சொல்கிறார்: "எப்படித் தாமரை நீருக்குள் இருக்கிறதோ அப்படியே அவன் இந்த உலகத்தில் வாழ்கிறான்."

## வேதாந்த வாதம்

### 74, 75

சாதுவே, சற்குரு. காணப்படாததைக் காட்டினார். தன்னுள் தன்னையே காட்டித் தந்தார். விதைக்கு நடுவில் மரம் போல், மரத்துக்கு நடுவில் நிழல்போல் பரமாத்மாவில் ஆத்மாவும், ஆத்மாவின் நடுவில் மாயையும் இருக்கின்றன. ஆகாயத்தில் ஞாயிறைப் பார்க்கிறோமே, சூனியம் அண்டத்தின் உருவத்தில் இருக்கிறதே, அப்படியேதான் அட்சரமில்லாததில் அட்சரம்! அட்சரத்திலிருந்து அழியக்கூடிய உலகத்தின் பரவல் ஏற்படுகிறது.

சூரியன் நடுவே கிரணம், கிரணத்தின் நடுவே ஒளி - எப்படிப் பார்க்கிறோமோ அப்படியேதான் பரமாத்மாவில் சிவனும் பிரம்மமும் காணப்படுகின்றன. அப்படியே சிவன் மத்தியில் சுவாசம்; சுவாசத்தின் மத்தியில் சப்தம்: சப்தத்தில் அர்த்தம். பிரும்மத்திலிருந்து ஜீவன், ஜீவனிலிருந்து மனம் என்றெல்லாம் தனித்தனியாக இருக்கின்றன. ஆனாலும் தானே விதை, மரம், முளை; தானே பூ, பழம் நிழலுமாம். தானே சூரியன், கிரணம், ஒளி; தானே ஜீவன், பிரும்மம், மாயையுமாம். ஆகாயத்தில் வட்டவடிவமான சூனியமும்தானே! மூச்சு, சப்தம், அர்த்தம் எல்லாமும் தானேதான். நிரட்சரம், அட்சரம், அழியக்கூடியது எல்லாம் தானே. மனம், உயிர், பிரும்மம் எல்லாம் அடங்கியதும் தனக்குள்தான்.

ஆத்மாவில் பரமாத்மாவைத் தரிசனம் செய். பரமாத்மாவில் ஒளியைப் பார்க்கலாம். ஒளியில் நிழலைப் பார்க்கிறார் (மற்றவர்). கபீர்தாஸர் சுவாமியைப் பார்க்கிறார். தண்ணீருக்கு நடுவில் மீன் வேட்கை தீராமல் இருக்கிறதாம். கேட்டுக் கேட்டு எனக்குச் சிரிப்புச் சிரிப்பாய் வருகிறது! ஆத்ம ஞானம் இல்லாமல் எல்லாம் வீண். காசியானால் என்ன? மதுரையானால் என்ன? வீட்டில் இருக்கும் பொருள் தெரியவில்லை. சென்று வெளியே தேடுகிறார்கள். கபீர் சொல்கிறார்: "ஏ, சாது சகோதரா கேள். அழிவில்லாத கடவுள் சுலபமாகவே கிட்டிவிடுவான்."

### 76

இந்தப் பாண்டத்துள் (உடலுள்) சந்திரன் ஒளிர்வான். குருட்டுக் கண்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. இந்தக் குடத்துக்குள் சந்திரன் இருக்கிறான். இந்தக் குடத்துக்குள்

ஞாயிறும் இருக்கிறான். இதே குடத்துக்குள் அநாஹத முழவும் ஒலிக்கும். இதே குடத்துக்குள் 'தபேளா' பறை எல்லாம் முழங்கும். செவிடன் காதுக்குக் கேட்காது. எதுவரை 'என்னுடையது, என்னுடையது' என்று சொல்வானோ ('எனது' என்ற மயக்கத்தில் ஈடுபட்டிருப்பானோ, ஒருவன்) அது வரை ஒரு வேலையும் உருப்படப் போவதில்லை. 'என்னது' என்ற 'மமதை' இறப்பது எப்பொழுதோ அப்பொழுதே ஆண்டவன் வேலையைச் செய்து தந்து விடுவான்.

சிங்கம் எதுவரை காட்டில் இருக்குமோ அதுவரை அந்தக் காடு பூக்கப் போவதில்லை. இதற்கு மாறாகக் குள்ளநரி சிங்கத்தைத் தின்றுவிட்டால் கருவி, கட்டையான காடும் பூக்கும். ஞானம் வேண்டிக் கருமத்தைச் சேர்க்கிறோம். (ஆத்ம) ஞானம் ஏற்பட்டால் கருமம் அழிந்துவிடும். பழங்களுக்காகவே மரங்களில் பூக்கள் பூக்கின்றன. பழம் ஏற்பட்டவுடன் பூ வாடிவிடுகிறது; மானிடத்திலே கஸ்தூரி வாசனை இருக்கிறது. தனக்குள் தேடாமல் புற்களில் (அது கஸ்தூரியைத்)தேடுகிறது. பாதரசத்தை மீன் எடுத்துச் சென்று சாப்பிடுகிறது.

கபீர் சொல்கிறார்: "உலகத்துக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. (குள்ளநரி = ஆத்ம ஞானம்; சிங்கம் = நான், எனது என்கிற தப்புப் பற்று; பாதரஸம் = ஜீவாத்மா. மீன் = அழுங்குத் தின்னும் மனம் அல்லது மாயை)."

## 77

அவதூத சுவாமி! இருட்டுக் கிணற்றில் இருட்டு இந்தப் பாண்டத்துக்குள் ஏழு கடல்கள்; இதில் நதிகள் காய்வால்கள் இருக்கின்றன. இதே குடத்துக்குள் காசி, துவாரகை; இதற்குள் ளேயே கோயில். இதற்குள் சந்திரன் சூரியன்; இதற்குள் ஒன்பது லட்சம் நட்சத்திரங்கள் எல்லாம் இருக்கின்றன. கபீர் சொல்கிறார்: "கேளுங்கள் சாதுக்களே. இதற்குள்ளேயே உண்மையான சிருஷ்டி கர்த்தாவையும் காணலாம்."

## 78

சாதுவே! உலகில் ஒன்றுதான்'தான்' (பரமாத்மாதான்) மற்றவை எல்லாம் கருத்தின் பிரமை; கண்ணாடிக்குள் காணப் படும் பிரதிபிம்பம் போல் தோற்றமே. நீரிலலை போல் நீரில் எழுந்து மீண்டும் நீரில் அமுங்கும். உடல் ஐந்து தத்துவங்களின்

சேர்க்கைத் தோற்றம். அழிந்தால் எங்கு அடையும்? எல்லா உடலின் போக்கும் இப்படித்தான். இந்த விதியை மனத்தில் எண்ணிப் பார். நல்ல முறையில் உண்மை, பொய்யைப் பகுத்தறியும் அறிவைப் பெற்று பரம தத்துவத்தைத் தனிப்படுத்தி அறி. 'சகஜ' நிலையில் இயற்கையாக அமர். எங்கும் போக வேண்டாம், எங்கும் வரவேண்டாம். தியானம் வேண்டாம், செபதபம் வேண்டாம். 'ராமன் ரஹீம்' ஒருவரையும் பாடவேண்டாம். தீர்த்தம் விரதம் எல்லாவற்றையும் ஒழி. வெற்று இடத்தில் கயிறு ஏன்? இந்த ஏமாற்றம் எல்லாம் தெரிந்த பிறகு பூசை யாருக்கு எதற்காகச் செய்வாய்? தன்னைத்தான் அறியாதவரை யோகம் யுக்தியில் எல்லாம் பிரமை ஒழியப் போவதில்லை.

கபீர் சொல்கிறார்: "எவர் அறிந்து அறிவிக்கிறாரோ அவர்தான் பூரணமான சற்குரு."

## 79

சாதுவே, வழியுடன் உடலைச் சீர்திருத்திக் கொள். தானே கர்த்தா. தன்னுள்ளே கர்த்தா. இதை அறிந்து மனத்தைத் தன் வயப்படுத்து. ஆலின் விதையில் இலை பூ பழம் எல்லாம் எப்படிப் பரவியிருக்கின்றனவோ அப்படியேதான் (தன்னுள் எல்லாம்). தன்னுள்ளே நடுவில் துளி இருக்கிறது. துளியின் நடுவில் உடல் இருக்கிறது. அது இல்லாமல் நெருப்பு காற்று நீர் பூமி வெளி ஒன்றும் சேராது. 'காஜி', பண்டிதர் எல்லோரையும் விட்டுத் தள்ளு; அவர்கள் சொல்வதில் சுவாமியைக் காணமுடியாது. அடைய முடியாத அந்தப் பொருளின் நம்பிக்கை உண்மையாகப் பெயரில் தான் இருக்கிறது. அதில்தான் உண்மையும் இருக்கிறது. முக்குணம், ஐந்து தத்துவம் கொண்ட இந்த வயலில் (உடலில்) கர்த்தாவும் விதை ரூபமாய் இருக்கிறார். குடத்தில் நீரை நிரப்பி நீருக்குள் முக்கினால் அதற்குள்ளும் நீர், வெளியேயும் நீர். அவருடைய தனிப்பெயர், சொல்வதற்குத்தான்; பேச்சு புரியத்தான்; உள்ளபடி வேறு இல்லை. வேறு என்பது ஏமாற்றமே.

சற்குருவை அடையும் வழி கடினமானது. தேடித் தேடி அடையவேண்டும். (துவிதம் எதிர் மறையான இரட்டைக் கருத்துக்கள் தரும் மருட்சி) தொலைந்தவுடன் அந்த ஒன்று கிடைத்துவிடும். தேடுதல் நின்றுவிடும் அதற்கு எங்கும் போக வேண்டியதும் இல்லை.

கபீர் சொல்கிறார்: "சகோதரரே, சாதுவே கேளும், சத்தியச் சத்தம்தான் உண்மையின் சாரமாகும். தனக்குள்ளே தானே பேசுகிறது. (ஆத்மாவுக்குள்ளேயே பரமாத்மா!) தான் தான் சிருஷ்டிகர்த்தா.

## 80

கடலின் அலை கடலல்லவோ? கடலும் அலையும் வேறு என்பது எப்படி? எழுவதும் நீர்தான்; அமர்வதும் நீர்தான். பிறகு எப்படி வேறு ஆகும்? சொல். அதே பெயரை மாற்றி அலை என்று அழைத்தாய். அதனால் நீர் மறைந்துவிட்டதா? உலகம் என்பது மாற்று. எல்லா உலகத்தையும் பிரும்மத்தில் என்று அறிந்து பார். கபீர் சொல்கிறார்: "உலகம் மறைந்து விடும்."

## 81

மனதே, நீ ஒப்புக்கொள்ள ஏன் மறுக்கிறாய்? சொல்ல யார், கேட்க யார்? இரண்டாவது ஆள் ஏது? கண்ணாடியில் பிரதிபிம்பம் தெரிகிறதே, அதுவேதான் நான்கு புறங்களிலும் ஒளிர்கிறது. (இரண்டும் வேறு) இது, அது என்ற ஐயம் (துவிதம்) தொலைந்தால் ஒன்றாவாய். அப்பொழுது பார்க்கட்டும் யாரும். நீர் பனிக்கட்டியாகிறது போல் பனிக்கட்டியும் பிறகு நீராகும். அப்படியே இந்தத் தத்துவமும் அந்தத் தத்துவமும் ஒன்றானால் இதுவும் அதுவும் அதேதான். அறிகிறவனுக்கு இது சரி. அறியாதவன் இது செல்லாப் பேச்சு என்பான். கபீர் சொல்கிறார்: "இரண்டு பக்கத்தையும் விட்டுவிடுகிறானே அவன் அறிவு சிறந்ததாகும்."

## 82

நான் தருமவானுமல்ல, அதருமவானுமல்ல. யதியும் அல்ல, வேட்கை கொண்டலையும் மனிதனுமல்ல. நான் சொல்லுவதும் இல்லை, கேட்பதும் இல்லை. நான் அடிமையுமல்ல, ஆள்பவனும் அல்ல. நான் கட்டுப்படுவனுமல்ல, விடுபட்டவனுமல்ல. அல்லது முழுவதும் கட்டே அற்றவனுமல்ல. நான் ஒருவருக்கும் மாறுபட்டவனும் அல்ல, ஒருவருடன் சேர்ந்தவனும் அல்ல. நான் நரகலோகத்துக்கும் போகேன்; சுவர்க்கத்துக்கு எழுந்தருளப் போவதும் இல்லை. நாம் தான் எல்லா வேலையையும் செய்தோம் என்றாலும் நாம் அந்தக் கர்மங்களிலிருந்து ஒட்டாமல் விலகியவரே! இந்த உண்மையை மிகவும் அருமையாக

ஒருவர் தான் அறியமுடியும். அவர் சற்குருவாகி அமர்வார். கபீர் யாருடைய மதத்தையும் நிலை நாட்டவும் இல்லை; யாருடைய மதத்தையும் அழிக்கவும் இல்லை.

## 83

ஞானம் பெறு. அறிவுபெறு; அறிவு பெறு. அறிவு பெறாமல் இந்தக் கவலை தீராது. அறிவு பெறாமல் உன்னுடைய இந்தக் கவலை தீராது. அதைத் தெரிந்துகொள். எல்லா ஒளியும், எல்லாத் தோற்றமும் உள் உள்ளேதான் இருக்கின்றன. (விரும்பியதை அடைந்த) இன்பம், (அதை அடையாத) விருத்தம் எல்லாம் உன்னுள் எழும் அலைகள் தாம். (நீ செய்து கொண்டது தான்.) இனியன் இன்ப வெறியுடன் பேசுகிறான். அவனை விட நியாயமானவன் யார் உண்டு; சொல்.

ஒரே ஒளி வெள்ளம் தான். அதைப் பார். அதுதான் சிருஷ்டி முழுவதும் பரவியிருக்கிறது. நீயே (ஆத்மாவே, தானே) பணக்காரன், நீயேதான் ஏழையும். உன்னைச் சூழுகின்ற எதிரியும் நீயே (அஃதே). திருடனும் நீயே; பணமும் உன்னதே. அறிவை எடுத்து உரைப்பவனும் நீயே. அதைக் கேட்பவனும் நீயே. ஹரியும் நீ, ஹிரண்யாட்சனாயிருந்த அசுரனும் நீயே. நரசிம்மனும் நீயே. அவன் அடித்து வீழ்ந்தவனும் நீயே. நீதான் ராவணன், நீதான் ரகுநாதன். உன்னைத்தான் நீ அடித்து வீழ்த்திக்கொண்டாய். பலியாக மாறி உலகத்தைத் தானம் செய்தவனும் நீயே. அதை வாமனனாக இருந்து ஏற்றுக்கொண்டவனும் நீயே. கிருஷ்ணனும் நீ. கம்சனும் நீ. உன்னை நீயே கொன்று கொண்டாய். நீதான் பக்தன். நீயேதான் பகவான். இதுவே உண்மை, வேறு ஒரு பேச்சையும் கேட்காதே.

## 84

பந்தத்திலிருந்து அறுபட்டு விடுதலை அடைந்துவிட்டால் அப்பொழுது யார் சாவார்? அவரை யார் அழிக்க முடியும்? தான் என்கிற முனைப்பைவிட்டுஅச்சம் இன்றி வாழ்ந்தால் பிறகு கரையேறுவது என்ன? அவரை யார் கரையேற்ற வேண்டும்? சாவது, வாழ்வது என்பனவெல்லாம் தன்னை மறந்தவனுக்கு அல்லவா? அறிவு விழிப்பு அடை. விழித்து எழுந்து பார். அதற்காகத் தயை புரிந்து கபீர் சோதி ஏற்றியிருக்கிறார்,

## 85

இது ஒரு குமிழி; எப்போதும் கடல் நீரின் நடுவே வசிப்பது. குமிழியும் கடலேதான். அதோ பார். அலையும் அதை விட்டு வேறுபட்டதில்லை. எழுந்தால் குமிழி. (சீவன்) அமிழ்ந்தால் (உடைந்தால்) கடவுள் தான். (இந்தச் சரீரம் அழிந்தால் பிறகு ஆத்மா பரமாத்மாதான்) குமிழியும் கடலும் ஒன்றே. பெயருக்குத் தான் குமிழி என்பது தனிப் பெயர்.

## 86

ஒவ்வொரு குடத்துக்குள்ளும் (உடலுக்குள்ளும்) ஒளி நிறைந்திருக்கிறது. எண்ணற்றபடி உடல்கள் தோற்றம் எடுத்திருக்கின்றன. ஓர் இடத்தில் முதலாளி; அங்கே பிராமணன், இங்கே மற்றவர், இந்த விதம் தோற்றங்கள் எடுத்திருக்கின்றன. ஆனால் எல்லாவற்றிலிருந்தும் தனியானவன். அன்பன்; பல தோற்றங்கள் எடுப்பவன், அவன் இந்தத் தோற்றங்களுக்குள் எல்லாம் இருக்கும் ஒருவனே! கபீர் தனிப்பட்ட சீடர். அவனில் நீயோ நானோ, இல்லை. அவர் தனி ஒருவராம்.

(கபீர் இந்த உண்மை அறிந்தவர். அவருக்கு மயக்கம் கிடையாது என்று கருத்து.)

## 87

அன்பே, ஆகாயத்தை நம்புவதை (மேலே பார்ப்பதை) விடு; தன் குடத்துக்குள்ளேயே (உடலுக்குள்ளேயே) திரும்பிப் பார். மனத்தின் கற்பனைகளை விட்டு உனக்குள்ளே நீ உன்னைச் சோதி பார்க்கலாம். பெயரை மட்டும் செபிப்பது இரவில் காணும் கனவாக முடியும். கபீர் கேட்கிறார்: உண்மையைக் கண்டுவிட்டால் பிறகு உருப்போடுவது யாரை?

(தியானத்தின் மூலம் உண்மையைச் சந்தித்தவன், 'தானே அவன்' என்று அறிகிறான். பிறகு யாரை ஜபிப்பான்)

## 88

தன்னைத் தானே மறந்தாய்! நாய் கண்ணாடி வீட்டுக்குள் தன்னைக் கண்டு ஏமாந்து குலைத்துக் குலைத்துச் சாவது போல்; சிங்கம் தன் உடலின் பிரதிபிம்பத்தைக் கிணற்று நீரில் கண்டு குதித்ததுபோல்; அப்படியே மதம் கொண்ட யானை

கண்ணாடிப் பாறையில் தன் சாயலைக் கண்டு தந்தங்களைப் பாய்ச்சியதுபோல்; குரங்கு மூடிய (கைப்) பிடியைப் பிரிக்க மறந்து (தேங்காயைக் கையில் தொங்க விட்டுக்கொண்டு) வீடு வீடாகக் கூத்தாடித் திரிகிறது. கபீர் சொல்கிறார்: "மூங்கிலில் அமர்ந்த கிளியை யார் பிடிக்க வேண்டும்?"

(நாய் சிங்கம் யானை மூன்றும் தன் மயக்கத்தால் அழிகின்றன. குரங்கு தன் ஆசைகளால் அழிகின்றது. கிளி தன் அறிவின்மையால் அழிகின்றது. அதேபோல் மனிதன் நிழல் போன்ற ஆசையைத் தொடர்ந்து தன்னை அழித்துக் கொள்கிறான்.)

## சாம்ய வாதம்

(எல்லாம் சமம் என்ற பேச்சு)

### 89

தானே படைப்பாளன்; அவனே படைத்தான். குயவன் அநேக விதப் பாண்டங்களைச் செய்தான். 'பிரம்மா' எல்லா வற்றையும், ஒரே இடத்தில்தான் செய்தான். பல முயற்சிகள் செய்து உருவங்கள் சமைத்தான். 'சடரா'க்னியில் வைத்துச் சுட்டெடுத்தான். அதிலும் அவனே காப்பாற்றினான். மிகுந்த முயற்சிக்குப் பிறகு வெளியே வந்தன. அப்பொழுது சிவன் சக்தி (ஆண் பெண்) என்று பெயர் பெற்றன.

வீட்டில் பையன் அசட்டுத்தனம் செய்தால் உண்மை அறிந்த மற்றவர்களும் அவனுடன் செல்லுதல் ஆகாது. நான் என்னுடைய உண்மை வார்த்தையைச் சொல்கிறேன். மற்றவர் பித்துக் கொண்டவர் அல்லது கனவு கண்டவர். ஒரே முத்திரைதான் வெளியாகிறது. இதில் யாரைப் பிராமணன் என்பாய்? யாரைச் சூத்திரன் என அழைப்பாய்? பொய்ப் பெருமையில் தன்னை ஒருவரும் மதிக்க வேண்டாம். ஹிந்து, துருக்கர் என்பதெல்லாம் இரண்டு பொய்க்குலங்கள். உண்மையான தோற்றம் தந்து இந்தச் சித்திரத்தை யார் செய்தாரோ, அவரைப் பற்றி யோசித்து அறியுங்கள் என்று கபீர் சொல்கிறார்.

(முதல் பகுதியில் ஜீவாத்மாவையே குயவனாக உருவப் படுத்தப் பட்டிருக்கிறது. ஜீவாத்மாதான் பரமாத்மா என்ற கருத்துப்படி அவன் தன் இச்சையாலேதான் மனதின் உதவி கொண்டு உலகைப் படைத்து 'ஜடராக்னி' (வயிற்றுத் தீ)யில்

சுட்டு எடுத்து உலகில் உலவ விடுகிறான் என்பது வேதாந்தத்தின் ஆழ்ந்த கருத்து.)

## 90

பிறவிலேயே நீ உயர்ந்த வருணத்தவன் என்று கர்த்தா எண்ணியிருந்தால் பிறக்கும்போதே அதற்குத் தக்கபடி "திரி தண்டம்" முதலியவை கிடைத்திருக்க வேண்டுமே! பிறவியில் சூத்திரன் என்றால் பிறகும் சூத்திரன்தான்! செயற்கையாகப் பூணூலை மாட்டிக்கொண்டு உலகை ஏமாற்றுகிறாய்! நீ, பிராமணன், பிராமண நிலையுடன் வந்தாய் என்றால் நீ ஏன் வேறு வழியாய் வரவில்லை, நீ பிறவி யிலேயே, துருக்கன் என்றால் (தான்) வயிற்றிலேயே ஏன் 'சுந்நத்' செய்துகொண்டு பிறக்கவில்லை? கறுப்பு, மஞ்சள் முதலிய பல நிறமுள்ள பசுக்கள்தாம் கறக்கின்றன. அவை தரும் பாலிலுமா வேறுபாடு காண்பாய்? அதிகக் கெட்டிக்காரத்தனத் தையும் வஞ்சனையையும் விட்டுவிடு. கபீர் சொல்கிறார்: "அதை விட்டுச் சாரங்கபாணியைப் போற்றிப் பிழைப்பாயாக."

## 91

இரண்டு தலைவர்கள் எங்கிருந்து வந்தனர்? யார் சொல்லி ஏமாற்றியது? அல்லா, ராமன், கரீம், கேசவன், ஹரி, ஹஜரத் என்றெல்லாம் பெயர்கள் தாங்கினார் (ஒருவரே.) நகைகள் எல்லாம் பவுன் நகைகளே. அவற்றுள் பொருள் மாறுபட்ட தில்லை. சொல்வதற்காகவும் கேட்டுப் புரிந்து கொள்வதற்காக வும் இரண்டு பெயர்கள் வைத்தனர். ஒன்றை 'நமாசு' என்று அழைத்தனர்; மற்றொன்றை வழிபாடு என்றனர். அவரேதான் மகாதேவன், அவரேதான் முகம்மத். அவரையே பிரும்மர் என்றும் அழை; ஆதம் என்றும் அழை. ஒரே பூமியில் வாழு கிறார்கள். ஒருவர் ஹிந்து என்று அழைக்கப்படுகிறார். மற்றவர் துருக்கர் என்று சொல்லப்படுகிறார். அவர் வேதப் புத்தகம் படிக் கிறார்; இவர் 'குத்பா' படிக்கிறார். அவர் மௌலானா; இவர் பண்டிதர். தனித் தனிப் பெயர் ஏற்றவரே தவிர ஒரே மண்ணின் குடங்கள்தாம்.

கபீர் சொல்கிறார்: "(வேற்றுமை பாராட்டும்) இருவரும் தப்பிதம் செய்தனர். ஒருவரும் ராமனை அடைய வில்லை. அவர்கள் (ஹிந்துக்கள்) ஆட்டை வெட்டுகிறார்கள். இவர்கள்

பசுவை வெட்டுகிறார்கள். இருவர் ஜன்மமும் பாழ். இருவரும் வீணில் வாழ்க்கை நலன்களை இழக்கிறார்கள்.

## 92

இந்த மயக்கம் மிகவும் கலக்கம் தரக்கூடியது. வேதம், புத்தகம், மதம், நரகம்! யார் புருஷன், யார் பெண்? (எல்லாம் பிரமை.) மண் வீடு ஆக்கப்பட்டது. அதற்குள் நாதத்தையும் விந்துவையும் அடக்கப்பட்டது. இந்தக் குடம் உடைந்தால் என்ன பெயர் வைப்பாய்? முட்டாளே, தேடி ஏமாற வேண்டியதுதான். ஒரேவிதமான எலும்பு, தோல், மலம், மூத்திரம், ரத்தம் ஒரே விதமான கழிப்பொருள் வாயில்! ஒரேவிதமான முத்திரை, எல்லாம் ஒரேவிதம். ஒரே விந்துவிலிருந்து சிருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. பிறகு பிராமணன் என்ன, சூத்திரன் எப்படி? பிரும்மா ராஜச குணம்; சங்கரன் தமோ குணம்; சத்வ குணம் ஹரி; அவ்வளவுதான்.

கபீர் சொல்கிறார் : ராமனிடத்தில் இன்பம் கண்டு வாழ். ஒருவரும் ஹிந்து இல்லை. ஒருவரும் துருக்கர் இல்லை.

## பக்தியுணர்ச்சிப் பெருக்கு

## 93

நான் போர்த்துக்கொள்வது ராம நாமம். நான் ராமபிரானின் வியாபாரி. இராம நாமத்தை நான் வியாபாரம் செய்கிறேன். ஹரிதான் என்னுடைய சந்தை(ப்பொருள்.) அவர்தம் ஆயிர நாமத்தை ஆவலுடன் பரப்புவேன். நாளுக்கு நாள் அதில் வலிவடைவேன். காதில், தராசு சேர் முக்கால் என்றெல்லாம் வாத்தியம் முழங்கி இழுத்து அழைக்கிறது. சேர் வீசை எதையும் நிறுத்து வாங்கிக்கொள். முன் எங்கும் அலைய வேண்டாம்.

கபீர் சொல்கிறார் : "ஏ சந்தர்களே! குறைவை (ஏற்படும் ஏமாற்றத்தை) நிரப்பிச் செல்கிறேன்."

## 94

உனக்கு இனியன் கிடைத்து விடுவான். முட்டாக்குத் துணியை அகற்று. ஒவ்வொரு உடலிலும் சுவாமி வசிக்கிறார். கடுஞ் சொற்களைப்பேசாதே. பணம், இளமை இவற்றைக் கொண்டு பெருமை

கொள்ளாதே. ஐந்து நிறமுள்ள பொய் உடை அவை. 'யாழ்' அரண்மனையில் விளக்கேற்றிக் கொள். ஆசை கொண்டு அலையாதே. விழித்து இருந்து கெட்டிக்காரத்தனமாய் 'ரங்க மஹலி'ல் விலை மதிப்பற்ற இனியனின் சேர்க்கை கிடைத்தது. கபீர் சொல்கிறார் : "இன்பம் ஏற்பட்டிருக்கிறது. 'அநாஹத' மிருதங்கம் ஒலி எழும்பத் தொடங்கிவிட்டது."

## 95

கழுத்துக்கு நல்ல திருப்பெயர் என்ற மாலை கிடைத்தது. குறுகிய காட்டிலில் நாம் இருக்கிறோம். ஐந்து சிறிய சிறிய அறைகள். பூட்டையும் சாவியையும் குரு தந்துவிட்டார். எப்பொழுது வேண்டுமோ அப்பொழுது கதவைத் திறந்து கொள்வேன். அன்பும் நட்புமே நம்முடைய உடை, எப்பொழுது வேண்டுமோ அப்பொழுது பட்டணத்தில் ஆடுவேன். கபீர் சொல்கிறார் : "சாதுவே கேளுங்கள். மீண்டும் இந்த நகரத்துக்கு வரமாட்டேன் (இந்தப் பிறவி எடுக்க மாட்டேன்.)"

## 96

சென்று அடைதல் கடினம். எப்படிச் சென்று அன்பனை அடைவேன்? நன்றாய்ச் சிந்தித்து அறிந்து முயற்சியுடன் காலை வைக்கிறேன். ஆனால் கால் அடிக்கடி தள்ளாடித் தடுமாறி விடுகிறது. உயரமான சந்து; வழி வழுக்கல் நிறைந்தது. கால் தங்க மறுக்கிறது. உலகத்துக்கு அச்சம், குலப்பெருமை இவற்றை எல்லாம் பார்த்தால் மனம் பின்னடைகிறது.

தாய் வீட்டிலும் தந்தை வீட்டிலும் இருந்து பழக்கம். நாணம் ஒழிய மறுக்கிறது. ஆதாரமில்லாத பூமியில் அன்பன் இருப்பிடம் இருக்கிறது. நம்மால் ஏற முடியவில்லை. இளம் பெண் ஆவல் கொண்டாள். கணவன் ஒன்றுமறியாதவனாக ஆனான். 'சுரதம்' அலைவுண்டது; நடுவில் சற்குருவான தாதி (தூது செல்பவள்) கிடைத்தாள். ரகசியத்தைச் சொல்லிக் கொடுத்தாள்.

கபீர் சொல்கிறார் : "காதலி தலைவனுடன் சேர்ந்தாள். குளுமையுடன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

(சுரதம் = இணைந்து ஒன்றான ஆன்மக் கலவியின்பம்)

## 97

மணப்பெண்ணே, மங்களப் பாடல்கள் பாடு. நம் வீட்டுக்குக் கணவர் இராமர் வந்தார். உடல் புளகம் அடைகிறது மனம் இன்பமடைகிறது. ஐந்து தத்துவங்களும் மண விழாவுக்கு வந்தவர்கள். இராமதேவன் என்னை மணக்க வந்தார். நான் இளமை வெறி கொண்டவள். சரீரமாகிற சரோவரத்தில் (வேதி) மண மேடை ஏற்படுத்துகிறேன். பிரமன் வேதம் சொல்கிறார். இராம தேவருடன் நான் தீயை வலம் வருகிறேன். என் நற்பேறு மிகவும் சிறந்தது. முப்பத்து முக்கோடி தேவர்கள் இன்பக் காட்சி காண வந்தார்கள். எண்பத்தெட்டாயிரம் முனிவர்கள் வந்தனர்.

கபீர் சொல்லுகிறார் : ''என்னை ஒரு 'அவிநாசி' (அழிவில்லாத தேவன்) மணந்து சென்று விட்டான்.''

## 98

அரி என்னுடைய காதலன். நான் இராமனுடைய மணப் பெண். இராமன் எனக்கு மிகவும் பெரியவர். நான் உடலில் சிறியவள் (தகுதிக் குறைவுடையவள்.) அரி என்னுடைய* சர்க்கா. நான் மணமக்களின் மஞ்சள் உடை. ஹரியின் பெயரைச் சொல்லி மணப்பெண் நிரம்ப நூற்றாள். ஆறு மாதம் நூல் (அறுவித ஞானம்). ஒரு வருஷக் கண்டு, ஜனங்கள் 'நன்றாய் நூற்றாள் அப்பாவி!' என்றனர். நூல் நன்றாய் நூற்கலாம். ஆனால் சர்க்கா முக்தி தரக்கூடியதாக ஆகாது. (உடலின் உதவியால்; ஆத்மா, ஞானம் பக்தி இவைகளின் பல வழிகளை வகுக்கலாம், ஆனால் அவற்றால் எல்லாம் முக்தி கிட்டாது.)

## 99

சுவாமியுடன் கூட மாமியார் வீடு வந்தேன். சேர்க்கையும் இல்லை; ருசியும் கிடைக்கவில்லை. இளமை கனவுபோல் கழிந்து விட்டது. நான்கு பேர் சேர்ந்து ஓரை குறித்தனர். ஐந்து பேர் சேர்ந்து மண்டபம் கட்டினர். தோழிகள் சேர்ந்து மங்கள கீதம்

---

* சர்க்கா : நூல் நூற்கும் இராட்டை

1. மணப்பெண் - மணமகன் இருவர் உடை நுனிகளையும் சேர்த்து முடிவது வட நாட்டில் பழக்கம்.

இசைத்தனர். துக்கம் சுகம் நெற்றியில் மஞ்சள் பூசிற்று. மனத்தில் நானாவிதமான எண்ணங்கள் எழுந்தன. நெருப்பைச் சுற்றினோம்[1] துணிகள் முடியப்பட்டன. நன்மணம் கொண்ட பெண் அர்க்கியநீர் தந்து சென்றாள். மேடையில் சுவாமியுடன் விதவை சென்று அமர்ந்தாள் (ஜீவன் பிரும்மத்துடன் சேரத் துடிக்கும் போது வேற்று மங்கையான விதவை—மாயை—சுவாமியைப் பிரித்து அவருடன் சென்றமர்ந்து விடுகிறாள்) மணம் ஆயிற்று. பெண் கணவன் இல்லாமல் சென்றாள். சம்பந்தி கூப்பிட்டு அறிவுறுத்தினாள்.

கபீர் சொல்லுகிறார்: "நான் மணம் முடிப்பேன். கணவனுடன் கோலாகலமாக இசைக் கருவிகளின் ஒலியுடன் சென்று கரையேறுவேன்."

(தியானத்தின் மூலம் ஆத்மா பரமாத்மாவுடன் இணைவதை, பரமாத்மாவைப் பற்றிய மாயையின் எண்ணங்களும் சீவனுடைய போகங்களும் தடுக்கின்றன. மணத்துக்குச் சென்ற சீவன் ஏமாந்து வருகிறது. சம்பந்திகள் போன்ற பிரம்ம ஞானிகள் உண்மையை எடுத்துச் சொல்கின்றனர். கபீர் உண்மை தெரிந்தவர். ஏமாறாமல் கடிமணம் புரிந்து நல்வழி அடைந்தார்.)

## பிரிவாற்றாமைப் பேச்சு

## 100

நாதா, வா என் வீட்டுக்கு. நீ இல்லாமல் உடல் வாடுகிறது. எல்லோரும் நான் உன்னுடைய மனைவி என்கின்றனர். எனக்கு மட்டும் சந்தேகமாயிருக்கிறது. இருவரும் ஒன்றாகி ஒரே படுக்கையில் படுக்காதபோனால் அது என்ன? அன்புடைய சேர்க்கையா அப்பா அது? சோறு வேண்டியிருக்கவில்லை. தூக்கம் வரவில்லை. வீட்டில் என்ன முயன்றும் தைரியம் ஏற்படவில்லை. காமிக்குப் பெண், வேட்கை கொண்டவனுக்கு நீர் எப்படியோ (கிடைக்காவிட்டால் அவர்கள் நிலை எப்படியோ) அப்படி நான் இருக்கிறேன். யாராவது ஒரு பரோபகாரி இருக்கிறாரா, சென்று என்னுடைய நிலையை என் அன்பனுடன் சொல்லக் கூடியவர்? கபீர் மிகவும் நிலை தளர்ந்து இருக்கிறார். அன்பனைப் பார்க்காமல் உயிர் போகிறதடா, அப்பா!

## 101

சற்குருவே! என்மேல் சுவாமி தம் நிறத்தை (அன்பை) ஏற்றி விட்டார். 'சப்த'த்தின் அடி என் உள்ளத்தில் பட்டுவிட்டது. உடல் முழுவதும் ஊடுருவித் தொளைத்துவிட்டது. மருந்து, வேர் ஒன்றும் பயன் தருவதில்லை. பாவம், வைத்தியர்தான் என்ன செய்வார்? தேவர், மனிதர், முனிவர் 'ஔலியா' (முசல்மான் பெரியவர்) ஒருவரும் கரையேற்ற முடியாது. பெரியவர் முழு நிறத்தையும் ஏற்றிவிட்டார். அந்த நிறம் மற்ற எல்லா நிறத்தையும் விடத் தனிப்பட்டதாக இருக்கிறது.

## 102

நாட்கள் எப்படிக் கழியும்? வழி சொல்லிச் செல்லுங்கள். இக் கரையில் கங்கை. அக் கரையில் யமுனை. நடுவில் ஒரு மண்டபம் போட்டுத் தந்து செல்லுங்கள். முன்தானையைக் கிழித்துக் காகிதம் செய்கிறேன்; உங்கள் நினைவை என் இதயத்தில் எழுதிச் செல்லுங்கள். கபீர் சொல்கிறார் : "ஏ சாதுக்களே, கேளுங்கள் : கையைப் பிடித்து வழிகாட்டிச் செல்லுங்கள்."

## 103

உன் பெயரில் அன்புகொண்டு விட்டேன். ஒருகணம் கூட மறக்கமாட்டேன் என்கிறது. இப்பொழுது கொஞ்சம் கடைக் கண் அருள் தா. என்னை வந்து அடை * கோசுவாமி! பிரிவாற்றாமை என்னை வாட்டுகிறது. என் இதயம் துடிக்கிறது. உன்னைப் பார்ப்பதற்கு, ஆண்டவனே, என் ஆவல் கரை மீறுகிறது. காலையில் வந்து சேர்ந்துவிடு. கண்கள் உன்னைப் பார்க்கத் துடிக்கின்றன. இமைகள் கூடுவதில்லை. பார்க்கும் ஆசையினால் ஏற்பட்ட வலியால் அவை இரவும் பகலும் விழித்திருக்கின்றன. இப்பொழுது ஒரு முறை காதலன் கிடைத்துவிட்டால் பிறகு ஒரு நிமிடமும் விட்டுப் பிரிய மாட்டேன். இப்பொழுது கபீருக்குக் குரு கிடைத்துவிட்டார். உயிருக்கினியனும் கிடைத்துவிட்டார்.

---

* கோசுவாமி—சிறந்த அடியார்

## 104

அன்பே நான் இளமங்கையல்லவா? முகத்தைத் திருப்பி மறுபுறம் புரண்டு படுத்து என்னை எதற்காகக் கொல்கிறாய்? ஈர்வாளில் (ரம்பத்தில்) தலை கொடுப்பதுகூட நல்லதே: ஆனால் நீ மறுபுறம் திருப்பிப் படுப்பதை நான் சகிக்கமுடியாது. கழுத்தை அணைத்து நான் சொல்வதைக் கேள். எனக்கும் உனக்கும் இடையில் ஒருவரும் வரமுடியாது. உன்னைப் போல் கணவன்; அதற்கேற்ற மனைவி நானே. கபீர் சொல்கிறார்: "ஆண்களே கேளுங்கள். இனி உங்களை நம்பமுடியாது."

## 105

சப்தத்தின் அடி உடலில் பட்டுவிட்டது. (தெய்வக் காதலனின் பெயர் கேட்டால் உடல் காதல் ஏறி நிற்கிறது.) வீட்டிலும் அமைதியில்லை; காட்டிலும் அமைதியில்லை. தேடித் திரிகிறேன். அன்பனைக் கண்டபாடில்லை. மருந்தையும் வேரையும் தின்று திரிகிறேன். உன்னைப் போல் வைத்தியனும இடையாது என்னைப் போல நோயாளியும் கிடையாது. பிரிந்தவன் மீண்டும், சேராமல் எப்படிப் பிழைத்திருப்பான்? (இது தெரியவில்லையே வைத்தியனான உனக்கு?)

எல்லாப் பெண்களும் ஒரே நிறம் பெற்றவர்களாக இருக்கிறார்கள். அன்பனுக்கு இனியவள் யார் என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. கபீர் சொல்கிறார்: "யாராவது குரு கிடைக்கவேண்டும் அவர், கண்களில்லாமல் (அவன்) தரிசனத்தைக் காட்டித் தரவேண்டும்."

## 106

நான் காதலனைத் தேடிச் சென்றேன். உள்ளத்தின் இந்தக் கவலை தீர்ந்தபாடில்லை. எப்பொழுதும் என் அருகில்தான் இருக்கிறார் அவர். ஆனால் ஒரு பொழுதும் துணைவரை நான் பார்க்க முடிந்ததில்லை. மனம் உளைந்து நாலாபக்கமும் ஓடுகிறேன். அப்படியும் கணவரை எங்கும் காணோம். எவ்விதம் நான் துணிவு கொள்வேன்? கையிலிருந்து வைரம் நழுவி விழுந்துவிட்டதே. கண்ணின் ஒளி எப்பொழுது மழுங்கிற்றோ அப்பொழுது ஆகாயத்தல் சுவாமியைப் பார்த்தேன்.

கபீர் சொல்கிறார்: "சப்தத்தில் ஒளியுண்டு. கண்களில் துணைவன் வாசமும் உண்டு."

## 107

என்றும் உள்ள அந்த மணவாளன் எப்பொழுது கிடைப்பான்? பக்தர்களைக் காப்பாற்றுபவன். நீரில் பிறந்து நீரிலேயே நைம்புக் கொண்டிருந்தும் தாகம் தாகம் என்று அலற வேண்டியிருக்கிறது. அன்பின் எல்லையே! உன்னை விரும்பி, நான் பிரிந்து நின்று வருந்தி வழி நோக்குகிறேன். உன்னிடம் ஒட்டி நான் வீட்டையும் விட்டேன். உன் காலடியே "சதம்" என்று அடைந்தேன். நீரில்லாமல் மீன் துடிப்பதுபோல் என் உள்ளே ஒரே துடிப்பாக இருக்கிறது. இரவும் பகலும் பசியும் இல்லை, தூக்கமும் இல்லை. வீடு வாசல் ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. படுக்கைத் தோழி நமக்கு எதிரியாகி விட்டாள். விழித்தே இரவு கழிகிறது.

துணைவா! நான் உனக்குப் பணிப்பெண் - நீ என்னைத் தாங்கிக் காக்கும் கணவன். ஏழைப்பங்காளா, கருணை காட்டி வா. கெட்டிக்காரனே! படைப்புத் தொழில் வல்லோனே வா. அன்பே, ஒன்று நான் உயிரை விட்டுவிடவேண்டும். அல்லது நீ இதைத் தனதாக்கி ஏற்றுக்கொள்ளவேண்டும்.

கபீர் சொல்கிறார்: "அடிமையின் நச்சுத் துயர் அதிகம் பெருகுகிறது. வா, வந்துதரிசனம் தா."

## 108

சற்குருவின் ராகத்தைக் கேட்டுத் தூக்கம் வருகிறதில்லை. பிரிவு நிலையில் தன் உணர்வு போய்விட்டது. மயங்கிவிடுகிறேன். உன் வீட்டில் இரவில் (இருளும் மயக்கமுமாக) இந்த அநியாயமும் பிரமையுமா? அன்பனுடன் சந்திப்பு ஏற்படாமல் நன்று வருந்து கிறேன். கண்களின் சைகை கற்று அவரைத் தேடி அழைத்து வருவேன். என் காதலன் கிடைத்தால் இன்பமும் அமைதியும் கொண்டு அவனுடைய பெயரையும் குணத்தையும் பாடி மகிழ்வேன்.

போதல் வருதல் (பிறப்பு இறப்பு) என்கிற தொல்லை எல்லாம் ஒழிந்து மடியும். அந்த அழகொளியைப் பார்த்த மகிழ்ந்து கொண்டிருக்கலாம். காலம் (என்ற எமன்) வாடிக் கருகிப்போகும். தோழி! மானசரோவரம் போ. அன்னக் கூட்டங்கள் இருக்கும் இடம் அதுவே. அங்கேதான், கபீர் சொல் கிறார்: "சுவாதியின் நீர் சிப்பிக்குக் கிடைக்கும்."

(முத்துச் சிப்பியில் சுவாதி என்ற மேக நீர் விழுந்தால்தான் முத்து ஆகும் என்பது நம்பிக்கை.)

## 109

கணவன் இன்றி என் இதயம் புழுவாய்த் துடிக்கிறது. பகலில் அமைதி இல்லை; இரவில் தூக்கம் இல்லை. துடித்துத் துடித்தே (இரவைக் கழித்தேன்) காலை வந்தது. என் உள்ளமும் உடலும் (அன்பணில்லாத) வெற்றுப் படுக்கையில் உருளைபோல் சுழன்றது. வாழ்க்கை வெறுத்தது. கண்கள் களைத்தன. வழி புலன்படவில்லை. ஈரமற்ற சுவாமி நினைவையே மறந்து விட்டார்.

கபீர் சொல்கிறார்: "சாதுவே கேளுங்கள் - துயரை நீக்குங்கள். துக்கம் மிகவும் உழக்குகிறது."

## 110

காதலனுடன் சேரும் நம்பிக்கையில் எவ்வளவு நேரம் நின்றிருப்பேன்? மேலே ஏற முடியவில்லை. மனத்தில் நாணம் நிறைந்துவிடுகிறது. கால்கள் நிற்க மறுக்கின்றன. விழுந்து விழுந்து விடுகின்றேன். மீண்டும் மீண்டும் எழுந்து நிலைபெற்று ஏறுகிறேன். கால்களை முன்னால் வைக்கிறேன்; ஒவ்வொரு அங்கமும் நடுங்கு கிறது. மிகவும் அச்சுறுகிறேன். வஞ்சனைக் கருமம் பாதையை மறைத்ததால் மோகத்தில் சிக்குண்டு உழலுகிறேன். பெண்ணும் முற்றிலும் சிறியவள். வழியும் மிகவும் குறுகியது. நடையும் தத்தளிக்கிறது. எப்படி உன்னை வந்து அடைவேன்? கெட்ட புத்தியும் விகார எண்ணங்களையும் விடு. நல்ல புத்தியை ஏற்றுக் கொள். சற்குருவின் சொற்களை நன்றாய்த் தேர்ந்து சரணத் தைச் சித்தத்தில் ஏற்றுக்கொள். உன் கதவைத் திறந்து விடு. சப்தத்தை மனத்துக்குள் நிறுத்திக்கொள். கபீர்தாஸ்! உன் இதயத்தின் நடுவிலேயே, ஏ பைத்தியக்காரி, அவன் கிடைத்து விடுவான்.

## இல் துறவு

## 111

அவது! தப்பியவனை வீட்டுக்குக் கொண்டு வருபவனைத் தான் எனக்குப் பிடிக்கும். வீட்டிலேயே யோகம், வீட்டிலேயே போகம், வீட்டைவிட்டுக் காட்டுக்குச் செல்லவேண்டாம்.

வனத்தில் சென்றும் (மனத்தில்) கற்பனைகள் நிறைந்தால் அப்பொழுது எங்கே சென்று அடைவாய்? வீட்டில் முக்தி, முக்தியிலேயே விடு. காணப்படாத ஒன்றைக் குரு காட்டித் தந்தால் அது அங்கேயே நிகழும் 'சகஜ சூனி'யத்தில் அமைந்து நிற்க வேண்டும்! 'சகஜ சமாதி'யில் அடங்க வேண்டும்.

'உன்மன' நிலையில் நின்றால் பிரமத்தை அறியலாம். பரம தத்துவத்தைத் தியானத்தில் அடையலாம். 'சுரதி நிரதி' (யோகத்தின் தொடக்க, இறுதி நிலைகள்) இரண்டையும் ஒன்றாக்கி 'அநாஹத' நாதத்தை எழுப்பித் துய்க்கலாம். வீட்டில் பொருள்; பொருளில் வீடு. வீடுதான் பொருளைச் சேர்த்துத் தரும்.

கபீர் சொல்கிறார்: "அவதூ! கேள், இருந்தபடியே நிறுத்திவை."

உன் மனநிலை - ஹடயோகப் பயிற்சியில் ஒரு நிலை. ('காஷாய நிலை' என்று சொல்வார்களாம்.)

## 112

ஏ, தொலைவில் புத்தியுடையவனே! தூரம், தூரம், தூரம். உனக்குத் தொலைவு என்றால் மிகவும் பிடிக்கிறது. கடவுள் அவையில் இங்கே இருக்கிறார். பிறகு யாரை எதற்காகப் பாடுகிறாய்? சொல். கற்பனையை விட்டுவிடு. தொலைவுக்கு ஓடுவதை நிறுத்து. அரசை விட்டு மண்ணை எதற்கு வாயில் அள்ளிப் போட்டுக் கொள்கிறாய்? மரத்தைப் பிடித்தால் இலைகள், கிளைகள் எல்லாம் கிடைத்துவிடும். கிளையைப் பிடித்தால் மரம் கிடைக்காது. கிளை மரம், பூ, பழம் எல்லாம் வெளிப்பட்டே இருக்கின்றன. குரு கிடைத்தால்தான் இவ்வளவையும் காட்டித் தர முடியும்.

சம்பத்து, சுகம், உரிமை எல்லாவற்றையும் விட்டு யோகியானாய், சூனியத்துக்கு (தனியேயிருக்க) ஆசைப்பட்டுக் காட்டுப் பகுதிக்கு ஓடினாய். கபீர் சொல்கிறார்: "காட்டுப் பகுதியில் என்ன கிடைக்கும்? மனதிலேயே தேடித் தரிசனத்தைப் பெறு."

## 113

கிடைக்காததை விட்டால் அது என்ன பெருமை? கிடைத்ததை விட்டவன் அல்லவா, தியாகி! நல்ல குதிரையை ஓட்டுகிறாய்;

அது என்ன பெரிய வேலை? அடங்காத குதிரையை விரட்டினால் அவன் (கடிவாளம் பிடிப்பதில்) கெட்டிக்காரன். உலகின் பெருமையைப் பாடுவது என்ன பாட்டு? அநுபவத்தைப் பாடுபவன் பாட்டுக்காரன்! கபீர் சொல்கிறார் : "காடு, வீடு இரண்டின் எண்ணச் சுவட்டையும் அறிந்தவன்தான் 'வைராகி'யாவான்!"

## கரும கதி—ஊழ்

### 114

ஊழின் போக்கு தப்பினாலும் தப்பவிடாது. வசிட்ட முனிவர் போன்ற அறிவாளி, புலவர், துருவிப் பார்த்து ஒரை வகுத்துமே (ராமனுக்கு) சீதை எடுத்துச் செல்லப்பட்டாள்; தந்தையின் மரணம், காட்டில் தொந்தரவு எல்லாம் ஏற்பட்டன. சிக்கல் எங்கிருந்து வந்தது? அந்த வேடன் எங்கே, மான் வந்து மேய்ந்தது எங்கே? இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான். தங்கமான இலங்கை, எரிந்து சாம்பலாயிற்று. அரிச்சந்திரன் தாழ்ந்தவனிடம் விற்கப் பெற்றான். பலி பாதாளம் அடைந்தான்.

தினந்தோறும் கோடிப் பசு புண்ணியம் செய்தானே அரசன், அவனும் பச்சோந்திப் பிறவியில் பிறந்தான். பாண்டவர்கள், அவர்களுக்குத் தானே சாரதியாயிருந்தான் (கண்ணன்); அவர்களுக்கும் ஆபத்து வந்தது. துரியோதனன் கர்வம் அழிந்தது. யாதவர் குலம் அழிந்துவிட்டது. ராகுவும் கேதுவும் சூரியனையும் சந்திரனையும் விழுங்கும் காலச் சேர்க்கை ஏற்பட்டது. கபீர் சொல்கிறார் : "ஏ சாதுவே ஆவது ஆகியே தீர்ந்தது."

### 115

தன் ஊழ் அழிக்க இயலாதது. கோடி யுகம் ஆனால் என்ன? விதி எழுதியதை எப்படி அழிக்க முடியும்? குரு வசிட்டர்தான் நாள், நேரம் தேர்ந்து குறித்தார். சூரிய மந்திரம் சொல்லித் தந்தார். சீதையை ரகுநாதன் மணந்துகொண்டார். ஒரு கணமும் (கூட இருந்து) காப்பாற்றவில்லை. நாரத முனிவரின் முகம் மறைந்தது. உருவம் குரங்காயிற்று. (அவாவை வென்றதாகப் பெருமை கொண்ட நாரதரைச் செருக்கழிக்கத் திருமால் ஓர் அரசகுமாரியைக் காட்டி மோகமடையச் செய்தார். (அவள் சுயவரத்துக்குச் செல்ல விரும்பிய நாரதர் தனக்கு அழகு வேண்டும் என்று விஷ்ணுவிடம் கேட்க, விஷ்ணு அவர் முகத்தைக் குரங்காக ஆக்கினார் என்று புராணம் சொல்கிறது.)

சிசுபாலனின் கைகளைக் கிழித்து எடுத்தது—தன்னுடைய புத்தியின் உருவத்திலேயே! மூன்று உலகத்திலும் தேவன் போன்ற வீரன் என்றே சொல்லலாம், அப்படிப்பட்ட வாலி வலிந்து கொல்லப்பட்டான். அவர்களுக்கெல்லாம் அப்படிப்பட்ட ஒரு நிலை வந்து சேரும்படி ஒரு வாய்ப்பு வந்து சேர்ந்தது. பார்வதியை மலடி என்று சொல்லவில்லையா? கபீர் ஆட்சி செலுத்தியவர் சொல்லுகிறார் : கர்மத்தின் (ஊழின்) சேதியே தனி.

## மோகத்தின் மகிமை

## 116

கிழவி சிரித்துக்கொண்டு சொல்கிறாள் : நான் என்றென்றும் இளம் பெண்ணே! என்னைப் போல் இளம் பெண் எந்த மங்கை இருக்கிறாள்? இந்த என் பற்கள் வெற்றிலை மென்றே தேய்ந்து விட்டன. கங்கையில் முழுகி முழுகி என் தலைமயிரும் கொட்டி விட்டது. என் கண் மை இட்டு இட்டுப் (மங்கிப்) போய்விட்டது. பிற ஆண்கள் எடுத்துக்கொண்டதால் என் வயதும் போய் விட்டது.

ஆண்களின் உயிர் என் உணவு. நான் அறியாதவனுக்குச் சிங்காரம் செய்கிறேன். கபீர் சொல்கிறார் : “கிழவி ஆனந்த மாகப் பாடுகிறாள். தினம் மகனையும் கணவனையும் உட்கார்ந்து சாப்பிடுகிறாள். (மோகம் எனும் கிழவி.)

## 117

என் கணவன் மிகவும் நல்லவன். உழைத்து உழைத்துக் காலையாக்கி விடுகிறான். (உழைப்பிலேயே இரவு முழுவதையும் கழிக்கிறான்) அதிகாலையில் எழுந்து முற்றத்தைப் பெருக்கு கிறான். பெரிய கூடையில் சாணம் எடுத்துத் தெளிக்கிறான். பழைய சாதத்தை ஆண் எடுத்துச் சாப்பிடுகிறான். பெரிய பாத்திரத்தில் தண்ணீர் எடுத்து வருகிறான். என் சுவாமி, துணியைக் கட்டிக்கொண்டு சந்தைக்குச் சந்தை சென்று விற்று வருகிறான்.

கபீர் சொல்கிறார் : “இவை எல்லாம் அரியின் வேலைகள். மனைவிக்குக் கணவன் எதற்காவான்?

## 118

அச்சம் ஏற்பட்டது; சிரிப்பு வருகிறது. வேடிக்கையான காலம் வந்துவிட்டதடா! சொத்தும் பணமும், சாமானையும் பொருளையும் எடுத்துக்கொண்டு யாராவது சாது ஒரு பிடி அன்னம் கேட்டால் சொல்கிறார்கள் : 'வெட்கம் இல்லையா உனக்கு?' என்று.

கதை நடக்கிறது. கேட்பவர்கள் தூங்குகிறார்கள். சொல்பவன் மிக முயன்று புரிய வைக்க முயலுகிறான். எங்கேயாவது வேடிக்கைக் காட்சிகள் நடந்தால் அங்கே தூக்கம் கொஞ்சமும் தொந்தரவு செய்வதில்லை. பங்கி, புகையிலை, கஞ்சா, அபினி நன்றாய் நனைக்காமல்கூட உண்கிறார்கள்.

குருவின் பாதநீர், நேமம் நிட்டை என்றால் அதுதான் இல்லை. கள் குடிக்க மட்டும் வந்துவிடுகிறார்கள். உலகத்தில் எதிர்ப்போக்கு நிலைத்துவிட்டது. அதனால் பதற்றமடைகிறது. கபீர் சொல்கிறார் : "ஏ சாதுக்களே! உலகம் பின்னால் கழிவிரக்கம் கொள்கிறது."

## 119

இந்த உலகம் பித்துக் கொள்ளியாய் விட்டதையா! பக்தி எண்ணமே எழுவதில்லையே. யாராவது வந்தால், 'கோசுவாமி, இதையே கொடுங்கள்!' என்று பிள்ளைவரம் கேட்கிறார்கள். துக்கப்பட்டவன் வருகிறான், 'எங்கள் மேல் கிருபை செய்யுங்கள்' என்று சொல்லிக்கொண்டு. ஒருவன் வந்தால் சொத்து வரம் கேட்கிறான். 'பணம் காணிக்கை எடுத்துக் கொள்ளுங்கள். ஒருவன் மணம் முடித்துக்கொள்கிறான். கோசுவாமி அதைக் கேட்டு ஆனந்தம் கொள்கிறார். உண்மைப் பொருளை வாங்க ஆள் கிடையாது. பொய்யைக் கண்டு உலகம் நம்புகிறது.

கபீர் சொல்கிறார் : 'சாதுக்களே கேளுங்கள்—குருடர்களுக்கு என்ன செய்ய முடியும்?'

## 120

இந்த உலகம் குருடு. நான் எவ்விதம் அறிவுறுத்துவேன்? ஒன்றிரண்டு பேரானால் அவரைச் சொல்லித் திருத்தலாம். எல்லோருமே வயிற்றுப் பிழைப்பில் மாய்கின்றவர்களாக இருக்

கின்றனர். நீர்க்குதிரை, காற்றுச் சவாரி, பனித்துளி இவைபோல் விழுந்து மாய்கிறது. (உலகம்) ஆழமான நதி. தாளமுடியாத ஓட்டம், படகோட்டி சுழலில் மாட்டிக்கொண்டான்.

வீட்டில் பொருள்; அருகே வருவதில்லை. குருடன் விளக்கை ஏற்றிக்கொண்டு சுற்றுகிறான். நெருப்புப் பிடித்துக்கொண்டது. காடு முழுதும் எரிந்தது. குரு தரும் ஞானம் இல்லாமல் தாசன் திரிகிறான். கபீர் சொல்கிறார் : "சகோதரா, சாதுவே கேளுங் கள். ஒரு நாள் தாசன் கோவணத்தை (அரைத்துணியை) உதறிவிட்டுப் போய்விடுவான்."

## 121

குடும்பத்தை முழுக வைத்தவன் கங்கையில் முழுகப் போகிறான். 'சத்துமா' ஏற்பாடு செய்தான். அவலையும் மூட்டை கட்டிக்கொண்டாள். முட்டாக்கை இழுத்து விட்டுக் கொண்டு கிளம்பிவிட்டாள். மூட்டை முடிச்சையும் கட்டி எடுத்துக்கொண்டாள். கணவன் தலையில் நெருப்பை வைத் தாள்; மெட்டை (கால் விரலில் போட்டுக்கொள்ளும் வெள்ளி நகை) எடுத்துப் போட்டுக் கொண்டாள். ஒண்டா (புல்லாக்கு?) என்கிற நகையையும் அணிந்துகொண்டாள். கணவனையும் ஒரு உதைவிட்டுச் சென்றாள். கங்கையில் முழுகினாள், யமுனை யில் நீராடினாள். ஒன்பது மனத்திலும் (ஒன்பது மனு) அழுக்கை ஏற்றிக்கொண்டாள். ஐந்து இருபத்தைந்தினிடம் (இந்திரியங் கள், அவைகள் தரும் பல இன்னல்கள்) அடியும் பட்டாள். வீட்டு முதலையும் அழித்து வந்தாள்.

கபீர் சொல்கிறார் : "சற்குருவிடம் அன்பு செய். உன் முக்தி அழியாது."

(மோகத்தில் அழியும் உயிர் உருவகப்படுத்தப்பட்டிருக் கிறது.)

## விழிப்பு

## 122

பண்டிதர் சொல்கிற வாதம் எல்லாம் பொய். இராமன் என்று சொன்னவுடன் உலகம் நற்கதி அடையும்; கற்கண்டு என்றாலே வாய் இனிக்கும்; நெருப்பு என்றால் கால் சுடும்; நீர்

என்றாலே தாகம் தீரும்; சாப்பாடு என்றவுடனேயே பசி ஓடிவிடும் என்றால் உலகம் எப்பொழுதோ கரையேறியிருக்குமே. மனித னுடன் சேர்ந்து கிளியும் அரி என்று பேசுகிறது. அரியின் பெருமை அறியாது. என்றாவது அது காட்டுக்குப் பறந்து ஓடிவிட்டால் அதற்கு அரியின் நினைவே வராது. பார்க்காமல், தொட்டு அறியாமல், (நன்கு பழக்கம் பெறாமல்) பெயரைச் சொல்வத னால் என்ன ஆகும்?

பணம் என்று சொன்னவுடனே பணக்காரன் ஆகிவிடுவான் என்றால் உலகில் ஏழை ஒருவனும் இருக்கமாட்டான். புறப் பொருள் மாயையில் உண்மையான அன்பு; அரியிடம்!பக்தி என்று (சிரிக்கத் தக்க) வெளித்தோற்றம். கபீர் சொல்கிறார்: "ராமனை வழிபடாமல் எமனூர் போவது உறுதி."

## 123

பண்டிதரே, மனத்தில் எண்ணிப் பார்த்தீரா? சொல்லும் பார்க்கலாம். தீட்டு எங்கிருந்து பிறந்து வந்தது? தீண்டாமை பார்க்கிறாயே! நாதம், விந்து, ரத்தம் எல்லாம் சேர்ந்து தானே இருக்கின்றன. பாண்டத்துக்குள்ளே தானே பாண்டம் (உடலுக் குள் உடல்) தயாராகிறது. எட்டுத் தளக் கமலம் பூமிக்கு வந்தது; இந்தத் தீட்டு எங்கே ஏற்பட்டது?

எண்பத்து நான்கு லட்சம் உயிர்த் தொகுதிகளும் பழைய வாசனைகளால் கழிந்து மீண்டும் மண்ணானார்கள். ஒரே பலகையில்தான் எல்லோரும் அமர்கின்றனர். (ஒரே பூமியில் தான் எல்லோரும், எல்லாம் வளர்கின்றனர்) நீருற்றித் தீட்டை அறுக்க முயலுகின்றனர். சாப்பாடு தீட்டு, ஆசமனம் தீட்டு (உண்ணும் உணவு, குடிக்கும் நீர் எல்லாம் தீட்டு) உலகமே தீட்டுத்தான்.

கபீர் சொல்கிறார்: "எவர்களிடம் மாயை இல்லையோ அவர்களைத்தான் தீட்டு விடும்!"

## 124

பண்டிதரே இதயத்தில் எண்ணிப்பாரும். யார் ஆண், யார் பெண்? 'சகஜம்' (இயல்பான உயிர்) எல்லா உடலிலும் சமமாகப் பேசுகிறது. அதன் கதை மிகவும் விநோதமானது. அதன்

பெயரை என்ன சொல்லி அழைப்பாய்? அதற்கு நிறம் ஏது? உருவம்' ஏது? 'நான்,' 'நீ' என்று ஏன் அடித்துக் கொள்கிறாய்?

மனிதா, என்னுடையதாவது, உன்னுடையதாவது யாது? ராமன், குதா, சக்தி சிவன் எல்லாம் ஒன்றென்று சொல்வோம், என்ன மாறுபாடு? வேதம், புராணங்கள், குரான், 'கிதாப்பு' (நூல்) ஆகியவை நாலா முறைகளில் பேசுகின்றன. ஹிந்து, துருக்கன், ஜைனன், யோகி ஒருவரும் ஒன்றும் அறிந்தாரில்லை. 'ஷட் தரிசனம்' என்ற ஆறு தத்துவ சாத்திரங்களில் பேசப்படுவ தெல்லாம் மனம்போன போக்கில் பேசப்படும் பேச்சு.

கபீர் சொல்கிறார் : "(இப்படிப் பேசுகிற) நாம்தான் பைத்தி யங்கள்! இந்த உலகம் முற்றிய மதியுடையது!"

## 125

மாயை தன் வஞ்சக வலைக்குள் நம்மை அழுத்திவிட்டது. அதனால் ஞானரத்தினத்தைப் பிடுங்கிக்கொண்டது. வாழ்க்கை யில் காணும் கனவு போன்றே வாழ்க்கையும் கனவு. குரு சப்தத் தின் உபதேசம் தந்தார். பரம முடிவான அதை விட்டு விட்டோம். சோதியைப் பார்த்தே விட்டில் விழுந்து பொசுங்கு கிறது. நெருப்பைப் பார்ப்பதில்லை. காமம் குரோதம் இவற்றால் மனிதன் கண்மூடி இருக்கிறான், பொன்னிடத்தும் பெண்ணிடத் தும் ஆசை கொண்டு. 'சய்யதும்' 'சேக்கும்' கிதாப்புக்களைப் (நூல்களைப்) பார்க்கிறார்கள். பண்டிதர்கள் சாத்திரங்களை எடுத்து ஆய்ந்துகொண் டிருக்கிறார்கள். சற்குருவின் உபதேசம் இல்லாமல் எவ்வளவு உயிர்கள் மாண்டன என்று அறிந்துகொள். நன்றாய்த் தெரிந்துகொள். விவகாரத்தை (ஆசைத் திரிபை) விட்டுவிடு. அப்பொழுதுதான் கரையேற முடியும்.

கபீர் சொல்கிறார் : "ஆண்டவனை வழிபாடு செய். அதை விட்டால் வேறு இரண்டாவது (வழி) கிடையாது."

## 126

அவர்கள் எவ்வளவோ ஆசைப்படுகிறார்கள். ஆனால் ஹரி யின் மறைந்திருக்கும் உண்மைக் கருத்தை ஒருவரும் அறிய மாட்டார்கள். பொறிகள் எங்கே அடக்கம் கொள்கின்றன? ராமன்' என்றவர்கள் எங்கே போனார்கள்? அறிவிலிகள் எங்கே

சென்றார்கள்? இறந்து அந்தப் பதவியிலேயே சென்று அடை கிறார்கள். ராமாநந்தம், ராமரசம் குடியுங்கள். கபீர் சொல் கிறார் : "நாம் சொல்லிச் சொல்லிக் களைத்துப் போனோம்."

## 127

சொல், ஆகாயத்தில் எதற்காகப் பார்க்கிறாய்? விழிக் கின்றவனே, நீ நற்பேறு பெற்றவன், விழித்துக்கொள். ஆகாயத் தின் நடுவே நட்சத்திரம் பார்வைக்குட்படும். ஒன்று விழித்தது; மற்றொன்று எழுப்பியது. நீ யாரைத் தேடுகிறாயோ அவர் அங்கே இல்லை. அவரோ அமர நிலையில் இருக்கிறார்.

கபீர் சொல்கிறார் : "எவனுக்கு வாயும் இதயமும் ஒன்றாக இருக்குமோ அவன்தான் அந்தப் பதத்தைத் தெரிக்கப் பேச முடியும். (ஆத்ம ஞானம் அநுபவப் பொருள்.)"

## 128

பாபு, உன் உலகம் அப்படி இருக்கிறது. இது கலிகாலப் போக்கு! தினந்தோறும் யார் இந்தத் தொல்லையைச் ஸகித்துக் கொள்ளமுடியும்? நம்மாலாகாது. ஸ்மிருதியின் நல்ல பொருள் எல்லோருக்கும் தெரியும், இதயத் தத்துவம் ஒருவருக்கும் தெரியாது. உயிரற்றதன் எதிரே உயிருள்ளதைக் கட்டி நிறுத்து கிறார்கள். கண்களுக்கு ஒன்றும் படுவதில்லை. அமுதத்தை ஒதுக்கி நஞ்சை ஏன் அருந்தவேண்டும்? முடிச்சில் செல்லாக் காசை முடிந்து கொள்கிறார்களே!

திருடர்களுக்குப் பகலிலேயே சிங்காதனம் கிடைக்கிறது. உண்மையரசன் ஒளித்துவைக்கப்படுகிறான். கபீர் சொல்கிறார்: "வஞ்சகனுக்கு வஞ்சகன் கிடைத்தான். மோசத்துக்கு மோசமே நடைபெறுகிறது. மூன்று உலகமும் நிரம்பியிருக்கிறது. உண்மையை நம்புபவன் மட்டும் இல்லை."

## 129

கண்களுக்கு எதிரே அடர்ந்த எண்ணங்கள். பாதிக்குமேல் இடையில் தியானம் ஈடுபட்டிருக்கிறது. மாலை என்ன, இரவு அல்லது காலை என்ன? எந்தத் தேவன் (மாயையின்) காரணமாக உலகம் பிரமை கொண்டு அலைகிறதோ அந்தத் தேவனே

குடத்துக்குள் (உடலுக்குள்) வாசம் செய்கிறான். (அவன்) ஆகாயத்திலும் பூமியிலும் நிறைந்திருக்கிறான். எங்கே பார்த்தாலும் என் தேவன்தான். என் தேவன் ஒரு செபமாலை தந்தான். கபீர் சொல்கிறார்: "அதை என் மனத்துக்குள்ளேயே உருட்டுகிறேன்."

## 130

விழி; உயிரே, விழித்துக்கொள். எதற்காகத் தூங்குகிறாய்? ஏ, உயிரே விழித்துக்கொள். 'ரா'காரம் சொல்லித் திற ('ரா' என்று சொல்லி). ஞானரத்தினத்தை 'ம' என்று சொல்லி உள்ளே யிட்டுவிட்டு விழித்துக்கொண்டிரு. அப்படி யார் பலம் பெறுகிறானோ அவன் தலைக்கு நல்ல காலம் வரும். இப்படி விழித்திருக்க யார் அறிகிறானோ அவனுக்கு அரி நன்மையைத் தருகிறார்.

கபீர் சொல்கிறார்: "யோகம் வேண்டும், வைராக்கியம் எதற்கு ஆகும்?"

## 131

### உபதேசமும் எச்சரிக்கையும்

சகோதரா, பேசுவதென்றால் எப்படிப் பேசுவது? பேசினாலே எல்லாத் தத்துவங்களும் அழிந்து விடுகின்றன. பேசப் பேச மாற்றங்கள் அதிகரிக்கின்றன. பிறகும் பேசினால் பேச்சு கருத்தை மீறித்தான் இருக்கும். சாதுக்கள் கிடைத்தால் இரண்டு வார்த்தைகள் பேசு. 'அசாது' (சாது அல்லாதவன் - கெட்டவன்) என்றால் மௌனமாக இருந்து விடு. பண்டிதர்களுடன் பேசுவது நன்மை பயக்கும். மூர்க்கர்களானால் வாயைப் பொத்திக் கொண்டு சும்மா இருந்துவிடு. கபீர் சொல்கிறார் : "குறைகுடம் வீணில் அலையும். நிரம்பி விட்டால் கருத்துடன் பேசும்."

## 132

இறக்கட்டும்; உடலை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? உயிர் நகர்ந்தால் எடுத்து வெளியே எறிந்துவிடுவர். என்ன செய்வது என்ற மயக்கம்: பலவாறு ஏற்பாடுகள்: ஒருவன் எரிக்

றொள்; ஒருவன் மண்ணுக்குள் புதைக்கிறான். ஹிந்து எரிக்கிறான்; துருக்கன் புதைக்கிறான். இந்தத் தொல்லை இரண்டு வீட்டையும் விட்டுவிடுகிறது.

கருமத்தின் சிக்கல் உலகம் முழுவதையும் வலைப்பரப்பில் பிடித்திருக்கிறது—செம்படவன் வலையில் மாட்டி மீனைப் பிடித்து அடிப்பதுபோல். நடுவழியில் கிடக்கும் சாணிப் புழுப் போல் வாழ்கிறான், இராமன் (பக்தி) இல்லாத மனிதன்.

கபீர் சொல்கிறார் : "இந்த வீட்டைவிட்டு அந்த வீட்டுக்குப் போகும்போது பின்னால் வீணில் வருந்துவாய்."

## 133

எதற்காகக் கோணல் கோணலாகப் போகிறாய்? பத்துத் துவாரங்களும் நரகத்தில் அழுந்தியிருக்கின்றன—துர்நாற்றத்தின் குப்பை, கண்கள் அறிவித்தன. இதயம் புரிந்து கொள்ளவில்லை. புத்தி எதையும் அறிய மறுக்கிறது சிற்றின்ப விருப்பம், குரோதம், பற்றுணர்வு இவற்றின் காரணமாகத் தண்ணீர் இல்லாமலேயே முழுகி, அழுந்திச் சாகின்றனர் மக்கள். எரித்தால் உடல் சாம்பலாகிவிடும்; புதைத்தால் மண் தின்றுவிடும் : உடலின் பெருமை இவ்வளவுதான்; பன்றி, நாய், காக்கை இவற்றிற்கு உணவாகும்.

கண்மூடி இருக்கும் மனிதா, விழித்துப்பார். எமன் உன்னிடமிருந்து அதிக தூரம் இல்லை. கோடி முயற்சி செய். பலவிதமாகச் செய். (என்ன செய்தாலும்) உடலின் எல்லை நிலை மண்தான். அஞ்ஞானியே, மணல் வீட்டில் உட்கார்ந்துகொண்டு விழிப்பும் அடையாதிருக்கிறாயே. கபீர் சொல்கிறார் : "ஓரிராமனை வழிபடாமல் அநேக கெட்டிக்காரர்கள் முழுகி விட்டார்கள்."

## 134

என்ன உப்பி உப்பித் திரிகிறாய்? (பெருமை கொண்டு அலைகிறாய்?) பத்துமாதம் மேலே தூக்கிய முகத்துடன் தொங்கினாயே, அந்த நாளை ஏன் மறந்தாய்? ஈ சுவை கண்டு சுற்றுவது போல் சுற்றிச் சுற்றிப் பணம் சேர்க்கிறாய். பின்னால் எடுத்துக் கொள்ளலாம் என்று வைத்துப் பூதத்தினிடம் கொடுத்தாய். வாயிற்படி வரைதான் குழந்தைகள் மனைவி எல்லாரும்.

அதற்கப்புறம் துணை அவன்தான். சாகும் இடத்தில் கட்டில் துணை நிற்கும். பிறகு 'அன்னம்' தனிதான். எரித்தால் உடல் சாம்பல்; புதைத்தால் மண் தின்றுவிடுகிறது. சுடப்படாத குடத்தில் நீர் நிரப்பினால் எப்படியோ அப்படித்தான் இந்த உடலின் பெருமையும். மோகத்தில் மயங்கி இராமடம் இன்பம் கொள்ளாமல் காலன் வயப்பட்டுக் கிணற்றில் விழுகிறாய்.

கபீர் சொல்கிறார் : "மூங்கில் புதரில் சிக்கும் கிளிபோல் மனிதன் தானே சிக்கிக்கொள்கிறான்."

## 135

அல்லாவே, இராமபிரானே, உயிர்கள் உன்னுடையவை, சுவாமி, அவர்கள், மேல் தயவு செய்வாயாக. பெரிய தலையை வளைத்து மொட்டையடிப்பதால் என்ன ஆகும்? நீர் விட்டு முழுகுவதால் என்ன ஆகும்? கொலை செய்து சாது என்ற பெயர் தேடுகிறார்கள். (பலி கொடுக்கிறார்கள், பக்தர்கள் பட்டம் பெற.) நற்குணத்தை ஒளித்து விடுகிறார்கள். நன்னீரில் முழுகி என்ன கிடைக்கும்? மசூதியில் தலை வணங்கித் தான் என்ன? இதயத்தில் கள்ளம் இடம் கொள்ள நமாசுப் படித்தால் என்ன லாபம்? 'மெக்கா' சென்றால் என்ன பயன்?

விரதம் காத்துப் பட்டினி கிடக்க என்று ஹிந்துக்கள் ஏகாதசிக் கணக்கில் (வருஷத்துக்கு) இருபத்து நான்கு நாட்கள் ஏற்படுத்திக் கொண்டார்கள். முசல்மான்கள் முப்பது நாட்கள் விரதம் ஏற்படுத்திக் கொண்டார்கள். பன்னிரண்டு மாதங்களை யும் ஏன் விட்டீர்கள்? அவை எங்கே சேரும்? கிழக்கே அரி வசிக் கிறார். மேற்கே அல்லா வசிக்கிறார்! அட, மனத்துள்ளே தேடு. மனந்துக்குள் காண். அதுதான் இராமர்; அதுதான் கரீம். குதா மசூதிக்குள் அடங்கியிருந்துவிட்டால் மீதியுள்ள நாடு யாருடையதாம்?

தீர்த்தத்துள்ளும் மூர்த்தத்துள்ளும் ராமன் வசிக்கிறார் என்றால் இரண்டுள்ளும் பார்த்தவராது உண்டோ? வேதத்தை யும் 'கிதாப்' பையும் (நூல்களையும்) பொய்க்க வைத்ததுயார்? நன்கு சிந்திக்காதவர்கள் அப்படி ஆக்கிவிட்டனர். எல்லா உடலுக்குள்ளும் ஒன்று என்று எழுதின (அவை) அவைகளை அழியச் செய்துவிட்டனர் இவர்கள். எதிலிருந்து ஆண்களும் பெண்களும் உதித்தனரோ அது உன் உருவம் தானே!

கபீர் சொல்கிறார் : "அல்லா, இராமருடைய தாசர் யாரோ, அவரே என்னுடைய குருவும் பீருமாவார். (பீர் = முகம்மதிய குரு.)"

## 136

வண்டு பறக்கும், கொக்கு வந்து உட்காரும், இரவு போய் விட்டது, பகலும் போய்விடும். உயிராகிற பெண் நடுங்கு கிறாள். அன்பன் என்ன செய்வான் என்று தெரியாது. பச்சை மண் (ணாலான) பாத்திரம், நீர் தங்காது. அன்னம் பறந்து விட்டது. உடல் கருக ஆரம்பித்துவிட்டது. காகத்தை விரட்டி விரட்டிக் கை வலி எடுக்கிறது. கபீர் சொல்கிறார் : "இந்தக் கதை முடிந்துவிட்டது."

## 137

இராம நாமத்தின் பிரசாதத்தைப் பெற்றுக்கொள். தொலைவில், வீண் ஆசை கொள்ளாதே பித்தனே! வேறு தேவனை எதற்காகப் பூசை செய்கிறாய்? அதெல்லாம் பொய் ஆசை. மேலே உண்மையைச் சொல்கிறாய்; ஏய்! உள்ளே இன்னம் கருமைதான். (உள்ளொன்று புறமொன்றாக வாழ் கிறாய்) உடல் கிழத்தன்மை அடைந்து என்ன ஆயிற்று? மனம் இன்னம் பிள்ளைத்தனத்தை விடவில்லையே. வாயிலுள்ள பற்கள் போய் என்ன? பைத்தியமே, உள்ளே (மோகம் முதலிய) இரும்புப் பல்லல்லவா இருக்கிறது. மீண்டும் மீண்டும் சிற்றின்ப விருப்பம், வெகுளி, பெருமை, பற்று உணர்வுவிடாமல் பொருளின் (பொறியின்பக்) கடலையைச் சுவைத்துக் கொரித்துக் கொண்டுதானே இருக்கிறாய்? உடலின் ஆற்றல் எல்லாம் குறைந்து குறைந்து ஒழிந்தது. மனத்தின் ஆசை மட்டும் இரண்டு மடங்காகி விட்டதே.

கபீர் சொல்கிறார் : "ஏ, சாதுக்களே கேளுங்கள் : எல்லா கெட்டிகாரத்தனங்களும் திறனற்றவையே!"

## 138

இராமன் பெயர் இல்லாமல், இராமன் பெயரை மறந்து வாழ்க்கை வீணில் கழிந்ததே. இலவமரத்தைக் கிளி காத்து வீணாயிற்று; (வெடித்துக்) கம்பளி (பஞ்சு) பறந்தவுடன் மனம்

வருந்திற்று, அரசன் மதியிழந்து பொருளையும் மூட்டை கட்டித் தந்து வீட்டையும் விட்டதுபோல! சுவையினால் மட்டும்வயிற்றை எப்படி நிரப்புவாய்? பனித்துளியினால் தாகம் நீங்குமா? திரவியம் (பணம்) இல்லாமல் ஆண்மை எதற்கு ஆகும்? மனத்துக்குள்ளயே அடக்க வேண்டியதுதான், முடிச்சில் இரத்தினம் இருக்கிறது, சூது அறியமாட்டாய், பரீட்சை செய்கிறவன் எடுத்துவிடுவான்.

கபீர் சொல்கிறார் : "இந்தச் சந்தர்ப்பம் கழிந்தால் மீண்டும் ரத்தினம் கிடைக்காது."

## 139

உன்னுடைய நாக்கு இராம நாமம் சொல்லவில்லை என்றால் பிறந்து அழிந்து பிரமை கொண்டுதான் இருப்பாய். மரத்தின் நிழலைப் பார்ப்பதுபோல் உயிர் போகிறது. சொல், யாருடைய மாயை அது? உயிருடன் இருக்கும்போது நிலைத்து நிற்க ஒன்றையும் செய்வதில்லை. இறந்துவிட்டால், சொல் உன் வேலையை யார் அறிவார்கள்? முடிவுக் காலத்தில் ஒருவரும் சுகமாகத் தூங்குவதில்லை. அரசன், ஆண்டி இருவருமே சேர்ந்து தான் அழுகிறார்கள். சரோவரத்தில் அன்னத்துக்குக் கமலம் சரீரம், கபீர் ராம ரசாயனத்தைக் குடிக்கிறார்.

## 140

வீண் பெருமை கொண்டவனே, நன்றாய்ச் சிந்தித்துத் தெளிந்துகொள். உடை பழையதாகிவிட்டது. துண்டு துண்டாகத் திறமையால் சேர்த்துத் தையல் போட்டு அங்கங்களின்மேல் போர்த்துக் கொண்டிருக்கிறாய். பாபத்தால் அழுக்காகி விட்டாய். பற்றுணர்வு, மயக்கம் இரண்டிலும் நனைந்து எழுந்திருக்கிறாய். இதில் ஞானத்தின் சோப்புப் படவேயில்லை. அழுக்கை நீர் கொண்டு கழுவவும் இல்லை. வாழ் நாள் முழுவதும் போர்த்துக்கொண்டே கழிந்துவிட்டது. நல்லது கெட்டதை அறியவில்லை. தனக்குள்ளேயே சங்கையை அறிந்து வைத்துக்கொண்டு இந்தப் பொருள் இறுதியை அடைந்து விட்டது. கபீர் சொல்கிறார்: "முயற்சியுடன் கவனித்து இதை வைத்துக்கொள். பிறகு கைக்குக் கிட்டாது".

(மனித சரீரம் பிறகு கிடைக்காது. அதை முயற்சியுடன் காப்பாற்றவேண்டும் என்கிறார் கபீர்.)

## 141

மீண்டும் இந்த ஊருக்கு வரவேண்டியதில்லை. சென்றவர்கள் திரும்பிவரவில்லை. செய்தியும் அனுப்புவதில்லை. தேவர், மனிதர், முனிவர், பீர், ஔலியா, சுரர்கள், கணேசர், பிரும்மா, விஷ்ணு, மகேசர் எல்லோருமே பிறவி எடுத்து மாயை வயப்பட்டுச் சுற்றியவர்களே. யோகி, ஜங்கமர் (சுற்றுகிறவர்) சந்நியாசி, திகம்பரர், தர்வேசர் (ஒரு வகை சாது), குடுமி வைத்தவர், மொட்டையடித்தவர், பண்டித மக்கள்; சொர்க்கம் ரசாதலம், சேஷன் என்றெல்லாம் பேசுகின்றனர். ஞானி குணவான், கெட்டிக்காரன், கவி, அரசன், ஆண்டி, பேரரசன்—ஒருவன் ரஹீம் என்கிறான்; மற்றொருவன் இராமன் என்கிறான்; மற்றொருவன் உபதேசம் புரிகிறான். நாலாவிதமான உருத் தரித்துக் கொண்டு எல்லாரும் பல்வேறு நாடுகளிலும் அலைகின்றனர்.

கபீர் சொல்கிறார் : "நல்ல குருநாதன் உபதேசம் இல்லாமல் ஒருவரும் முடிவான பொருளை அடைகிறதில்லை."

## 142

அந்த நாளைக் கொஞ்சம் மனத்தில் எண்ணிப் பார், அப்பா. என்று "போ, போ" என்று போக நேரிடுமோ அன்று ஒருவரும் உடன் வரமாட்டார்கள். தந்தை தாய் பிள்ளை மனைவி அழுவர், மண்ணுடன் சேர்த்துப் புதைத்துவிடுவர். அந்த மண் உடலைக் கடிக்கும் (அரித்துத் தின்னும்.)

அன்பு நேசம், துக்கம், மனைவி! யார் யாருடைய மனைவி, யார் யாருடைய தாசி? யாருடைய தங்கம்? யாருடைய வெள்ளி? எமன் கட்டி இழுத்துச் செல்வானே, அன்று? அங்கே காட்டில், டேராப் போடவேண்டிவரும்! (அந்த நாளைக் கொஞ்சம் மனத்தில் எண்ணிப் பார்.)

பொதி மாட்டின்மேல் நீ நன்றாகச் சரக்கைச் சுமத்தி ஏற்றிக் கொண்டாய்! வணிகனே! நீ நன்றாய் வாணிபமும் செய்தாய். சூதாடினாய், முதலையும் இழந்தாய். இப்பொழுது போக வேண்டிய ஏற்பாடு தொடங்கிவிட்டது. யார் குருவிடத்தில் அன்பு பூண்டாரோ அவன் அநேகவிதத்தில் சுகம் அடைந்தான். மண்ணில் உடல் சோர்ந்துவிடும். பிறகு ஒரு வரட்டிதான். இறைவனுடைய உண்மைப் பெயர்தான் உடன் வரும்.

## 143

உன்னுடைய தலைவன் (தேவன்) எப்படிப்பட்டவன் என்று நீ அறிய மாட்டாய்! மசூதியின்னுள்ளே முல்லா கூவுகிறாரே, உன் தேவன் செவிடா, என்ன? எறும்பின் காலில் சிலம்பு ஒலித்தாலும் அதையும் சுவாமி கேட்டுக்கொள்வார். பண்டிதர் ஆகி ஆசனம் போட்டு அமர்ந்து நீளமான மாலையை வைத்துக் கொண்டு பெயரை உருப் போடுகிறாய்! ஆனால் உள்ளே வஞ்சம் கத்தரிக்கிறது. அதையும் இறைவன் பார்த்துக்கொள்கிறான்.

உயர்ந்த, (அல்லது) குட்டையான அரண்மனை கட்டுகிறாய். ஆழ்ந்து அமர அடிப்படை போடுகிறாய். போகும் எண்ணமே கிடையாது. இருந்துவிடுவோம் என்று மனம் பால் குடிக்கிறது. சல்லி சல்லியாகக் காசைச் சேர்த்துப் பூமிக்குள் புதைத்து வைக்கிறாய். எதை அடைந்தாக வேண்டுமோ அதை அடைந்தேயாக வேண்டும். பாவி பயந்து பயந்து சாகிறான். கற்புள்ள பெண்ணுக்கு ஒரு முழத்துணியே கிடைக்கிறது; வேசையோ மிகச் சிறப்பாய் உடை அணிகிறாள். எந்த வீட்டில் சாதுவுக்குப் பிச்சை கிடைக்கவில்லையோ அந்த வீட்டில் "பெண் தரகன்" நெய்ப்பண்டமாகச் சாப்பிடுகிறான். வைரம் கிடைத்தால் சோதித்திக்கொள்ளத் தெரிகிறதில்லை. மனிதன் சல்லிக் காசைத் தேடி எடுத்துக்கொள்கிறான்.

கபீர் சொல்கிறார்: ''சகோதர சாதுக்களே, கேளுங்கள். அரி என்றும் ஒரே விதமாகத்தான் இருக்கிறார்.''

## 144

கண்ணாடியில் எதற்கு முகம் பார்த்துக்கொள்கிறாய்? உடலில் தயவு தருமம் ஒன்றுமில்லையே! மரக்கிளையில் குயில் கூவுகிறது; கிளி காட்டில் பேசுகிறது. குடித்தனக்காரனுக்கு வீட்டில்தான் நிம்மதி இருக்கும். ஏழைப் பித்தனுக்குக் காட்டில்தான் நிம்மதி

"கவட்டியை இழுத்துக் கட்டி, எண்ணெய் சொட்டும் மயிர்த்தலையில் பாகை சுற்றி, தெருவுக்குத் தெரு தோழிகளுக்கு இன்பம் தந்து, உடலில் சுவடுகளை ஏற்று, கல்லாலான ஒரு படகையும் செய்துகொண்டு கிணற்றில் இறங்க விரும்புகிறவர்கள் (அமிழ்ந்து அழிய விரும்பியவர்கள்) சண்டையில் எப்படி இறங்க முடியும்?

ஏ, சாதுக்களே, சகோதரர்களே கேளுங்கள்!" என்று கபீர் சொல்கிறார்.

(சம்சாரிகள் செய்கிற ஏற்பாடுகள் போரிட்டுக் கரையேறத் தக்கனவல்ல.)

## 145

என் மனத்தில் அச்சம் ஏற்படுகிறது. வழிப்போக்கனே! எந்தப் பக்கம் போவாய்? (தலைவனுடைய) சந்திரனுடைய பட்டணம்: ஆணே, பெண்ணே! ஆபத்து; மிகப் பெரிய இரண்டு வாசல்கள்; கெட்ட வாசல்கள்! கெட்ட புத்தி என்ற தலைமைக் காவலாளி வாயிற்படியை அடைகிறான். கடினமான தொல்லை ஏற்பட்டுவிட்டது. ஐயம் என்ற ஆழமான நதி பாய்கிறது. நீரின் நேர்மையற்ற ஓட்டம் மிகக் கடுமையாயிருக்கிறது.

ஏ மனிதனே; என்ன இங்கே 'என்னுடையது உன்னுடையது' என்கிற மயக்கத்தில் தூங்குகிறாயே! பகலும் இரவும் இறைவனிடம் அன்பு செலுத்து. அது கடினமான தொன்றில்லை. சிற்றின்ப விருப்பம் மந்திரி; வெகுளி அரசன்; இருபத்லைதந்துக் கணக்கில் திருடர்கள். மேற்குத் திககில் சத்திய புருஷன் ஒருவர் வாழ்கிறார்; அவரைத் துதி, இன்பம் வரும்; உன்னை வழிக்கு அழைத்து வரும். அப்பொழுது தன் பக்கம் திரும்புவாய்! திரும்பி, பின் அடியைப் பிடி. சிதறிப் பறந்த மனத்தைச் சேர்த்துப் பிடி.

கபீர் சொல்கிறார் : "சாதுவே, கேளுங்கள். அப்பொழுது தான் இடத்தை அடைவாய்."

## 146

பித்துக்கொண்டு கோப்பை எடுத்துக் குடி. பெயர் என்ற அமுதரஸத்தின் கோப்பை அது. பிள்ளைப் பருவம் விளையாடிக் கழிந்தது; காளைப் பருவம் பெண்ணின் வயதில் அழிந்தது; கிழப்பருவம் வந்தது. கபம், காற்று (வியாதிகள்) வந்து சூழ்ந்து கொண்டன. படுக்கையில் படுத்து நகர முடியாமல் போகிறது. உந்திக் கமலத்தில் கஸ்தூரி இருக்கிறது. (அதை அறியாமல்) மான் தேடி அலைகிறது. அதைப்போல் எதற்கப்பா வீணில்

தேடி அலைகிறாய்? சற்குரு கிடைக்காமல் இந்தத் தீங்கை அடைந்தாய், இந்த உடலுக்கு வைத்தியர் கிடைக்கமாட்டாரா!

தாய், தந்தை, சகோதரன், பிள்ளை, மனைவி இவர்களுள் யாராலும் உடன் வரமுடியாது. உயிருடன் இருக்கும் வரை குருவின் குணத்தைப் பாடு. சொத்து இளமை எல்லாம் பத்து நாள் வாழ்வு தாம்; அப்பா! எண்பத்து நான்காயிரத்தில் யார் கரையேற விரும்பினாலும் பெண்ணின் ஆசையை விடவேண்டும்.

கபீர் சொல்கிறார் : 'சகோதரரே, சாதுவே கேளுங்கள். நகம் முதல் தலை வரை விஷம் நிரம்பியிருக்கிறதே!'

## 147

இறைவன் பெயரை மனத்தில் கொள். (இல்லை எனில்) வருந்துவாய். பாவி உள்ளம் பேராசைப்படுகிறது. இன்று நாளை அழிந்துவிடும். பேராசைப்பட்டே வாழ்வு அழிந்தது. உடல் பிரமையில் மயங்கி மறைந்துவிடும். எமன் வந்து குடுமியைப் பிடித்து உலுக்கி எறிவானே, அன்று ஏதும் நம்மைத் தாங்கித் தங்கவைத்து விடமுடியாது. நினைவிலும் இருத்தி, இறைவன் பெயரைப் பாடி இனிமையாகப் பேசாத வாயில் அறைதான் விழும். 'தரும இறை' (எமன்) கணக்குக் கேட்பானே! எந்த முகம் கொண்டு அங்கே செல்வாய்? கபீர் சொல்கிறார் : "சகோதரர்களே, சாதுவே கேளுங்கள் : சாதுவினுடைய சேர்க்கையால் கரையேறி விடலாம்!"

## 148

உன் மனதும் என் மனதும் எப்படி ஒன்றாக முடியுமடா? நான் கண்ணால் பார்த்ததைச் சொல்கிறேன், நீ காகிதத்தில் எழுதியிருப்பதைச் சொல்கிறாய். நான் சிக்கல் பிரியப் பேசுகிறேன், நீ சிக்கல் ஏற்படுத்திப் பேசுகிறாய். நான் 'விழித்திரு!' என்று சொல்கிறேன். நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய். நான் சொல்கிறேன். 'நீ மோகம் அறுத்து இரு!' என்று. நீ மோகத்துள் விழுந்து கிடக்கிறாய், யுகம் யுகமாகச் சொல்லிக் களைத்து விட்டேன். சொல்வதை யாரும் கேட்பதில்லை. நீ வேசையைச் சுற்றி எல்லாச் சொத்தையும் தூள் தூளாக்கி அழித்து இழக்கிறாய். சற்குரு தூய்மையான நீர்த் தாரையைப் பாய்ச்சுவார், அதில் உன் உடலைக் கழுவிக் கொள்.

கபீர் சொல்கிறார் : 'சாது சகோதரர்களே, அப்பொழுது தான் அவ்விதம் ஆக முடியும்!'

## 149

அன்பு செய்பவனே, மனத்தில் சிந்தித்துப் பார். காதல் செய்த பிறகு தூங்குவது என்னடா; உலர்ந்ததோ காய்ந்ததோ எல்லாம் தொல்லையின் துண்டுகள் தாமே. அதில் ருசியற்றது என்ன, ருசியுள்ளது என்ன? அடைந்திருந்தால் அடைந்ததைக் கொடுத்துப் பயன் பெறு. அடைந்து அடைந்து இழப்பது எதற்காக? கண்ணில் தூக்கம் அசத்தினால் தலையணை எதற்கு, பாய் எதற்கு? கபீர் சொல்கிறார் : "சகோதர சாதுக்களே, தலை தந்த பிறகு அழுகை எதற்கய்யா?"

## 150

எவனுடைய உள்ளத்தில் (இறைவன்) பெயர் வர வில்லையோ அவன் காசியில் வசித்து என்ன பயன்? கங்கை நீர் அருந்தி என்ன ஆகும்? மனிதன் சடை தாங்கித்தான் என்ன ஆகப்போகிறது? கந்தை கட்டித்தான் என்ன ஆகப்போகிறது? ருத்திரக்காமாலை (கண்டி) தரித்து அல்லது பொட்டு இட்டு என்ன பயன் ஏற்படும்! கபீர் சொல்கிறார் : "சாது சகோதரர் களே! கேளுங்கள், இந்த வாழ்வு வாழ்ந்தது வீண்தான்."

## 151

ஏ முட்டாளே! குருவிடம் அன்பு செய்து கொள். அடிக்கடி என்ன யோசிக்கிறாய்? அக்கரை எப்பொழுது சேரவேண்டி யிருக்கிறதோ அப்பொழுது படகோட்டியுடன் சேர்ந்து இரு. இந்த உலகக் கடலை இறங்கித் தாண்டினால்தான் இந்தச் சம்சாரம் தொலையும். தோற்றத்தைக் காணவிரும்பினால் கண்ணாடியைத் துடைத்து வையுங்கள். கண்ணாடியில் கறை படிந்தால் பிறகு தரிசனம் எப்படிப் பெறமுடியும்? கோட்டையின் மேல் வாழ்த்து வாத்தியங்கள் முழங்கும்போது சென்று பாருங்கள். கோட்டைக்கு நடுவில் எப்பொழுது கூட்டம் இருக் கிறதோ அப்பொழுது அன்னம் (ஆத்மா) தனியாகப் போகிறது.

கபீர் சொல்கிறார் : "மனத்தின் செய்கையைப் பார். அதற்கு நடுவில் கத்தரிப்பு வேலை நடக்கிறது. கத்தரிப்பினால்

முடிச்சு அவிழ்வதில்லை. அப்பொழுது உலகத்தைப் பிடித்துக் கொள்ளையடிக்கின்றனர்.

(மனத்தில் இருக்கும் கெட்ட எண்ணங்கள் ஒழியாத காரணத்தால் உலகை மனிதன் கொள்ளையடிக்க முயலுகிறான்.)

## 152

வண்டே, போடா, போ, தாமரையின் அருகில் போ. உன் பெண் வண்டு மிகவும் வருத்தத்துடன் கூவிக்கொண்டு இருக்கிறது. அது அடிக்கடி வேடிக்கைப் பேச்சுக்கள் பேசுகின்றன. உடல் காட்டில் கிளைகிளையாகப் பிடித்துக்கொண்டு ஆனந்தமடைகிறாய். காட்டில் கிடைத்ததை உண்டு இன்புற்றுக்கொண்டு இருக்கின்றாய். சுகம் ஒன்றும் கிட்டவில்லை. உடலில் நோய்கள் அதிகரித்தன. பூவின் நிறம் நான்கு நாட்கள்தான் தங்கும். அதைப் பார்த்து நன்கு ஏமாறுகிறாய்.

காட்டில் நெருப்புப் பற்றி எரிந்துவிட்டால் அப்பொழுது வண்டு எங்கே ஓடிச் செல்லும்? பழைய மலர், காய்ந்துவிட்டது. வண்டுக்கு மிகவும் பசி ஏற்பட்டுவிட்டது. பறக்க முடியவில்லை. பலமும் இழந்து விட்டது. அப்பொழுது வண்டு தலையைப் பொடித்துக்கொண்டு அழுகிறது. நாலாபக்கமும் முகத்தைத் திருப்பிப் பார்க்கிறது. அப்பொழுது பெண் வண்டு தலையில் சுமந்து ஏற்றிச் செல்கிறது.

கபீர் சொல்கிறார் : "இவை மனத்தின் பாவங்கள். பெயர் இல்லாமல் எல்லாம் எமனின் பிடிக்குள்தான் (அடங்கி விட வேண்டி வரும்). பெண் வண்டு = குரு உபதேசம்.

## 153

மனமே வழிபடு. வாழ்க்கையில் பெயர்தான் விடிவு தரும் ஒரே பொருள். தன் அழகான உடலைப் பார்த்து மறந்து இருக்கிறாய்; கழுகு காடையைப் பாய்ந்து அடிப்பதுபோல் ஆகிவிடும். (எமன் பாய்ந்து அடித்துக்கொண்டு போய் விடுவான்.) இந்த உடலைக் கொண்டு வீண் பெருமை கொள்ளாதே. பக்ஷி பறந்துவிட்டால் கூண்டு போல் ஆகிவிடும். இந்தப் பேருரில் ஒருவரும் இருக்கமாட்டார்கள்; விழித்திரு; துன்பம் அதிகம் ஏற்படாது.

கபீர் சொல்கிறார்: "சாது சகோதரர்களே, கேளுங்கள்: மனிதப் பிறவி மீண்டும் கிடைக்காது."

## 154

இப்படிப்பட்ட ஊரில் எவ்விதம் இருப்பது? நாளும் எழுந்ததும் கெட்ட பேர் ஏற்படுவதைப் பொறுத்துக்கொள்வது தான் எப்படி? ஒரு கிணறு; நீர் எடுப்பவர்கள் ஐந்து பேர். ஒரே கயிறு; இருக்கிறவர்கள் ஒன்பது பெண்கள். கிணறு இடிந்தது; நீர் நாசமாய்ப் போயிற்று. நீர் நிரப்பும் ஐந்து பேரும் அகன்று விட்டனர்.

கபீர் சொல்கிறார்: "இறைவன் திருப்பெயர் இல்லாமல் எல்லாம் அழிவே; தலைமை அதிகாரி அன்று போனார். கூடாரம் கொள்ளை போய்விட்டது."

## 155

மனிதா, மயக்க இரவில் ஏன் தூங்கிக்கொண் டிருக்கிறாய்? விழிக்க மாட்டேன் என்கிறாய்?* நடைக்குக் கிளம்பும் நேரம் நெருங்கிவிட்டது. மயிர் வெளுக்கும்போது முதல் பறை முழங்கு கிறது என்று தெரிந்துகொள். பிறர் பேசுவது காதில் கேட்காத பொழுது இரண்டாவது தடவை. மூன்றாம் முறை: பார்வை தெரியாது. நான்காம் முறையின் பொழுது கட்டளையே வந்து விழுந்துவிட்டது. (கிழப்பருவம் வந்துவிட்டது. சாவுக்கும் ஓலை வந்தாய்விட்டது.) தாய் தந்தை சொன்னதையும் கேட்கவில்லை. அந்தணனிடமும் (குருவிடம்) வீண் பெருமை பாராட்டினாய். தருமத்தின் படகில் ஏற அறியவில்லை. இப்பொழுது எமதருமன் வந்து தெளிவாக்கி விட்டான்.

பட்டணம், ஊர் எங்கும் கூவல் கேட்கிறது. மக்கள் எல்லாம் கலங்குகிறார்கள். பூரணப் பிரம்மமாக ஏற்பாடு நடந்து கொண்டிருக்கும் போதே கடைசியில் பிராணன் வீட்டுக் குள் சென்று ஒளிந்து விடுகிறது. அன்பு நகரில் சந்தை கூடுகிறது. நல்ல பேச்சுக்கள் தான் நிறம் தோய்ப்பவர்கள்.

* சாவு நேரம்

கபீர் சொல்கிறார்: "ஒன்றும் கவைக்கு ஆகாது. மண்ணின் உடல் மண்ணுடன் சேர்ந்துவிடும்."

## 156

ஏ மனமே மயங்கி இராதே. மறந்து இராதே. எமன் ஒரு நாள் வந்துவிடுவான். வாணிபம் செய்ய இந்த உலகிற்கு வந்தாய். முதல் கொண்டு வந்தாய். முதலையும் இழந்தாய். அன்பு நகரத்தின் எல்லையைக் காணாமலே வந்தபடியே போய் விடுவாய். என் அன்பே கேள்; என் நண்பனே கேள். இந்த வாழ்க்கையில் என்னென்ன வாங்கினாய்? தலை, கால் இரண்டுக்கும் சுமை (தளை) ஏற்றிக்கொண்டாய்! மேலே யார் விடுவிப்பார்கள்? அக்கரையில் என் நண்பன் (இறைவன்) நின்று கொண்டிருந்தான். அங்கே சேர அந்தப் பக்கம் கவனமே செலுத்தவில்லை. உடைந்த படகின் மேல் ஏறி உட்கார்ந்தாய், கருத்தற்றவனே, முழுகித்தான் ஆகவேண்டும். கபீர் தாஸர் விளக்கிச் சொல்கிறார்: "கடைசிக் காலத்தில் உனக்கு யார் உதவி? தனித்தே போக வேண்டும். ஒருவரும் உடன் வரப் போவதில்லை. செய்த செய்கைக்குத் தக்க பலனைப் பெறுவாய்."

## 157

படைத்தவனை எண். மனிதப் பிறவி பெற்றிருக்கிறாய். ஏன் விழிப்பின்றி இருக்கிறாய்? இந்த வாய்ப்பு எப்படிக் கிடைக்கும்? மீண்டும் மனிதப் பிறவி கிடைக்காது. பிறகு வருத்தப் படுவாய்? எண்பத்து நான்கு லட்சம் உயிர்த் தொகுதிகளுள் மிகவும் சிறந்தவன்(நீ). அந்த உடல் அடைந்தும் விழிக்கவில்லையானால் அரசன் என்ன, ஆண்டி என்ன?

கருப்பையில் இருக்கும்போது சொன்னாய்: 'நான் உன்னை வழிபடுகிறேன்' என்று. பகலும் இரவும் பெயரை நினைவில் இருத்துவேன், என்னை இந்தத் தொல்லை நிலையில் இருந்து எடுத்துவிடு!' என்றாய். ஒரு மனம், ஒரு சித்தம் கொண்டு அதில் பெயரின் பெருமையை ஏற்றிவைப்பேன். இந்த உடல் இருந்தாலும் சரி, போனாலும் சரி. ஒரு கணம் கூட நான் உன்னை மறக்கமாட்டேன் என்றாய். இவ்வளவு உறுதி கூறினாய். அதனால்தான் ஆண்டவன் உன்னை வெளியேற்றினார். வெளியே வந்தாய். இந்த இடத்தை அடைந்தாய். மாயையின் பிடியில் சிக்குண்டாய். பிறகு அதை எல்லாம் மறந்து

விட்டாய். வயிற்றில் இருந்த கதை மறந்துவிட்டது. இங்கு எண்ணமே வேறாகிவிட்டது.

பன்னிரண்டு ஆண்டுகள் அப்படியே கழிந்தன. ஒன்றும் அறியாத சிறுவனாகக் கழித்தாய். பிறகு இன்ப நுகர்ச்சி மயக்கம் காற்று போல் இந்த உடலில் நுழைந்து நிரம்பியது. அப்பொழுது இளமையில் மதம் கொண்டு தன்னை மறந்தாய். நிழலைப் பார்த்து நடந்தாய். துடிப்பாக வார்த்தைகள் பேசினாய். உடலுக்கு மணம் ஏற்றினாய்: சந்தனம் பூசினாய். புதுப்புது உடைகள் செய்து அணிந்து கொண்டாய். தெருக்களில் சுற்றினாய். பிற பெண்களைக் கண்டு பல்லைக் காட்டினாய்!

கழிந்தது காளைப் பருவம், கிழப்பருவம் வந்து ஏறிக் கொண்டது. நடக்கும்போது தலை ஆட ஆரம்பித்தது. இரண்டு கால்களும் பின்ன ஆரம்பித்தன. கண் மூக்கிலிருந்து நீர் ஒழுக ஆரம்பித்தது. காதுகள் எதையும் கேட்கிறதில்லை. தொண்டையில் சளி வந்து அடைத்துக் கொண்டது. ஓர் உறவு நினைவும் இல்லை. தாய், தந்தை, பையன், மனைவி, யார் யாருடன் ஒட்டுவார்கள்? உடல் மனம் ஈடுபட்டுப் பெயரைப் போற்றுவாய். எல்லாம் நன்மையாகும். இல்லை என்றால் காலன் பிடித்துக்கொள்வான். எமன் வலையில் வீழ்வாய். சற்குரு இல்லாமல் தப்ப முடியாது. நன்றாக இதயத்துடன் எண்ணிப் பார். சற்குருவிடம் அன்பு செய். இந்த உடல் எடுத்த தற்கு நற்பயன் ஏற்படும். முக்திக்கு வழி இதுதான். சாதுக்கள் திருவடியில் மனத்தை வை. பெயரைப் போற்று. அச்சம் நீங்கி இரு. உடலில் துன்பம் பரவாது. கபீர் பாடுகிறார்: ''கிழத் தனம், மரணம் முதலிய தொல்லைகள் ஒழிந்துவிடும்.''

## 158

உன் முட்டையில் திருடன் புகுந்துவிட்டான். வழிப் போக்கனே, ஏனடா தூங்குகிறாய்? ஐந்து, இருபத்தைந்து, மூன்று (தத்துவங்கள்) இவர்கள் திருடர்கள். இவை எல்லாம் ஆரவாரம் செய்கின்றன. விழி; காலை வந்துவிட்டது. வழி அதிகம். பின்னால் ஒரு முயற்சியும் பயன் தராது. உலகக் கடல் (பிறவிப் பெருங்கடல்) என்ற நதி ஓடுகிறது. இறங்கி ஏறாத உயிர் அடித்துக்கொண்டு போகப்படும்.

கபீர் சொல்கிறார்: "சகோதர சாதுவே கேளுங்கள்: விழித் திருந்தே இரவைக் கழித்துக் காலையைக் காணுங்கள்."

## 159

பெயரை நினைக்க வேண்டிய நாளில் ஏன் தூங்குகிறாய் யார் படைத்தாரோ அவர் நினைவே இல்லையே! பிதற்றிக் கொண்டு பிதற்றலைப் பரப்பி விடுகிறாய்! குரு உபதேசம் செய் கிறார். செய்தி தருகிறார். வெளி மாடியில் (சமாதியில், சித்த ஆகாயத்தில்) ஏறி நின்று வாயினால் பாடி வழிபடு. தினந்தோறும் இந்த ஐந்து, இருபத்தைந்துகளின் சண்டைகள் எழும்பிக்கொண்டு தான் இருக்கும். "சுரதி" (சேர்க்கையின் இன்பம்) என்ற என் அழகி கவலையில் ஆழ்ந்திருக்கிறாள்.

கபீர் சொல்கிறார் : "சகோதர சாதுக்களே கேளுங்கள் : வழிபாடு இல்லாமல் உள்ளூர் சூனியமாகவே இருந்துவிடும். (வாழ்வு வெற்றுப் பையாகி விடும்.)"

## 160

தோட்டத்துக்குப் போக வேண்டாம். உன் உடலிலேயே மலர்களின் ஈட்டம் இருக்கிறது. பாத்திகள் தயார் செய்ய வேண்டும். விதைத்து இருக்கவேண்டும். காவல் காத்திடு. கெட்டமதி என்ற காக்கையைப் பார்த்து விரட்டிப் பறக்கவிடு. பிறகு பார். என்ன அழகான திருவிழா என்று! (புலனடக்கம்) என்ற நீர் ஊற்று, மனமாகிற தோட்டக்காரனைத் தூண்டிவிடு. தயை என்கிற செடி வாடாமல் இருக்கப் பொறை என்கிற நீரை ஊற்று. தோட்டத்துக்கு நடுவே பூக்களின் இடையே புதிய ரோஜா மலர் பூத்திருக்கிறது. முத்தி என்கிற மொட்டைக் கொண்டு நல்ல மாலை தயார் செய்து அணிந்துகொள்வேன். எட்டுக் கமலத்திலிருந்து (சக்கரங்களிலிருந்து) பெரிய பெரிய விளையாடல்கள் ஏற்படும்.

கபீர் சொல்கிறார் : "சித்தத்தில் தெளிந்து, வருகை போதலை (பிறப்பிறப்பை) ஒழித்துக்கொள்."

## 161

இறைவன் பெயரை நினைக்கவில்லை எனின் முழுகி விடுவாய். கையை மூடிக்கொண்டு கருப்பையிலிருந்து வந்தாய். கையைப் பரப்பிக்கொண்டு போய்விடுவாய். பனித்துளி முத்துக்கள் (காலை) நேரம் ஆனவுடன் அழிந்து போவதுபோல் மறைந்து விடுவாய். சந்தை விரித்து, வியாபாரம் இல்லாமல் கடைகட்ட நேர்ந்தாற்போல் பிறகு வருந்துவாய்.

கபீர் சொல்கிறார் : 'சாது சகோதரர்களே, 'கேளுங்கள். வியாபாரப் பொருளையும் எடுத்துக்கொண்டு போவீர்கள்!' (கரும முட்டையும் ஒழியாது.)

## 162

ஏ மனமே. யோசித்துச் சுமையை ஏற்றுக்கொள்ளடா! என்ன குதிரை, என்ன பை, என்ன சாமான்கள்? மனம்தான் குதிரை. 'சுரதி'யே பைகள். புண்ணியம் பாவம் என்கிற சாமான்களை நிரப்புகிறீர்கள். விழித்துக்கொண்டிருக்கும்போதே வீட்டு மக்கள் இடுப்புப் பையை இழுத்துக்கொள்கிறார்கள். வாணிபம் செய்வ தென்றால் இங்கேயே செய். மேலே சந்தையும் இல்லை. சரக்கு களைக்கொள்பவனும் இல்லை. தண்ணீர் வேண்டும் என்றால் இங்கே குடித்துக்கொள். மேலே போகப் போக நாடு வறண்டு நீரற்று இருக்கும்.

கபீர் சொல்கிறார் : சாது சகோதரர்களே! கேளுங்கள், "இறைவன் பெயரைக் கொள்ளுங்கள்."

## 163

பித்துக்கொள்ளி மனதே. இறைவன் புகழ்பாடாமல் இருந்தால் துயரடைவாய். ஏழு பிறவிகள் வருத்தப்படுவாய். முதல் பிறவியில் பூதமாவாய். முள்ளின்மேல் நீர் பெறுவாய். குடிக்க முடியாமல் தாகத்துடனே இறந்து விடுவாய். மற்றொரு பிறவி கிளியாக எடுப்பாய், தோட்டத்தில் குடி இருக்க நேரிடும். சிறகு ஒடிந்து கழுகுகள் சுற்ற அரைகுறையாகப் பறந்து உயிரை விட்டுவிடுவாய். குரங்காகப் பிறப்பாய். குச்சிக்கு ஆட்டம் போட நேரிடும். உயர்ந்தவன் தாழ்ந்தவன் யார் எதிரேயும் கைநீட்ட நேரிடும். பிச்சை கிடைக்காது போகும்.

எண்ணெய்ச் செக்காளர் வீட்டில் மாடாகப் பிறப்பாய். கண்களில் முடி விழுந்து மறைக்கும். ஐம்பது மைல் சுற்றுவாய். ஆனால் வெளியே போக முடியாது. ஐந்தாம் பிறவி ஒட்டகமாக அடைவாய். நிறுத்தாமலே சுமை ஏற்றுவார்கள்; சுமக்க நேரிடும். உட்கார்ந்தால் எழமுடியாது. தேய்ந்து ஒடிந்து சாவாய். வண்ணான் வீட்டுக் கழுதையாகப் பிறப்பாய். அறுத்த புல்கூடக் கிடைக்காது. அவன் சுமையையும் ஏற்றத் தானும் உட்காருவான். தூக்கிக்கொண்டு துறையில் சேர்ப்பாய். பறவைகளுள் காகமாகப்

பிறப்பாய். கரா, கரா என்று கரைவாய் பறந்து சென்று அழுக்கு. களின்மேல் அமர்ந்து அலகு நிரம்பக் கொத்தி எடுப்பாய். உண்மைத் திருப்பெயரைக் கூவமாட்டாய். பின்னால் மனதுக் குள்ளே இரங்கி வருந்துவாய். கபீர் சொல்கிறார் : ''சாது சகோதரா, கேள்! நரக இருளை அடைவாய்.''

## 164

சாதுவே, இந்த உடல் தம்பூரா (வின் கட்டை.) கம்பியை முறுக்கினால் 'நொரநொர'க்கிறது. இறைவனின் இசை எழுகிறது. கம்பி முறிந்து ஆணிகளும் சிதறிவிட்டால் பிறகு தூள் தூளாகி விடும். இந்த உடலை எண்ணிப் பெருமை கொள்ளாதே. தம்பூரா வின் அன்னம் பறந்து விட்டது.

கபீர் சொல்கிறார் : "சாது சகோதரர்களே, கேளுங்கள்! வழி செல்ல முடியாத வழி. சூரன்தான் போக முடியும்."

## 165

வானத்தில் மேகம் உறுமுகிறது. சாதுவே, ஆகாயத்தில் மேகம் கர்ஜிக்கிறது. கிழக்குத் திக்கிலிருந்து மேகம் எழுந்தது. 'ரிம்ஜிம்' என்று மழை பொழிகிறது. அவரவர்கள் வரப்பைக் கோலிக்கொள்ளுங்கள். நீர் பாய்ந்து ஓடிவிடும். மனது எருது. "சுரதி"யே (யோக இன்பமே) கலப்பை ஓட்டுபவன். சத்தமில் லாமல் வயலை உழுது சீர் செய். சந்தேகம் என்ற அருகம் புல்லைப் பிடுங்கி வெளியே எறி. பெயர் விதையை விதை. யோகம், யுக்தி எல்லாம் செய்து மிருகங்கள் வந்து விதையை மேய்ந்து விடாமல் காவல் காத்துவா.

கதிர்களை அறுத்துக் கசக்கி வீட்டுக்குள் கொண்டு வருகி றானே அவன் தான் நல்ல குடியானவன். ஐந்து தோழிகள் சேர்ந்து சமையல் செய்வார்கள். ஒருத்திக்கு ஒருத்தி சளைத்தவள் அல்ல. சிறந்தவள். இரண்டு தட்டிலும் சமமாக உணவு பரிமாறு வார்கள். முனி ஞானி இருவரும் சாப்பிடுவார்கள்.

கபீர் சொல்கிறார் : "சாது சகோதரர்களே, இந்தப் பதவி தான் நிர்வாணம். இந்த நிலையின் அறிவு யாருக்கு உண்டோ அவன்தான் விஞ்ஞானி. (வேதாந்தத்தில் விஞ்ஞானி) பரம் பொருளான ஆத்மப் பொருளாகும் நிலையை அறிந்து உணர் பவனாவான்."

## சங்கோசமும் சிட்சையும் (கூச்சமும் அறிவுரையும்)

### 166

தாய் வீட்டிலேயே பாவாடையில் கறை ஏற்றிக்கொண்டு வந்துவிட்டாய். நிறம் கூட்டியவன் செய்த மர்மம் தெளியவில்லை. இங்கே வண்ணானும் கிடைக்கவில்லை. யார் அதை(க் கறை நீக்கிச்) சுத்தம் செய்ய முடியும்? உடல் பானை (வண்ணான் வெள்ளாவி வைக்க உபயோகிப்பது.), ஞானம்தான் உவர் மண். இந்த ஊரில் சவர்க்காரம் (சோப்பு) மிகவும் அதிக விலையில் விற்கிறது. அதைக் கட்டிப் போர்த்துக்கொண்டு மாமியார் வீட்டுக்கு வந்தேன். ஊர் மக்கள் அசடு என்கிறார்கள்.

கபீர் சொல்கிறார் : "சாது சகோதரனே! சற்குரு இல்லாமல் ஒன்றும் சரிவராது."

(தாய் வீடு=பிறவி, மாமியார் வீடு—யோக, பக்தி வாழ்வு.)

### 167

அப்பா, என் உடையில் (பாவாடையில்) கறை பட்டுவிட்டது. ஐந்து தத்துவங்களாலான பாவாடை அது. பதினாறு தத்துவங்கள் கட்டி மனத்துடன் சேர்ந்தது. இந்த உடை என் தாய் வீட்டிலிருந்தே வந்தது. மாமனார் வீட்டில் மனசு அதை இழந்துவிட்டது. நன்றாய்த் தேய்த்துத் தேய்த்துத் துவைத்தாலும் கறை போவதில்லை. ஞானமாகிற சவர்க்காரத்தை (சோப்பை)க் காதலன் கொண்டு வந்தான். என்று இறைவன் தன்னவளாக ஆக்கிக்கொண்டானோ அன்றுதான் இந்தக் கறை நீங்கும்.

பாவாடை=உடல்; கறை-பிறவியில் ஏற்பட்ட வாசனைகள்; மாமனார் வீடு-யோகபக்தி வாழ்வு; காதலன்-குரு அல்லது இறைவன். கறை நீங்குதல் - உடல் சுத்தமாகிப் பிறவி நீங்குதல்.

### 168

காதலா, இருப்பிடம் மிகவும் உயர்ந்த மாடியடா. உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். உயர்ந்த கட்டடம்; ஓரமெல்லாம் மஞ்சள்; பெயரின் கயிறு கட்டப்பட்டிருக்கிறது. சந்திரனும் சூரிய

னும் ஒளி தருகின்றனர். அங்கே வந்து நடுவில் வழி மறந்து விட்டது. ஐந்து, இருபத்தைந்து, மூன்று இவை சேர்ந்து வீடு ஆயிற்று. மனம் முதலாளியாயிற்று. கணக்கு எழுதுகிறவர் 'கொத்தவாலாக' இருக்கிறார். ஞானத்தின் கடை நாலாபக்கமும் விரித்திருக்கிறது. எட்டுத் தட்டுகள் பத்து வாயில்கள் அமைந்திருக்கின்றன. ஒன்பது வாயில்களில் கதவுகள் அமைந்துள்ளன.

பலகணி அருகில் உட்கார்ந்துகொண்டு அந்தச் 'சிவப்பி' மேலே குடிசையை எட்டித் தன் பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கிறாள்.

கபீர் சொல்கிறார்: "சாதுவே, சகோதரரே கேளுங்கள். குருவின் திருவடித் தாமரைகளுக்கு நாம் அடிமை. சாதுவும் பெரியவர்களும் சேர்ந்து பேரம் செய்கிறார்கள். (ஊதியம் கொள்கிறார்கள்) மூர்க்கர்கள் உண்மை அறியாதவர்கள் வருந்துகிறார்கள்."

[யோகக் கிரியை கூறப்படுகிறது. ஒன்பது துவாரத்தையும் அடைத்துக் குண்டலினி சக்தியை மேலே எழுப்பி எட்டுத் தட்டுகளையும் தாண்டி பிரம்மரந்திரத்தை அடைவித்தால் 'சகஜ சமாதி' நிலையை அடைய முடியும்.]

## 169

இரத்தினத்தை அடைய முயற்சி செய். அன்பின் தத்துவத்தைக் கைக்கொள். சற்குரு தந்த அமுதப் பெயரை யுக்தியுடன் வைத்துக் கொள்ளடா. பாபா, வீட்டிலிரு. முதலாளி என்று பெருமை பெறு. சுவாமி வீட்டில் கெட்டிக்காரனாகவும் விழித்தும் இருக்கிறான். வீடு உன்னுடையது, விழித்துக் கொள். நான் (முறம் வைத்து) விளையாடி அசட்டுத்தனமாக நேரம் கழித்துக் கொண்டிருந்தேன். அழைத்துச் செல்பவள் திடீர் என்று வாய் பேசாது வந்தாள். தலையை வாரி அழைத்துக்கொண்டு சென்றாள். இதுவோ இருட்டு இரவு. உடை அப்படியும் இப்படியும் இருக்க, கையில் தலை வைத்துக் காலை நீட்டிப் படுத்து விட்டேன். பொறுக்கிப் பொறுக்கி மொட்டுக்களில் படுக்கை விரித்தேன். தலைவன் இல்லாமல் இரவும் பகலும் பெண் எப்படி எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டிருப்பாள்? குளம் வறண்டது. பூக்கள் வாடி விட்டன. வழியில் அன்னம் தனியாகப் பறக்கிறது, ஒருவரும் பார்க்கவில்லை. இனி பெண் எதற்கு இங்கே மனம் ஒடிய உட்கார்ந்து முற்றத்தைத் தேடிப் பார்த்துக்கொண் டிருப்பாள்?

கபீர்தாசர் இதைத்தான் பாடுகிறார்: "குணம் குறியற்று இப்பொழுது அங்கே சென்றால் பிறகு திரும்பி வர மாட்டேனடா?"

## 170

என்ன எடுத்துக்கொண்டு மாமனார் வீடு வருவேன்? கிராமத்து மக்கள் கேட்கத் தொடங்கும்போது என்ன சொல்வேன்? முட்டாக்கை விலக்கி என்னைப் பார்க்கும்பொழுது நான் மிகவும் வெட்கப்படுவேன்.

கபீர் சொல்கிறார்: "சாது சகோதரரே, கேளுங்கள்! பிறகு மாமனார் கிடைக்கமாட்டார். (சோதனைக்குச் சீக்கிரம் தயார் செய்துகொள்.)

## 171

என் இறைவன் நாம் போக முடியாத ஊரில் வசிக்கிறார். எட்டுக் கிணறுகள், ஒன்பது குளங்கள், நீர் நிரப்புபவர்கள் பதினாறு பேர். குடம் நிரம்பியதும் சிந்திவிட்டது. மங்கை மனம் இடிந்து நின்று விட்டாள். நான்கு சிறிய சந்தனத் தடிகள். பல்லக் குத் தூக்குகிறவர்கள் நான்கு சிறியவர்கள். அங்கே நமக்கென்று ஒருவரும் இல்லையே! அந்த ஊரில் சென்று இறங்கிவிட்டேன். இறைவனுடைய அரண்மனை மிகவும் உயர்ந்தது. உயர்வு தாழ்வு கொண்ட கடை விரிக்கப்பட்டிருக்கிறது. பாவம், புண்ணியம், இரண்டு பணியாட்கள் (வணிகர்கள்) இருக்கிறார்கள். வைரமும் சிவப்புக் கற்களும் நிரம்ப இருக்கின்றன.

கபீர் சொல்கிறார்: "சுவாமி கேளுங்கள்! இதுதான் என்னுடைய நாடு. சென்றவர் மீண்டும் வருவதில்லை. யார் வந்து செய்தி தருவார்கள்?"

## 172

எந்தச் சாயம் தோய்ப்பவன் என் சுன்னடிக்குச் (புடைவைக்கு) சாயம் தோய்த்தான்? ஐந்து தத்துவங்களாலான புடைவை. அதைக் கட்டிக்கொண்டு மிகவும் அழகியாகத் தோற்றமளிக்கிறேன். 'தக்ஷி' சுற்றிக் காமத்தின் நூல் தயாராயிற்று. கழுத்துக்கு நடுவில் மாலை. கைக்கு நடுவில் மோதிரம். பதினாறு

வகை சிங்காரம். முப்பத்திரண்டு வகை நகைகள். அன்பா அன்பா என்று கூப்பிட்டுக்கொண்டு அன்பனுடன் சுற்றினேன்.

கபீர் சொல்கிறார்: "சகோதர சாதுவே கேளுங்கள். சத்சங்கம் (நல்லோர் சேர்க்கை) இல்லாமல் எப்படிச் சீரடைய முடியும்? (தக்ளி: நூல் நூற்கும் கருவி)"

## 173

இந்தக் கண்கள் மயக்கம் கொள்கின்றன. காதலா, படுக்கைக்கு வா. தூணைப் பிடித்துக்கொண்டு இந்த வீட்டில் சுற்றுகிறேன். இனிமையாகப் பேசுகிறேன். அன்பன் இல்லாமல் மெத்தையில் பிரித்து வைத்த பூ வாடுகிறது; வா, மெதுவாக அடி வைத்துப் படுக்கைக்கு வா. நாத்தனாரும் பெரிய மைத்துனன் மனைவியும் விழித்துக்கொண்டு விடுவார்கள்.

கபீர் சொல்கிறார்: "சாது சகோதரர்களே, கேளுங்கள்! உலகத்துக்குப் பயன்படுவதை எல்லாம் விட்டுவிட்டேன்."

## 174

அன்புப் பெண்ணே, விழித்துக்கொள். இப்பொழுது என்ன தூக்கம்! இரவுதான் கழிந்துவிட்டது. பகலையும் தூக்கத்தில் ஏன் கழிக்கிறாய்? விழிப்புடன் இருந்தவர்களே மாணிக்கம் பெற்றனர். அசடு, பித்துக் கொள்ளி, தூங்கித் தூங்கி எல்லாவற்றையும் இழந்தாய். உன் அன்பன் கெட்டிக்காரன். நீ முட்டாள் பெண். ஒரு பொழுதும் காதலன் படுக்கையை விரித்துத் தயார் செய்ததில்லை. நீ பித்துக்கொள்ளி. அசட்டுத்தனம் செய்தாய்! இளமை அழகுற நிரம்பி வந்தது. தன் காதலனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. விழித்துப் பார். படுக்கையில் உன் காதலன் இல்லை. உன்னை விட்டுவிட்டு அதிகாலையிலேயே எழுந்து போய்விட்டார்.

கபீர் சொல்கிறார். "சொல்லம்பு எவன் இதயத்தில் தைத்ததோ அவன் தான் எடுத்த வேலையில் விழித்திருப்பான். (கவனமாயிருப்பான்)"

## 175

கூடல் நாள் வந்தது, மனம் உல்லாசம் அடைகிறது. ஐந்து கரைகள் உள்ள (புஷ்கரணி) புண்ணிய நீர், அதில் பத்து வாயில்

கள். ஐந்து தோழிகள் எதிரிகளாய் விட்டார்கள். எப்படி இறங்கிக் கரையேறுவது? நான்கு சிறிய சந்தனப் பல்லாக்குகள்; நான்கு பேர் சிறியவர்களாகத் தூக்குகிறவர்கள். நடுக் காட்டில் பல்லக்கு இறங்கிற்று. அங்கே நம்முடையவர் ஒருவரும் இல்லை.

ஏ பல்லக்குத் தூக்கிகளே, உங்கள் காலில் விழுகிறேன். கண நேரம் தூக்குங்கள் பல்லக்கை. தோழிகள் எல்லாம் சேருவோம். பரிவாரங்கள் முழுவதும் சேரட்டும். சாதுக்களே! எண்ணிப் பாருங்கள். கபீர் சாயப்பு நிர்க்குணமாக நின்று பாடுகிறார்,* (நரமோ, கரமோ) நன்றாய் விற்றாலும் சரி, இல்லை என்றாலும் சரி, போணி செய். மேலே சந்தையும் கிடையாது, கடைத் தெருவும் கிடையாது. (நான்கு - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.)

## 176

பிறந்த வீட்டில் இரண்டு நான்கு நாள் விளையாடிக்கொள். முதலில் அனுப்ப மூன்று பேர் வந்தனர். ஒன்பது பிராமணர்கள். முறையும் வந்தது. அப்பா உன் காலில் விழுகிறேன். இப்பொழுது அனுப்புவதை நிறுத்திவிடு. இரண்டாவது முறை, தானே வந்து விட்டார். பல்லக்கையும் எடுத்துக்கொண்டு, தூக்குகிறவர் களுடன் கூட கையைப் பிடித்துப் பல்லக்கில் உட்கார வைத்து விட்டார். ஒருவரும் ஒரு வார்த்தை பேசவில்லை. பல்லக்கை எடுத்துக்கொண்டு வந்து காட்டுக்கு நடுவில் இறக்கிவிட்டார். அங்கே நமக்கு ஒருவருமில்லை.

கபீர் சொல்கிறார்: "ஏ சாது சகோதரர்களே, கேளுங்கள்! ஒரு வீடு; அதற்குப் பத்து வாசல்கள் இருக்கின்றன.

## 177

(டோலியில்) பல்லக்கில் ஏறிக்கொண்டு மங்கை போகிறாள். தோழிகள் எல்லோரும் சொல்லிக் கொள்ளுங்கள் - நான்கு நாள் சேர்க்கை; பிறகு கடைசியில் தனித்தான். பத்து நாள் தங்கி வீட்டில் ஆட்டம் போடலாம். தன் மாமனாரை ஞாபகம் வைத் துக் கொள்; கையைப் பிடித்துக் காதலன் அழைத்துப் போனால்

---

* நரம் - மெதுவாக
கரம் - சூடாக - விரைவாக.

ஒரு தடங்கலும் சொல்லாதே. ஒரு இருட்டு அறை. வேறு விளக்கும் ஏற்றப்படாது. துணை, கூட்டு ஒருவரும் இல்லாத அந்த வீட்டில் இறக்கிவிடுவான். ஒரு இருட்டுக் கிணறு. இரண்டாவது கயிறும் அறுந்திருக்கிறது. நம் கண்கள் குடம் உடைந்ததுபோல் நீரை வழியச் செய்கின்றன.

கபீர்தாஸர் இவ்விதம் சொல்கிறார்: "உலகில் இருக்க வேண்டாம். நம் கூட்டாளிகள் எல்லாம் போய்விட்டனர். நாமும் போக வேண்டியதுதான்."

## 178

தோழி, சுவாமியுடன் சேர முயற்சி செய். பொம்மை, மரப்பாச்சி, முறம், சல்லடை எல்லாவற்றையும் விட்டுவிடு. தேவதைகள் பிதிரர், பூமி பவானி, எண்பத்துநாலு லட்சம் வகை உயிர்த் தொகுதிகட்கும் போக்கு வழி இதுதான். உயர்ந்த அரண்மனை; விசித்திரமான நிறம்; சுவாமியும் விநோதமகன். அங்கே மலர்ப் படுக்கை விரிக்கப்பட்டிருக்கிறது. உடல் மனம் பொருள் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய். 'சுரதி நிலையை' ஏற்றுக்கொள். அன்பனுடைய காலில் விழு.

கபீர் சொல்கிறார் : "அன்னமே, பயப்படாதே. பூட்டைத் திறப்பதற்குத் திறவுகோல் காட்டித் தருகிறேன்."

## பொய் நடத்தை (மித்யாசாரம்)

## 179

ஏ தர்வேசனே! (முஸல்மான் சாது) கொஞ்சம் அரசவையின் செய்தியைப் பற்றிச் சொல். ஐயா, சக்கரவர்த்தியினுடைய தோற்றம் எப்படி? எப்படிப் போகலாம், எங்கே தங்கலாம், எந்தச் சுரதிக்குச் சலாம் போடலாம்? புரியாத நான் உன்னை முசல்மான் என்று கேட்டுக்கொள்கிறேன். சிவந்தும் மஞ்சளானது மான பாவு ஊடு (துணி) அணிந்துகொள்கிறாய். காஜி, நீ உன் வேலையை எப்படிச் செய்கிறாய்? வீடு வீடாய் அப்படியே எப்படிச் செய்விக்கிறாய்! ஆடு கோழி (அடி) என்று யார் சொன்னவர்? யார் உத்தரவு பெற்று நீ கத்தி எடுத்து அறுத்தாய்? பிறர் வருத்தம் (வலி) தெரியாத நீ 'பீர்' (சொற்பொருள், வருத்தம், வலி, துயரம் : முஸல்மான் சாது) என்று அழைக்கப்

படுகிறாய். 'பைதா' (சாஸ்திர பாடங்கள்) படித்துப் படித்து உலகத்துக்குச் சொல்லி விளக்கினாய். தான் சையது என்று பெயர் பெறுகிறாய்! தான் சொல்வதை உலகம் ஏற்க வேண்டும் என்கிறாய். பகல் முழுவதும் விரதம் இருக்கிறாய். இரவில் பசுவைக் கொல்கிறாய்! இது கொலையல்லவா? இப்படிச் செய்யும் சேவையினால் கடவுள் எப்படி மகிழ்ச்சியடைவார்?

## 180

இப்படிப்பட்ட யோகம் நான் பார்த்ததில்லை அப்பா. தெரியாத்தனத்தில் ஏன் பெருமை கொண்டு சுற்றுகிறாய்? மகாதேவ் சம்பிரதாயம் நடத்துகிறார். பெரிய "மஹந்த்" (மடாதிபதி) என்று பெருமையுடன் அழைக்கப்படுகிறார். சந்தை வீதி எல்லாம் கள்ளை கொண்டு வருகிறார். அரைகுறை சித்து, மாலையில் ஆசை பிடித்து அலைகிறார். *'தத்தர்' எப்பொழுது கோட்டையை உடைத்தார்? 'சுகதேவர்' என்று துப்பாக்கிகள் சேர்த்தார்? நாரதர் எப்பொழுது துப்பாக்கி செலுத்தினார்? வியாச தேவர் எப்பொழுது சண்டைக்குத் துந்துபி ஊதினார்? புத்திக்கட்டைகள் சண்டையிடுகிறார்கள். அம்புறாத்தூணிகள் தாங்கி வருகிற இவர்கள் அதிதிகளா? வைராகி என்று பெயர்; மனத்தில் பேராசை குடிகொண்டிருக்கிறது. தங்கத்தை உடுத்து உடைகளையே வெட்கவைத்து விடுகிறார்கள். குதிரைகள் சேர்த்து வைத்துக்கொள்கிறார்கள். கிராமம் கிடைத்தால் அதிகாரிகள்போல் (வரி) வாங்கப் போகிறார்கள். சனகர் முதலிய ரிஷிகளுக்கு அருகில் அழகிய பெண்கள் அணியுறுவதில்லை. (ஆனால் இந்த நவீன இருடிகள் விஷயத்திலோ!) கைகள் கரிப்பானைகள்: "எவ்வளவு நாளாகச் சேர்த்த கரி! "(மடாதிபதிகள் வழி மாறியதைக் கண்டிக்கிறார் கபீர்.)

## 181

துன்பம் இன்பம் இரண்டையும் ஒன்றாகப் பாவிக்கிறார்களாம் (இந்த வேதாந்திகள்). இந்திரன்கூட அவர்கள் பெருமையை உணர முடியாது. சடையைச் சேர்த்து (கேவி என்கிற) மாலையைக் கட்டிக்கொள்கிறார்கள். யோகம் யுக்தியின் கர்வம் இரண்டு மடங்கு. ஆசனத்தில் (தியானம் செய்யும்

---

*தத்தர்—தத்தாத்திரேயர்—முதல்குரு

போது மனம்) பறந்தால் என்ன, பெருமையோ? காகம் கழுகு கூடத்தான் வட்டமிடுகின்றன. சுவர்க்கம் எப்படியோ அப்படியே பெண்ணும்!

அரசு எல்லாவற்றையும் வெண்மையாக எண்ணுகிறார்கள். நகரத்தைச் சந்தனம்போல் எண்ணுகிறார்கள். சிறுவன்போலவே வயதான பிறகும் வாழ்கிறார்கள். அல்வாவையும் கிராம்பையும் ஒரே மாதிரி எண்ணுகிறார்கள். கற்கண்டை விட்டுவிட்டுச் சாம்பலைத் தின்கிறார்கள். இந்த எண்ணத்தில்தானே புத்தி பலம், சித்தம் எல்லாம் பாய்ந்து அடித்துப் போகப்பட்டன. இரண்டும் சேர்ந்து ஒன்றாகி விட்ட பிறகு நான் என்ன நன்மையைப் பற்றிப் பேசமுடியும்? (முழுவதும் நையாண்டியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சுவர்க்கமும் பெண்ணும் ஒன்றே என்ற கருத்தில் தொனிக்கும் பரிகாசம் சிறிச் சிரிப்பதைக் காணலாம். (சிற்றின்பமே பேரின்பமா?)

## 182

சாதுக்களே, பாருங்கள். உலகம் பித்துக்கொண்டிருக்கிறது. உண்மையைச் சொன்னால் அடிக்க வருகிறது. பொய்யை உலகம் நம்புகிறது. நியமம் செய்கிறவர்கள், தர்மம் செய்கிறவர்கள் எல்லாரையும் பார்த்தேன். காலையில் நீராடுகிறார்கள். ஆன்மாவைக் கொன்று கல்லைப் பூசை செய்கிறார்கள். அவர்களிடத்தில் கொஞ்சம்கூட ஞானம் கிடையாது. அநேக பீர்கள், ஒளலியாக்களைப் பார்த்தேன். கிதாப், குரான் எல்லாம் படிக்கிறார்கள். அவர்கள் சீடருக்கு என்ன வழி காட்டுவார்கள்? அவர்களிடத்தில் ஞானம் எங்கே இருக்கிறது? ஆசனம் போட்டு அமர்க்களமாக அமருகிறார்கள். அவர்களுக்குத் தான் எவ்வளவு பெருமை? உலோகம், கல், எல்லாவற்றையும் பூசிக்கிறார்கள். தீர்த்தத்துக்குப் போய்வருகிற பெருமையில் தன்னையும் மறக்கிறார்கள். மாலை அணிகிறது என்ன? குல்லாய் போடுகிறது என்ன? நெற்றியில் பொட்டு; உடலில் "கோபி"; சாக்கீ சப்தம் (தேவாரம் போன்ற பக்திப் பாடல்கள்) பாடுவதில் தன்னை மறந்த ஒரே ஆட்டம். ஆன்மாவைப்பற்றி மட்டும் ஒன்றும் அறியமாட்டார்கள். ஹிந்துக்கள் சொல்வார்கள்: 'எனக்கு இராமர் வேண்டியவர்'; முஸ்லிம்கள், 'எனக்கு ரஹீம் வேண்டியவர்' என்பார்கள். இருவருக்கொருவர் சண்டையிட்டுச் சாகிறார்கள். உண்மையை மட்டும் ஒருவரும் அறிகிறதில்லை. வீட்டுக்கு வீடு மந்திரம் சொல்லித் திரிகின்றனர். மகிமையில்

கர்வம் அதிகம் கொண்டுள்ளனர். குருவுடன் சேர்ந்து சிடர்களும் ஆழ முழுகுகின்றனர். கடைசிக் காலத்தில் வருந்துகின்றார்கள்.

கபீர் சொல்லுகிறார்: ''ஏ சந்தர்களே கேளுங்கள். இவை எல்லாம் எல்லாரையும் பிரமையில் ஆழ்த்தும் விதமே. எவ்வளவு சொல்கிறேன்! சொல்வதைக் கேட்கிறதில்லை. தங்களுக்குத் தாங்களே அடங்குகிறார்கள். (நினைத்தபடி செய்கிறார்கள்.)''

## 183

சந்தர்களே, நாம் இரு வழியையும் பார்த்து விட்டோம். இந்துவும் துருக்கர்களும் நாவடக்கத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எல்லோருக்கும் ருசியில் பிடிப்பு மிகுந்திருக்கிறது. இந்துக்கள் ஏகாதசி விரதம் காக்கிறார்கள்: பாலும் பட்சணமும் சாப்பிட்டு அன்னத்தை விடுகிறார்கள். மனம் மட்டும் கட்டுப்படுகிறதில்லை. குடும்பத்தார் எல்லாருடனும் "பாரணை" செய்கிறார்கள். துருக்கர்கள் "ரோஜா" (சாப்பிடாத விரதம்) நமாசு செய்கிறார்கள். 'பிஸ்மில்லா' என்று காலையில் "பாங்கு" கூவுகிறார்கள். மாலையில் சேவலைக் கொல்லுகிறார்கள். அவர்களுக்குச் சுவர்க்கம் எங்கிருந்து கிடைக்கும்?

ஹிந்துக்கள் தயைக்காகவும் துருக்கர்கள் 'மேஹர்' என்றும் இருவருமே உடலையே தியாகம் செய்யத் தயார்! அவர்கள் முசல்மான் சாஸ்திரப்படி சாப்பிட வெட்டப்படும் மிருகத்தை ஹலால் என்று சொல்கிறார்கள். இவர்கள் ஒரே வெட்டில் தீர்க்கிறார்கள். இரண்டு சாரார் வீட்டிலும் நெருப்புப் பற்றிக் கொண்டு விட்டது. (இரண்டும் அழிவடைந்தது.) சற்குரு சொல்லியிருப்பது: "இந்து, துருக்கர் இரண்டு பேரும் ஒன்றே தான்."

கபீர் சொல்கிறார்: "ஏ சந்தர்களே, கேளுங்கள்! ராமன், குதா" என்று சொல்லப்படமாட்டார். (உலகினர் அறியாமை அது.) ஹலால் = மந்திரம் செபித்துக்கொண்டு மெல்ல மெல்ல வெட்டுதல்.

## 184

இராமனைப் பற்றிப் பாடி மற்றவர்களுக்கு விளக்கம் தருவார்கள். ஆனால் அரியை அறியாமல் கலக்கத்துடன் திரிவர். யாருடைய வாய் வேதத்தை, காயத்திரியை உச்சரிக்குமோ, யாருடைய உபதேசம் பிறவிப் பெருங்கடலைத் தாண்ட வைக்குமோ, யாருடைய காலை ஞாலம் எழுந்து விழுந்து கட்டிக் கொள்ளுமோ அந்தப் பிராமணன் உயிரைக் கொல்கிறான்! நினைத்த வீட்டில், உயர்ந்தவன் தாழ்ந்தவன் இல்லாமல் சாப்பிட்டுக் கீழ்த்தரமான அருவெறுக்கத்தக்க செயல்கள் புரிந்து வயிற்றை நிரப்புகிறான். கிரஹணம், அமாவாசை அன்று விழுந்து முழுகுகிறான். கையில் விளக்கை வைத்துக்கொண்டு கிணற்றில் விழுகிறான். (அவன் செயல் அப்படி இருக்கிறது). ஏகாதசி விரதம் என்ன என்று தெரியாது. பூதம், பிரேதம் எல்லாவற்றையும் இதயத்தில் ஏற்றி வைத்துக்கொள்கிறான்! கர்ப்பூரத்தை விட்டு முடிச்சில் நஞ்சைக் கட்டி கொண்டு ஞானத்தை இழந்து மகிழ்ச்சியுடன் திரிகிறான். சாது குன்றுதலை அடைகிறான்: திருடன் வளர்கிறான். சாது மக்களுக்கு வஞ்சனை புரிகிறான்.

கபீர் சொல்கிறார்: "இப்படிப் பேச்சில் வஞ்சனை செய்கிறானே அவன் நரகத்தில் விழுகிறான்." (யார் உண்மைச் சாது என்று புரிகிறதில்லை.)

## 185

இராமனிடத்தில் மனம் ஈடுபட்டு மகிழவில்லையே? தண்டம் எதற்குத் தாங்குகிறாய்? இறந்துவிட்டால், பாவி, என்ன செய்வாய்? ஒருவர் தீர்த்த யாத்திரை செய்கிறார். ஒருவர் மயிரை] மொட்டையடித்துக் கொள்கிறார். மந்திர உபதேசம் என்பது வெறும் பொய், சூது, பிரமை, வித்தை வேதம் எல்லாம் படித்துவிட்டு அகங்காரம் வேறு கடைசிக் காலத்தில் வாயில் மண்ணை எறிந்து கொள்கிறார். துயரப்பட்டவை, சுகப் பட்டவை எல்லாக் குடும்பங்களும் வாழ்கின்றன. சாவுக் காலத்தில் துயரம் அடைகின்றன.

கபீர் சொல்கிறார்: "இந்தக் கலிகாலம் பொல்லாதது. யார் இருக்கிறானோ அவனுக்கு நஷ்டம் தான். (தண்டம் = துறவிகள் தாங்கும் கோல்.)"

## 186

அரி இல்லாமல் மயக்கம் தான். குரு இல்லாமல் அழுக்குத் தான். எங்கெங்குச் சென்றாலும் தன்மையை ஒழிக்கவேண்டும். அந்த நிலையில் தான் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன.

யோகி சொல்கிறான்: 'யோகம் தான் நல்லது; இரண் டாவது இல்லை. இரண்டாவது வேறு ஒன்றும் இல்லை'. குடுமி வைத்துக்கொள்கிறான். மொட்டை அடித்துக் கொள்கிறான்: அவனுக்கு ஞானம் எங்கே கிடைக்கிறது? ஞானி, குணவான், சூரன், கவி, வள்ளல் எல்லோரும் தாம் தாம் பெரியவர் என்கின்றனர். எங்கே உற்பத்தியோ, அங்கே லயமாகிற பொழுது தான் எல்லோரும் விடுதலை அடைகிறார்கள். இடது பக்கம், வலது பக்கம் அங்கு இங்கு போவதையெல்லாம் விடு. தன் கையினாலேயே அரியினுடைய கால்களைப் பிடித்துக்கொள்.

கபீர் சொல்கிறார்: "ஊமை வெல்லம் சாப்பிட்டான். அவனிடம் கேட்டால் என்ன சொல்வான்?

## 187

மனித ஊன் எப்படி இருக்கிறதோ அப்படியேதான் !மிருகத் தினுடைய ஊனும் இருக்கிறது. குருதியின் சாரம் எல்லாம் ஒன்றுதான். ஐயா, விலங்கின் ஊனை எல்லோரும் சாப்பிடு கிறார்கள். மனித ஊனை உண்பதில்லை. நரி சாப்பிடும். பிரமன் என்கிற குயவன் பூமியை நிரப்பினான். பிறந்து ஏன் அழிந்து போகிறீர், ஐயா? மாமிசம் மீன் சாப்பிடுகிறவர்கள் வயலில் விதைப்பதாயிருந்தால் உண்ணலாம். மண்ணால் தேவி தேவதைகளைச் செய்து உயிர்களை வெட்டிக் கொடுக்கிறாயே, ஐயா! உன் தேவதை உண்மையானதாக இருந்தால் வயலை ஏன் மேயக்கூடாது ஐயா!

கபீர் சொல்கிறார் : "அன்பர்களே கேளுங்கள். நாளும் இராமன் பெயரைச் சொல்லுங்கள், செய்வதெல்லாம் நாக்கின் சுவநலத்துக்குத்தானே. அதை மாற்றி விடுங்கள், ஐயா."

## 188

ஏ முட்டாளே, ஒன்றுமறியாதவனே, மறந்து விடுகிறாய். நீ ஒருமுறைகூட இராமனை அறிந்ததில்லையே! வலுப்பிடியாகக் கொண்டுவந்து பசுவை வீழ்த்தினாய்—கழுத்தை அறுத்து அதன் உயிரை வாங்கினாய்! உயிருடன் இருக்கும் உயிரைப் பிணமாக ஆக்கி அதற்கு 'ஹலால்' (சாஸ்திர சம்மதமான கொலை—புண்ணியம்) என்று பெயரிட்டாய்.

எதன் மாமிசத்தை நீ சுத்தமானது, தூயது என்கிறாயோ அதன் உற்பத்திக் கதையைக் கேள்.

அப்பா, வீரியத்திலிருந்துதான் மாமிசம் உற்பத்தியாயிற்று. நீ உண்ணும் மாமிசம் பவித்திரமானது அல்லவே அல்ல. அட முட்டாளே, உன் குற்றத்தை ஒப்புக்கொள்கிறதில்லை. 'நான் பெரிய காரியம் செய்தேன் என்று பெருமை பேசிக்கொள்ளவும் செய்கிறாய்! நீ நல்லுரை தந்தாயே அதைக் கேட்ட அவர்கள் செய்த கொலையும்* உன் கழுத்தில் தான். கருமை போயிற்று; வெண்மை வந்தது (வயது ஆயிற்று. நாகரிகம் வந்தது) ஆனால் உள்ளம் மட்டும் வெண்மை அடையவில்லை. ரோஜா நமாசு. 'பாங்க்' என்ன வேண்டிக் கிடக்கிறது? தெய்வம் உள்ளே உட்கார்ந்து சாகிறது! பண்டிதர்கள் வேதம் புராணம் படிக்கின்றனர். மௌலானா குர்ஆன் படிக்கிறார்.

கபீர் சொல்கிறார் : "இராமனை ஒரு முறையாவது அறியாதவர்கள் நரகத்துக்குப் போகிறார்கள்."

## 189

வா, அப்பா. என் ஹரியினுடைய பெயர் (தெரிந்துகொள்); மற்ற எல்லாவற்றையும் விட்டுவிடு. என்ன லாபம்? அப்பொழுது 'ஆதம்' எங்கே இருந்தார்? ஏவாள் எங்கிருந்தாள்? பீரும் நபியும் அப்பொழுது எங்கே ஏற்பட்டிருந்தனர்? அப்பொழுது ஆகாயம் ஏது? பூமி ஏது? வேதம் புத்தகம் புராணங்கள் தாம் ஏது? மசூதி எந்த உலகத்தில் தயாராயிருந்தது? ரோஜா (விரதம்) ஈத் (பண்டிகை) எல்லாம் பொய். உண்மை அல்லாவின் பெயர் ஒன்று தான். அதற்குச் சலாம் செய். குனிந்து குனிந்து சலாம் செய்.

---

* நீதான் பொறுப்பாளி

சொல், சுவர்க்கம் எங்கிருந்து வந்தது? எதற்காக நீ (அது கிடைக்கும் என்று) கத்தி எடுத்து வெட்டுகிறாய்? செயற்கைக் கடவுள்களை ஏற்படுத்திக்கொண்டு வந்தனர். ஹிந்து, துருக்கர் இரண்டு தனி வழிகள் ஏற்படுத்தினர். அப்பொழுது இரவு ஏது? பகல் ஏது? செயற்கை எல்லாம் அப்பொழுது எங்கே ஏற்பட்டது? அவருக்கு சாதி ஏது? குழு ஏது?கபீர் சொல்கிறார் : "அவருக்குப் பகலும் கிடையாது, இரவும் கிடையாது."

## 190

ஆசனத்தையும் காற்றையும் (பிராணாயாமத்தையும்) திடப்படுத்து. ஏய். மனத்தின் அழுக்கை நீக்கிவிடு. பைத்தியமே, தலையை மொட்டையடித்து எவ்வளவு பளபளஎன்று ஆக்குகிறாய்? உடல் முழுவதும் திருநீறு அணிந்து கொள்கிறாய்! எவனுக்கு மதம் உண்மையாயிருக்கிறதோ அவன் இந்து ஆனால் என்ன, முசல்மான் ஆனால் என்ன? வேதம் புராணம் படித்து என்ன பயன்? பிரமஞானம் அறிந்தவன்தான் பிராமணன்.

கபீர் சொல்கிறார் : "வேறு ஒன்றும் செய்ய வேண்டாம். இராம நாமத்தைச் செபித்தே வெற்றி கொள்ளலாம்."

## 191

ஆத்மா ராமை அறியாத பொழுது ஒன்றும் கட்டாமல் இருந்தால் என்ன, புலித்தோலைக் கட்டினால் என்ன? ஒன்றும் கட்டாமலிருந்தால் யோகம் ஏற்பட்டுவிடும் என்றால் காட்டிலுள்ள விலங்குகளுக்கெல்லாம் முக்தி ஏற்பட்டு விடாதா? மொட்டை அடித்துக்கொண்டால் சித்தி ஏற்படும் என்றால் மொட்டை (செம்மறி) ஆடுகள் ஏன் முக்தி அடையா? சொத்து வைத்து விளையாடலாம் என்றால் எந்த அரசன் பரமகதியை அடைந்திருக்கிறான்? படிப்பதினாலும் அதைச் சிந்தித்து அறிவதனாலும் அகங்காரம் ஏற்படுகிறது. பாதியில் மூழ்கி விடுகின்றனர். இக்கரையும் இல்லை, அக்கரையும் இல்லை.

கபீர் சொல்கிறார் : "சகோதரா கேள். ராம நாமம் இல்லாமல் யாரும் சித்தி அடைந்ததில்லை."

## 192

இந்த விளையாட்டை எல்லாம் பார்த்த என் மனம் மயங்கித் தலை சுற்றுகிறது. அதனால் இரவும் பகலும் உன் குணத்தில் ஈடுபட்டுக் களித்திருக்கிறேன். ஒருவன் பாடம் படிக்கிறான். ஒருவன் புரியாமல் மயங்கித் தவிக்கிறான். ஒருவன் எங்கும் போவதில்லை. அசையாமலே ஒரு இடத்தில் வாசம் செய்கிறான் ஒரு நாள் யோகம், யுக்தி என்று உடலுக்கு இளைப்பையும் தொல்லையையும் ஏற்படுத்திக்கொள்கிறான். ஒருவன் தானம் தருமம் செய்கிறான். ஒருவன் பிதற்றிப் பிதற்றிப் பதற்றம் அடைகிறான். ஒருவன் தந்திரம், ஒருவன் மந்திரம், ஒருவன் மருந்து இப்படி முயற்சி செய்கிறார்கள். ஒருவன் எல்லாச் சித்தியையும் வசப்படுத்தி வைக்கிறான். ஒருவன் தீர்த்தமாடல், விரதம் முதலியன செய்து உடலை வெற்றி கொள்கிறான். ஒருவன் இராமநாமத்திடம் அன்பு செலுத்துகிறான். ஒருவன் புகை போட்டுக் கடுமையாக்கிக் கொள்கிறான். (எல்லாம் இருந்தும்) உனக்கு முக்தி இராம நாமம் இல்லாமல் கிடைக்கப் போவதில்லை. சற்குருவின் சொற்கள் உன்னைக் கூவிச் சொல்கின்றன: இப்பொழுது அநுபவத்தை எண்ணி அடிவேரைப் பிடித்துக் கொள்.

கபீர் சொல்கிறார்: "கிழத்தனம் சாவு இவற்றிற்கு அசையாமல் நான் இருப்பேன். இராமனுடைய அருள் ஏற்பட்டு விட்டது."

## 193

சந்தர்களே! ராம நாமம் கிடைத்தவர்கள் பிறகு இந்தப் பிறவிக் கடலுக்கு வரமாட்டார்கள். சங்கமர்கள் (ஒரு வகைச் சாதகர்கள்) சித்தியைத் தேடி ஓடுகிறார்கள். 'சிவசிவ' என்று சொல்லிச் சிவனுடைய வாசலுக்குச் சென்றார்கள். அவர்களை விட்டு ராமன் தனித்தே இருந்துவிட்டார். சங்கமர்கள் சுற்றுகிறவர்கள்; பிறவியை என்றும் ஒழிக்க மாட்டார்கள். படிப்பார்கள், சிந்திப்பார்கள். பெயரை மட்டும் உச்சரிக்க மாட்டார்கள். உடலைத்தான் படைப்பாளன் நிலை நிறுத்துவார். அவர்களிடமிருந்து ராமன் ஒதுங்கியே இருந்துவிடுவார். பண்டிதர் நன்கு வேதம் சொல்வார். படிப்பார், சிந்திப்பார், ஆனால் உண்மை தெரியாது. சந்தியாவந்தனம், தர்ப்பணம், நியமம், ஆசாரம் ஒன்றுக்கும் குறைவிராது. இராமன் அவர்களிடமிருந்து தனித்து இருந்து விடுவார்.

சித்தர் ஒருவர்: அவருக்குப் பால்தான் உணவு. அவாவை விடமாட்டார். வெகுளி இன்ப ஆசைகளையும் விடமாட்டார். அரசர்களின் வாசலைத் தேடித் திரிவார். இராமன் அவர்களிட மிருந்தும் ஒதுங்கி இருந்துவிடுவார்.

வைராகி பல வேஷங்களைத் தரித்துக்கொள்வார். கர்மம், தர்மம் என்ற யுத்தி எல்லாம் பேசுவார். மணி அடித்து ஒலி எழுப்புவார். ராமன் அவர்களிடமிருந்தும் ஒதுங்கி விடுவார்.

யோகி ஒருவகையாக மனத்தில் யோகதாரணம் செய்வார். காற்றை உள்ளே திருப்பிச் சாதனை புரிவார். யோகம் யுத்தி எல்லாம் வைத்திருப்பார். ராமன் அவர்களிடமிருந்தும் தொலை விலேயே நிற்கிறார். தவம் செய்வோர் ஒருவகை. உடலைக் கருக்கிக் கொள்வார். ஊரை விட்டுக் காட்டில் இருப்பார். கந்தம் மூலம் பலம் என்று வேர் கிழங்கு பழங்களை உண்பார். இராமன் அவர்களிடமிருந்தும் ஒதுங்கியே இருக்கிறான்.

மௌனி என்பவன் வாய் பேசாமல் இருப்பான். கிராமத்தில் (புகை கிளப்புவான்) சாம்பிராணி புகை போடுவான். பாலைச் சாப்பிட்டு விட்டு 'பிள்ளை வரம் தந்தேன்' என்று ஊறிவிட்டுப் போய் விடுவான். இராமன் அவனிடமிருந்தும் ஒதுங்கி விடுகிறார்.

யதி ஒரு வகை. அநேக யுக்திகள் செய்வர். வயிற்றிற்காகச் சடை வளர்ப்பார். பகலும் இரவும் 'உம், உம்' என்று சத்தமிடு வார். இராமன் அவர்களிடமிருந்தும் தொலைவில் சென்று விடுகி றார். பக்கிரி கழுத்தை அறுத்து உயிரை எடுக்கிறான். வாயினால் எல்லோரிடமும் "குதா குதா" என்பான். தடியை வைத்துக் கொண்டு "மதாரா"வின் தடி என்பான். இராமன் அவர்களிட மிருந்தும் விலகியே இருக்கிறார்.

கபீர் சொல்கிறார்: "உண்மையென்று ஒப்புக்கொண்ட கருத்தைக் கேளுங்கள். சாரமான சொல்லை நாம் நன்கு வெளிப்படச் சொல்லி விட்டோம். நாம் சொல்வதைக் கேளாத வர்களிடமிருந்தும் இராமன் ஒதுங்கியிருந்து விடுவார்."

## 194

தொனியின் சேதியைக் கேட்க மாட்டாய். 'அநாகத நாதம்' ஒலிககிறது. கோயிலுள் இசை நிறைந்து ஒலிக்கிறது. வெளியில் கேட்பதால் என்ன லாபம? கஞ்சா, அபினி, அபினித் தழை, பங்கிகள் எல்லாம் குடிக்கிறது. அன்புச் சுவை, ஒன்றை மட்டும் பருகினாயில்லை. வெறி கொண்டு விட்டால் ஆகிவிடுமா?

காசி சென்றாய், துவாரகை சென்றாய். எல்லாத் தீர்த்தங் களையும் சுற்றித் திரிந்தாய். வஞ்ச மூட்டை திறந்தபாடில்லை. புண்ணிய நீர்கள் இருக்கும் ஊர்களுக்குச் சென்றதனால் என்ன ஆயிற்று? புத்தகங்கள் நூல்கள் எல்லாம் படிக்கிறாய். தினம் மற்றவருக்கும் எடுத்து விளக்குகிறாய்! 'திரிகுடி' அரண்மனையை மட்டும் (யோக சாதனையில் மனம் செல்லும் இடம்) புருவத்துக்கு நடுவே தேடுகிறாய் இல்லையா? உளறி உளறிச் செத்தால் என்ன பயன் (அடைவாய்)? காஜி புத்தகத்தைத் தேடுகிறான்! (ஆய்கிறான்); பிறருக்கும் (நசீகத்து) அறிவுரை தருகிறான். அந்த நிலையை மட்டும் எட்டுகிறதில்லை. காஜியானதால் என்ன லாபம்?

சதுரங்கம், படம், சீட்டு எல்லாம் தவறான நிறம் கொண்ட காய்கள் (கெட்ட பழக்கங்கள்.) அன்பின் பந்தயம் வெற்றி கொள்ளவில்லை. சூதாடியாவேன் என்றால் என்னபயன்? யோகி, திகம்பர சந்நியாசியைவிடப் பெரியவன். உடையைச் சிவப்பு நிறத்தில் நனைத்திருக்கிறான். ஆனால் அந்த நிறம் (ஆத்ம போதம்) அவனுக்குக கிடைக்கவில்லை. துணியை நிறம் ஏற்றிக் கொண்டால் என்ன பயன்? கோயில், ஜன்னல், கூடாரம் தோட்டம் - எங்கும் எப்பொழுதும் இனபமாக இரு.

கபீர் சொல்கிறார்: "சரிதான் அது. ஒவ்வொரு சடத்திலும் (உடலிலும) இறைவன் களிநடம் புரிந்து கொண்டிருக்கிறான்."

## 195

யாருடைய இதயத்தில் இறைவன் பெயர் இல்லையோ அவர் கழுத்தில் மாலை (உருத்திராட்சம், துளசி முதலியவற்றாலான மாலைகள்) போட்டுககொண்டு எனன பயன? கையில் செப மாலை எடுத்துததான் என்ன? சாத்திரம் படித்துத்தான் என்ன, சங்கு ஊதித்தான் என்ன? காசியில் வசித்து என்ன பயன்? கங்கை நீா குடித்துத்தான் என்ன பயன்? விரதம் கொண்டு இவர் என்ன பெறுவா? நெற்றியில் பொட்டிட்டு எனன காண்பா?

கபீர் சொல்கிறார்: "சோதரச் சாதுக்களே, கேளுங்கள்! எமன் எடுத்துச் சென்று விடுவான்"

## 196

அடே, இருவருமே வழி தெரிந்து கொள்ளவில்லை. இந்துக்கள் தம் பெருமையைப் பேசுகிறார்கள். தங்கள் பாத்திரங்களைத் தொடக்கூட விடுகிறதில்லை. வேசையரின் காலடியில் தூங்குவார்கள்! பாருங்கள், இதுதான் இந்து மதம்! முசல்மான் பீர், ஔலியாக்கள், சேவல், கோழி தின்பார்கள். பெரியம்மாவின் பெண்ணை மணந்து கொள்வார்கள். வீட்டுக்குள்ளேயே பெண் எடுக்கிறார்கள். வெளியில் இருந்து ஒரு பிணம் எடுத்துக் கொண்டு வருவார்கள். கழுவி எடுத்துச் சமைப்பார்கள். எல்லாத் தோழிகளும் சேர்ந்து சாப்பிட உட்காருவார்கள். வீடு முழுதும் பெருமை பேசுவார்கள். இந்துக்களின் இந்துத் தன்மையையும் பார்த்துவிட்டேன். துருக்கர்களில் துருக்கத் தன்மையும் பார்த்து விட்டேன். கபீர் சொல்கிறார்: "சாது சகோதரா! எந்த வழியில் செல்வது?"

## 197

அவதூதரே, பஜனையின் உண்மையே வேறு. எப்படி எதை எழுதிக் காட்டுகிறது? உலகத்தையே புரியாமையில் ஆழ்த்துகிறாய். தத்துவ விசாரணை, அறிவு இல்லாமல் சந்தியாவந்தனம் செய்து என்ன பயன்? தர்ப்பணம் செய்து என்ன பலன் கிடைக்கும்? மொட்டை அடித்துக் கொண்டாய், சடை வைத்துக்கொண்டாய், உடல் முழுவதுமே சாம்பலைப் பூசிக்கொண்டாய், என்ன பயன்? கல்லுக்குப் பூசை செய்தோ, பழங்களைத் தின்றோ என்ன காண முடியும்? இறைவனுடைய சேர்க்கை ஏற்படாமல் உட்கார்ந்து நடத்துவதெல்லாம் பொறியின்பங்கள் தேடுவதுதானாகும். ஞானம், தியானம் இவற்றின் உண்மைநிலை தெரியாமல் 'உங்'காரம் செய்வது வீண். அடைய முடியாத அளப்பரும் ஆழத்தில் விதையைப் போடவேணடும். கருமத்தின் வலுவை அறுத்து விட்டுத் தியானத்தில் ஆழ்ந்து உட்காரவேண்டும்.

கபீர் சொல்கிறார்: "ஏ கோரக்கரே கேளுங்கள். யாருக்கு, எப்பொழுதும் உள்ளே செய்யும் தத்துவ விசாரணை உணவோ, அவர்தான் குடும்பத்துடன் கரை ஏறுகிறார்."

(கோரக்கர்—'நாத்' சம்பிரதாயத்தின் குரு.)

## 198

யோகி மனத்தில் நிறம் பிடிக்கவில்லை. துணியை நிறமேற்றிக் கொண்டான். ஆசனம் போட்டுக் கோயிலில் அமர்ந்து திருப் பெயரை விட்டுக் கல்லைப் பூசை செய்தான். காதைப் பொத்திக் கொண்டு யோகி சடையை வளர்த்துக் கொண்டான். தாடியை வளர்த்து யோகி ஆடாகி விட்டான். காட்டுக்குச் சென்று யோகி புகை போடுகிறான். தோலை எரித்துக்கொண்டு யோகி ஹிஜ்ரா (வியோகி) ஆகிறான். தலையை மொட்டை அடித்துக்கொண்டு யோகி துணியை நிறம் பிடிக்கச் செய்து கொள்கிறான். கீதை படித்து அவன் வாயாடியாகி விட்டான்.

கபீர் சொல்கிறார்: "சாதுக்களே கேளுங்கள், யமன் வாயிலில் வந்துவிட்டான். கட்டிப் பிடித்துச் இழுத்துச் சென்று விடுவான்."

## 199

சாதுவே, 'பஜனை'யின் உண்மையே வேறு. மாலை, முத்திரை எல்லாம் ஏற்றால் என்ன வந்துவிடும்? சந்தனத்தை நெற்றியில் தேய்த்துக் கொண்டதால் பயன் என்ன? தலையை மொட்டை அடித்துக்கொண்டு சடை வளர்த்து உடலில் சாம்பல் பூசித்தான் ஆவதென்ன? தத்துவ விசாரம் இல்லை என்றால் நீரையும் கல்லையும் பூசித்து வேர், பழம், கிழங்கை அருந்தி நியமம், நிட்டை, தீர்த்தம், விரதம் எல்லாம் கைக்கொண்டு தான் என்ன பயன்? பாடி, படித்துக் காட்டி என்ன செய்கிறாய்? உலகத்தை மயக்கத்தில் ஆழ்த்துகிறாய்? சந்தியாவந்தனம், தர்ப்பணம், அறுவகைக் கிரியைகளின் ஆசாரம் இவை எல்லாம் என்ன தரும்? கொலையாளி சாக்கின் மறைவில் கையில் நச்சுத் தினி வைத்திருப்பதுபோல் நீ கொக்குத் தியானத்தில் முழுகி யிருக்கிறாய். (வஞ்சனையாக எதையோ எதிர்பார்க்கிறாய்). உன் உடலுக்குள்ளே ஒரே விகாரம். (மனத்தில் இன்ப நுகர்ச்சி ஆசையால் ஏற்படும் விகாரங்கள்!)

அப்படிச் சொல்லி, 'சுவாமி' (சாமி—சர்து) என்று அமர்ந்து கொள்கிறாய். பொருள் இன்ப நுகர்ச்சிகளையும் வைத்துக் கொள்கிறாய். ஞானம் தியானம் ஒன்றின் உண்மையையும் அறியமாட்டாய். வீணில் ஒரு வேலையும் செய்யாமல் சோம் பேறி வேஷம் போடுகிறாய்!

தலையில் ஏராளமான பாரத்தைச் சுமத்திக்கொண்டு தன் அசட்டறிவைப் பிறர் காதில் ஓதினாய். சற்குருவான குரு இல்லாமல் பேராசை அலையில் அடிபட்டு ஓட்டத்தின் (தாரையில்) இழுபட்டுச் சென்று விட்டனர். மிகவும் ஆழம்; அக்கரை ஏறமுடியாதது. கண்டம் அகண்டத்துக்கெல்லாம் ஒதுங்கியது. கணணாலும் பார்க்க முடியாதது; ஆனால் மயக்கத்தின் வலை அறுந்து விட்டால் செல்வது எளிது. யாருடைய பார்வை மலமற்றதாக இருக்கிறதோ, யாருடைய ஆசமா இராம நாமத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கிறதோ; கபீர் சொல்கிறார்: "அவர்தான் விகாரத்தை விட்டுவிட்டு நீ நான் என்கிற எண்ணத்தை ஒழித்துவிட்டு அந்த இடத்துக்கு வரமுடியும்."

## 200

எல்லாம் பொய்ப் புனைவு அப்பா. பார்த்து ஒருவரும் ஏமாற வேண்டாம். வேடம் தரித்ததனால் ஒருவரும் சித்தராக முடியாது. காமம் குரோதம, பேராசைப் பிடிப்பு இவற்றை விடாமல், சீலத்தில் நனையாமல் உண்மை இன்பம கிட்டாது. வஞ்சமான வேடத்தால் காரியம் நேரடையாது. வஞ்சத் தோற்றத்தை இராமன் விரும்புகிறதில்லை.

கபீர் சொல்கிறார்: "உண்மையான செயல் இல்லை என்றால் எமனுடைய அடியைத் தலை ஏற்றுக்கொள்ளவே வேண்டும்."

## உலகத்தின் சாரமற்ற தன்மை

## 201

பாம்பு கேடுறும், கருடன் அழுகிச் சிதையும். வஞ்சமகனும் அழிவான், நல்லோனும் மறைவான். தான் செய்த பாவம் புண்ணியம் இரண்டும் அழியும். நாம் அறிந்த குணம் நிர்க்குணம் இரண்டுமே அழியும். நெருப்பு அழியும்; காற்று நீரும் அழியும. முழுப் பரப்புடன் படைப்பும் அழியும். விஷ்ணுலோகம் கணத்தில் நாசம் அடையும். பிரளயத்தின் வருகை தெரிகிறது. மாயை மீன் உருவம் எடுத்திருக்கிறது. எமன் வேட்டையாட வருகிறான். அரி, அரன், அயனே தப்பவில்லையே! சுரர், நரர், முனிவர் ஆகியோர் எந்த மூலைக்கு ஆவார்கள்?

## 202

இராமன் போய்விட்டான். இலக்குவனும் சென்று விட்டான். மங்கை சீதை மட்டும் கூடப் போகவில்லை. கௌரவர்கள் போகவும் அதிக நேரம் பிடிக்கவில்லை. ஈர ஓட்டமுள்ள போஜனும் சென்றுவிட்டான். பாண்டவர்த் தாய் குந்தி போன்ற அரசி கூடப் போய்விட்டாள் தெளிந்த புத்தியைத் துணிவாகக் கொண்டிருந்த சகாதேவன் போய் விட்டான். பொன்னான இலங்கைபோயிற்று போகும்போது ஒன்றையும் கொண்டு போக வில்லை ஆகாயம் பரவ, ஊர்கட்டி ஆண்டவன் போகும் போது ஒன்றும் கொண்டு போகவில்லை.

மூட மனிதன் அதிகம் சேர்க்கிறான். தன் சாவை நினைத்து அதிகம் அழுகிறான். 'செத்துத்தான் விடுவோம்' என்று தெரிந்து கொள்கிறதில்லை. பத்துக் காசு சம்பாதிக்கிறான்; எடுத்து உண்கிறான்.

தத்கம் செய்கைகளைச் செய்து சென்றனர். ஒருவருடனும் ஒன்றும் போகவில்லை. இராவணனும் தான் செய்வதைச் செய்து சென்றான். தசரதனும் அப்படித்தான்! (யார் என்ன கட்டி எடுத்துக்கொண்டு போனார்கள்?)

## 203

மனிதப் பிறவி: "எமன் அதை முடிவு செய்கிறான். இந்த உடலுக்கு அலங்காரம் எவ்வளவு? தந்தை, பிறந்தவுடன் என் குழந்தை என்கிறார். சுயநலம் காரணமாக அதை வளர்க்கிறார். காதலி, 'என் அன்பன் நீ!' என்கிறாள். பெண் புலி போல் உருவத்தைப் பிடித்து விழுங்குகிறாள். புத்திரர்கள் மனைவி எல்லோரும் ஒட்டுதல் காட்டுகிறார்கள். நரி போல் வாயைப் பிளந்து கொண்டு காக்கிறார்கள். காகம் கழுகு இரண்டும் நம் சாவை எதிர்பார்க்கின்றன. நரி நாய் இரண்டும் வழி பார்க்கின்றன.

பூமி சொல்கிறது: 'வா' என்னை அடை.' காற்று, "நான் உன்னை எடுத்துப் பரப்புகிறேன்!' என்கிறது. நெருப்பு சொல்கிறது: 'நான் இந்த உடலை எரிக்கிறேன்.' நாய் எரியும் போதே இழுத்து விடுகிறேன் என்கிறது.

ஏ, அறிவிலியே! எந்த வீட்டை என் வீடு என்கிறாயோ அது உன் எதிரி அப்பா. உன் கழுத்துக்குச் சத்துரு அந்த உடலைத்

தன்னுடையது என்று எண்ணுகிறாய். பொருளின் உருவத்தில் உன்னை மறக்கிறாய், அறிவில்லியே! இந்த உடலின் அலங்காரத்தில் வாழ்நாள் முழுவதும் துயர் அடைகிறாய். என் பித்துக் கொள்ளியே. என்னுடையது என்று சத்தம் போடுகிறாய். புத்தி வருகிறதில்லை உனக்கு.

## 204

உண்மை அறியாத மக்கள் என் வீடு என்கின்றனர். எந்த வீட்டை எண்ணிப் பெருமை கொண்டு அலைகிறாயோ அது உன் வீடல்ல யானை குதிரை எருது வாகனம் என்றெல்லாம் பிரமாதமாகச் சேர்த்தாய். கடைசியில் ஊரைவிட்டு விரட்டி விட்டார்கள். காட்டில் வாசம் ஏற்பட்டது. மூட்டை கட்டினாய்; செலவு செய்யாமல் இருந்தாய். இனித் திரும்பப்போகிறாயா? மனைவி வெளியே; அரண்மனையில் பெண்—நடுவே (மியான்) கிழவன்—குடித்தனம். யானைக் கூட்டம் சேர்த்தாயே என்ன ஆயிற்று? மாயையின் சுவையைச் சுவைத்துக் கூடப் பார்க்கவில்லை. அதற்குள் எமன் என்ற பூனை ஓடி வந்துவிட்டது. ஒன்பது மணங்கு நூல் சிக்கிக் கிடக்கிறது. பல பிறவிகளில் ஏற்பட்ட சிக்கல் தெரியவில்லை. கபீர் சொல்கிறார்: "ஏ சந்தர்களே, கேளுங்கள். இந்த நிலைக்கு ஒரு முடிவு செய்யுங்கள்.

## 205

யாரைப் பார்த்தாலும் துயரடைந்திருக்கிறார்கள். உடல் எடுத்து இன்பம் அடைந்தவனைப் பார்க்கவில்லை. உதயம், மறைவு இவற்றைப் பற்றிய செய்தியைச் சொல்கிறேன். நீயே அதன் உண்மையை அறிந்துகொள். வழி நடையில் எல்லோரும் துக்கம் அடைந்தவர்களே. வீட்டுக்காரன் என்ன, வைராகி என்ன? சுக்கிராசாரியாரும் துக்கத்தின் காரணமாகத்தான் வயிற்றில் பிறக்கும் மாயையை ஒழித்தார்.

யோகி வருந்துபவன். சங்கமன் வருந்துபவன். தவம் புரிபவனுக்கு இரண்டு மடங்கு துயர். ஆசையும் வேட்கையும் எல்லா உயிர்களையும் வியாபித்திருக்கின்றன. ஒரு அரண்மனையும் பாழில்லை. உண்மையைச் சொன்னால் உலகம் சலித்துத்தான் நிற்கிறது. பொய் சொல்லக்கூடாது.

கபீர் சொல்கிறார்: "இந்த வழிவந்தவர்கள் எல்லோருமே வருத்தம் கொண்டவர்கள்!"

206

நண்பா! இப்பொழுது தனியே எங்கே செல்கிறாய்? எழுந்து வீட்டைப்பற்றி ஏன் கவலைப்படமாட்டேன் என்கிறாய்? பாயசம், கற்கண்டு, நெய் உருண்டை எல்லாம் தந்து காப்பாற்றி னாயே, அந்த உடலை எடுத்து வெளியே எறிந்து விட்டார்களே! எந்தத் தலையில் வரிந்து பரிந்து தலைப்பாகை கட்டினாயோ அந்த ரத்தினம் போன்ற தலையைக் காகம் கொத்துகிறதே. குச்சி எரிவது போன்று எலும்பு எரிகின்றது. புல்லின் குவியல் போன்று மயிர் பொசுங்குகின்றது. உடன் வருவது சாதி சனமும் இல்லை, தோழனும் இல்லை. யானைக் கூட்டம் சேர்த்தாயே என்ன ஆயிற்று? மாயையின் சுவையைக் கூடச் சுவைத்துப் பார்க்க வில்லை. அதற்குள் எமன் என்ற பூனை வந்துவிட்டது.

கபீர் சொல்கிறார்: "மனிதன் இன்னம் விழிக்கவில்லை. எமனுடைய தடி (கதாயுதம்) 'தம்!' என்று தலையில் விழுந்து விடுகிறது."

207

இராமன் பெயரைச் சொல்; இராமன் பெயர் சொல். மனத்தில் எண்ணிப் பார் குழந்தாய்! கோடியாகச் சேர்த்துப் பணத்தைப் புதைத்துவிட்டு, கைகளில் ஊசலாடிக்கொண்டு போகிறாயே! தந்தை, பாட்டனார், அவருக்குத் தந்தை எல்லோரையும் புதைத்த மண் இதுதான். இருட்டி விட்டது. இதயம் வெடித்து விட்டது. அந்த அலங்காரம் எல்லாம் எங்கே விட்டாய்? இந்த உலகம் பயனற்ற வேலை. கடைசிக் காலத்தில் எவரும் இருக்க மாட்டார்கள். பிறக்கவும் அழியவும் நேரமாகிறதில்லை. மேகத் தின் நிழல்போல்தான். சொந்தக்காரர், கோத்திரம் குலம், குடும்பம் எல்லாம் தான் இருக்கின்றன. அவற்றால் என்ன பெருமை?

கபீர் சொல்கிறார்; "ஒரு இராமனைப் பஜனை செய்யாமல் எல்லாச் சாமர்த்தியமும் முழுகித் தொலைந்தது."

208

பித்துப் பிடித்தவனே! இந்த உடல் வெற்றுப் பொருள். இறந்தால் யாரும் தொடக் கூட மாட்டார்கள். டோலி பல்லாக்கு எல்லாம் எடுத்து வருவார்கள், கொஞ்சம் பணம் இருந்தால். மேல்மூச்சு வந்துவிட்டது, சங்கும் வந்து விட்டது.

பரிவாரங்களைக் கூப்பிடுகிறார்கள். யார் வந்தாலும் உடனே போய்விடுகிறான். ஒரு கணம் கூடத் தங்குவதில்லை. சந்தனம் குங்குமம் எல்லாம் அணிந்து கொள்ளட்டும். கழுத்தில் யானை முத்தாலான மாலைதான் அணிந்திருக்கட்டும். இறந்தால் கழுகுகள் உடலை அலகால் கொத்தும். நரி வயிற்றைக் கிழிக்கும்.

கபீர் சொல்கிறார்: "ஏ சந்தர்களே, கேளுங்கள்; ஞானம் அற்றவன் மதிஅற்றவனே."

## 209

ஒரு நாள் இந்தக் கதிதான் எல்லோருக்கும் ஏற்படும். அரசனாயிருந்தாலும் சரி, ஆண்டியாயிருந்தாலும் சரி. அட மனதே! உலகத்தில் பெருமை கொண்டு சுற்றுகிறாயே, என்ன உறவடா? தாய் என் பிள்ளை என்பாள்; சகோதரி, 'என் உடன் பிறந்தான்!' என்பாள். சகோதரன் 'இவன் என் வலக் கை' என்பான். மனைவி என் புருஷன் என்பாள். தன் வயிற்றைப் பிடித்துக்கொண்டு அம்மா அழுவாள். கையைப் பிடித்துக் கொண்டு சகோதரன் அழுவான். சுற்றி விழுந்து மனைவி அழுவாள். அன்னம் மட்டும் தனியே பறந்துவிடும். உயிருடன் இருக்கும்வரை தாய் அழுவாள். சகோதரி பத்து மாதம்வரை அழுவாள். மனைவி பதின்மூன்று நாள் வரை அழுவாள். பிறகு வீட்டில் குடியிருக்க ஆரம்பித்துவிடுவாள் (வேறு புருஷனுடன்).

நாலு முழம் துணி உடுத்தி ஒரு நாலு கஜம் கட்டையைக் குதிரையில் (சிதையில்) ஏற்றிவிடுவார்கள். நான்கு மூலைகளிலும் நெருப்பு வைப்பார்கள், காமன் பண்டிகை மாதிரி எரிய விட்டு விடுவார்கள். மரம் போல் என்பு எரியும், புல்லைப் போல் மயிர் பொசுங்கும், தங்கம் போல உடல் எரிந்தது. ஒருவரும் அருகில் கூட வரவில்லை. வீட்டில் மனைவி அழ ஆரம்பித்தாள். நாலா புறமும் தேடினாள். கபீர் சொல்கிறார்: "சாது சகோதர, கேளுங்கள், இந்த உலகத்தின் ஆசையை விட்டுவிடுங்கள்."

## 210

இருக்க முடியாது. தேசம் பாழ்பட்டது. இந்த உலகம் காகிதப் பொட்டணம். நீர்த்துளி விழுந்தால் அழுகி உதிர்ந்துவிடும். இந்த உலகம் முள்வேலி, இதில் சிக்கித் தவித்துச் சாகவேண்டியதுதான். இந்தச் சம்சாரம் மரம், புதர். நெருப்புப் பட்டால் எரிந்துவிடும்.

கபீர் சொல்கிறார் : "ஏ சகோதர சாதுவே, சற்குருவின் பெயர்தான் பிறப்பிடம்."

## 211

உயிர் போகும், நாம் அறிவோம். ஐந்து தத்துவங்களால் ஆன கூடு. அதில் இருக்கும் பொருள் வேற்றுப் பொருள். வருவதையும் போவதையும் ஒருவரும் பார்க்கவில்லை. நீர் இல்லாமலே மூழ்கிவிடுகிறது. அரசன் போய்விடுகிறார், அரசி போய்விடுகிறாள், அபிமானிகள் போய்விடுகிறார்கள். யோகம் செய்துகொண்டே யோகி சென்றுவிடுகிறார். கதை சொல்லிக் கொண்டே ஞானி போய்விடுகிறார். பாவ புண்ணியச் சந்தையை விரித்திருக்கின்றனர். தருமம், தண்டனை காவலாளிகள், ஐந்து தோழிகள் சேர்ந்து பார்க்க வந்தனர். ஒருத்தியைவிட ஒருத்தி கெட்டிக்காரி. சந்திரன் போய்விடும், சூரியன் போய்விடும். காற்று, நீர் எல்லாம் போய்விடும்.

கபீர் சொல்கிறார்; "புத்தி தெளிந்த பக்தன் ஒருவனே போகமாட்டான்.

## 212

மனமே, தம்பி, நீ ஏன் மறந்தாயடா? உன் புத்தியும் நினைவும் எங்கே தொலைந்து விட்டன? பறவைகள் இரவில் தங்குவதற்கு மரத்துக்கு வந்தது போலவே காலை ஆனதும் தத்தம் விருப்பப் படி பறந்து சென்றுவிடும். கனவில் உனக்கு அரசு கிடைத்திருக் கிறது. பதவி, ஆட்சி, பெருமை எல்லாம் (கனவுதான்) விழித்த வுடன் சேனையும் கிடையாது, கருவிகளும் கிடையாது. இமை திறந்ததும் (நினைவு) வந்துவிடுகிறது. தாய், தந்தை, உறவினர், பையன், மனைவி; ஒருவரும் ஒட்டிய உறவு இல்லை. இவர்கள் எல்லாம் தத்தம் நலத்துக்குச் சேர்ந்தவர்கள், பொய்யாக உலகத்துக்குப் பெருமை காட்டுகிறவர்கள். கடலில்தான் அலை எழும்புகிறது. அதற்குத் தனிக் கணக்குக் கிடையாது. கபீர் சொல்கிறார் : "சகோதர சாதுவே, கடலில் அலை அமுங்கி விடும்."

## 213

சாது, என் மனம் கேட்கவில்லை. கேட்கவில்லையடா என் மனம்! அடிக்கடி சொல்லி, 'உலக வாழ்வு கொஞ்ச நாளடா!' என்று விளக்குகிறேன். இந்த உடலை நினைத்து வீண்பெருமை

கொள்ளாதே. கறுப்பு என்ன, வெளுப்பு என்ன? பக்தி இல்லாமல் கோடி மணம் தேய்த்தால் என்னடா? பயன் இல்லையப்பா. இந்த மாயை எல்லாம் பார்த்து மறக்காதே. குதிரை என்ன, யானை எதற்கடா? பணம் இலட்சம் கோடி எல்லாம் சேர்த்தால், என்ன லாபம்? சந்தேகம், கெட்ட புத்தி, கெட்டிக்காரத்தனம்; பைத்தியமே, வாழ்நாள் கழிந்துவிட்டதா இல்லையா? சற்குருவின் மனத்தைக் கட்டிக் காப்பாய், நல்ல புனிதச் சேர்க்கை இன்று வந்து சேரட்டும், விளைவைத் தூக்கிக்கொண்டு. நடக்கத் தெரியாத குழந்தையைப் போல விழுந்து விழுந்து விடுகிறாய்.

கபீர் சொல்கிறார் : "ஊசிக்குள் நடுவே நூலைப் போலச் சித்தத்தைக் (குருவின்) திருவடிகளுக்கு நடுவே வைத்துக்கொள் அப்பா!"

## 214

இந்த உலகம் இரவில் காணும் கனவு. மனமே, ஒருவரும் நம்மவர் இல்லை. இதை அறிந்துகொள். இந்த மோகத்தின் இழுப்பு கடுமையானது அப்பா. உலகம் முழுவதும் அதில் மிதந்து போகிறது. நீர்க்குடம் உடைந்தது. இலை கிளையிலிருந்து விழுந்தது, அப்படித்தான் மனிதன் வாழ்வு. இப்பொழுதாவது, வீண் பெருமை கொண்டவனே, விழித்துத் தெளிவுகொள்.

உடல் வெண்ணிறம் என்று பெருமை கொள்ளாதே. உலகில் வாழ்வு கொஞ்சம்தான். மதம், பேராசை கெட்டிக்காரத்தனம் (பொல்லாத்தனம்) இவற்றை எல்லாம் விடு. உலகத்தில் கவலையற்று இரு. உயிர் கிளம்பிப் போகும்போது உலகில் ஒன்றும் பயன் தர வராது. தோழன் பரிவாரம், பிள்ளை மனைவி எல்லோரும் அன்றே தனியாகி விடுவார்கள். மனித உடல் இப்படி என்று அறிந்து இறைவன் பெயருடன் அன்பை ஒட்டிக்கொள். எமன் வலையின் சிக்கல் ஒழியட்டும், கபீர் சொல்கிறார் : "அப்படிப் பட்டவர் (கபீர்) அழிவற்றவர்."

## 215

எதைக் கேட்பேன்? ஒன்றும் நிலையாக இருப்பதில்லையே! கண்கள் பார்த்திருக்கும்போதே போய்விடுகின்றன. (எல்லாம்) ஒரு இலட்சம் புத்திரர்கள், ஒன்றரை லட்சம் சொந்தக்காரர்கள் இருந்தும் இராவணன் வீட்டில் விளக்கேற்ற ஒருவரும் இல்லை.

இலங்கை (போன்ற) கோட்டை; கடல் (போன்ற) அகழ்; இருந்தும் அவை இராவணனுக்குத் துணையாக இல்லை. பொன்னாலான அரண்மனை, வெள்ளிக் கூரை; இருந்தும் நகரின் அரசன் விட்டுவிட்டுச் சென்று விட்டான்; ஒருவன் அரண்மனை கட்டுகிறான்; ஒருவன் கூரை வேய்கிறான். அன்னம் (ஆத்மா) பறந்து விடுகிறது. மண் தங்கி விடுகிறது. கூட வருகிறதும் இல்லை; ஒருவரும் சேர்ந்து போகிறதுமில்லை. யானைக் கூட்டம் சேர்த்ததால் என்ன பயன் கிட்டிற்று?

கபீர் சொல்கிறார் : "கடைசி நேரம் வந்ததும் (எல்லாம் தோற்று சூதாட்டக்காரன் போலக் கையை உதறிவிட்டுப்) போக வேண்டியதுதான்."

## இறுதிக் காட்சி

### 216

கிளி கூட்டை விட்டுப் பறந்தது. இந்தக் கூட்டில் பத்து வாயில்கள். பத்து வாயில்களுக்கும் கதவுகள் இருக்கின்றன. கண்களிலிருந்து நீர் வழிய ஆரம்பித்துவிட்டது. 'நற்பேறற்றவனே! நீ ஏன் பேசவில்லை?' கபீர் சொல்கிறார் : "சகோதர சாதுவே, கேளுங்கள்! அன்னம் பறந்துவிட்டது. நூல் அறுந்துவிட்டது." (உயிர் பிரிந்து விட்டது.)

### 217

எந்த வஞ்சகன் நகரத்தைக் கொள்ளையடித்தான்? சந்தன மரத்தில் கட்டில் செய்து, அதன்மேல் மணப்பெண் தூங்குகிறாள், தோழி, எழுந்திரு. என் வகிரை எடுத்து வாரிவிடு. மாப்பிள்ளை என்னிடம் ஊடல் கொண்டிருக்கிறார். எமராசன் வந்தான், கட்டிலில் ஏறி உட்கார்ந்தான். கணகளில் நீர் பொழிந்து வழிகிறது. நான்கு பேர் சேர்ந்து கட்டிலைத் தூக்குகின்றனர். நான்கு திக்குகளிலும் ஆரவாரம்.

கபீர் சொல்கிறார் : "சாது சகோதரா, கேள்! உலகத்திலிருந்து உறவு தொலைந்துவிட்டது. (கணவன் போகும்போது பெண் நிலை.)

### 218

எதற்காகப் போர்வை போர்த்துகிறாய்? போகின்ற நேரம். உயிரான இராமர் வெளியேற ஆரம்பிக்கும்பொழுது இரண்டு

கண்களின் மணிகளும் திரும்பிவிடுகின்றன. உள்ளே இருந்து வெளியே கொண்டு வந்த உடனேயே அரண்மனை 'அட்டாரி' எல்லாம் அற்றுப் போய்விட்டன. நான்கு பேர் சேர்ந்து தூக்கிக் கொண்டு தெரு வழி எல்லாம் அழுதுகொண்டே எடுத்துச் செல் கின்றனர். கபீர் சொல்கிறார் : "சகோதரா சாதுவே, கேளுங்கள்! கூடவந்தது அந்தக் காய்ந்த குச்சிதான்."

## அகம்பாவம்

### 219

இராமையாவின் காதல் மணப் பெண்ணே! கடை கொள்ளை போய்விட்டது. தேவலோகம் கொள்ளை போயிற்று. நாகலோகம் சூறை போயிற்று. மூன்று உலகங்களிலும் ஆரவாரம் ஏற்படுகிறது. பிரமன் கொள்ளை; மகா தேவரையும் சூறையாடி விட்டனர். நாரத முனிவரும் விழுந்தார். சிருங்கி முனிவரைக் கசக்கி விட்டனர். பராசரருடைய வயிறு கிழிந்துவிட்டது. காது ஊதும் (தீக்ஷை தரும்) சிதாகாசச் சித்தரும் சூறைதான். யோகேசுவரர் விசாரம் செய்துகொண்டிருக்கும்போத அழிந்து விட்டார். நாம்தான் தப்பினோம், இறைவனின் தயவினால். சத்தியத்தின் கயிற்றைப் பிடித்துக்கொணடு இறங்கி அக்கரை ஏறினோம்.

கபீர் சொல்கிறார் : "சாது சகோதரர்களே, இந்த மாயை வஞ்சகியிடம் விழிப்புடன் இருங்கள்."

### 220

நாம் இருக்கும்பொழுது ஒருவரும் இல்லை. நம்முள் எல்லோரும் இருக்கின்றனர், 'இராமா. சொல்லுங்கள்! அப்பொழுது உங்களுக்கு யார் சேவை புரிந்தார்கள்? தேவா, அதை எனக்கு நன்றாக விளக்கிச் சொல்லுங்கள். உண்மை யைச் சொல்லுங்கள். பொய்யனுக்கு பொய்ச் சேர்க்கைதான் கிட்டும் (என்று கேட்ட பிறகு) கபீர் சொல்கிறார் : "மறை என்றதையெல்லாம் நாம் பார்த்து விட்டோம். அங்கே 'பார்க்கி றவன்' வாயையும் (உள்ளேயும்) அமர்ந்து பார்த்து விட்டோம். இந்த விதம் சொன்னால் எல்லோரும் ஒப்புக்கொள்ளுங்கள் வாய் (பேச்சு) எப்படியோ அப்படித்தான் இதயமும் இருக்கும்.

கபீர் சொல்கிறார் ; "அன்னம் (ஆத்மா) முத்தியடைய நாம் சொல்கிறோம். விடுபடு, (பற்று ஒழி) சகோதரா!"

## 221

நாம் சாகமாட்டோம், உலகம் சாகும். வாழ்விக்கிறவன் நமக்குக் கிடைத்து விட்டான். என் மனது ஒப்புக்கொண்டு விட்டது, நான் சாகமாட்டேன் என்று. இராமனை அறியாதவன் தான் சாகிறான். சாக்தர்கள் இறந்து விடுவார்கள், சந்தர்கள் பிழைத்து விடுவார்கள். (ஏன் எனில்) அவர்கள் நிரப்பி நிரப்பி இராம ரசாயனத்தைக் குடிக்கிறார்கள். அரி இறந்தால் நாங்கள் சாவோம், அரி சாகவில்லை. நாங்கள் எதற்காகச் சாகிறோம்? கபீர் சொல்கிறார்: "மனத்தை மனத்துடன் சேர்த்துவிட்டோம். இன்பக் கடலில் ஆழ்ந்துவிட்டோம்.

## 222

எங்கிருந்து வந்தாயோ அந்தத் தேசம் அமர தேசம். அங்கே நீர் கிடையாது, காற்று பூமி ஆகாயம் ஒன்றும் கிடையா. அந்தணன், சத்திரியன், சூத்திரன், வைசியன் என ஒன்றும் இல்லை. முகலாயன், பட்டாணியன், சய்யது, சேக்கு(ஷேக்) என்றெல்லாமும் கிடையா. ஆதிப் பெருஞ்சோதி இல்லை. கௌரி, கணேசன் கிடையாது. பிரமன், திருமால், மகேசுவரன், ஆதிசேஷன், யோகி சங்கமன், முனி, தர்வேசன் ஒருவரும் இருக்க மாட்டார்கள். தொடக்கமும் கிடையாது. முடிவும் கிடையாது. காலமும் கிடையாது, துயரும் கிடையாது. கபீர்தாசர் செய்தி கொண்டு வந்திருக்கிறார்: சாரசப்தம் பிடித்துக்கொண்டு அந்தத் தேசத்துக்குப் போ.

## 223

மெல்லியது. மெல்லியதாக நெய்த ஆடை. ஊடு எது, பாவு எது? எந்த நூலால் நெய்யப்பட்ட ஆடை? [1]"இங்களா" (ஈடா) என்ற நாடி ஊடு; 'பிங்களா' என்ற நாடி பாவு[2] "சுழுமுனை" நூலால் நெய்யப்பட்ட ஆடை. எட்டுத் தளக் கமலம் [3]சர்க்கா

1. இடை பிங்கலை என்பர் தமிழ் முனிவர்
2. ஸுஷும்னா என்பர் வட நூலோர்
3. நூல் நூற்கும் ராட்டை

வாகச் சுற்றுகிறது. ஐந்து தத்துவம், மூன்று குணம் இவைகளாலான ஆடை இது. இதை நெய்ய இறைவனுக்குப் பத்து மாதம் ஆயிற்று. நன்றாகச் சரி பார்த்துப் பார்த்து நெய்தார். அந்தப் போர்வையை சுரர், நரர், முனிவர் எல்லாம் போர்த்துக் கொண்டனர்; போர்த்து அழுக்காக்கினர். கபீர்தாஸர் மிகவும் உன்னிப்பாகப் போர்த்தார். அப்படியே நலுங்காமல் எடுத்து வைத்துவிட்டார்.

[கபீர்தாசர் தாம் மட்டும் பரிசுத்த வாழ்வு வாழ்ந்து மாயையின் பிடியில் படாமல் உடலைப் புனிதமாகவே வைத்துக் கொண்டிருந்து கழற்றி வைத்துவிட்டதாகக் கூறுகிறார்.]

## 224

உன் வைரத்தை இந்தக் குப்பையில் தேடுகிறாயே! ஒருவன் கிழக்கு, ஒருவன் மேற்கில் தேடுகிறான். ஒருவன் நீரில் கல்லில் தேடுகிறான். சுரர், மனிதர், முனிவர், பீர், ஔலியா எல்லாரும் இந்த ஆட்ட அசைவிலேயே மறந்து நின்றுவிட்டனர். கபீர்தாசர் இந்த வைரத்தைத் தேடி எடுத்தார். அதைத் துணித் தலைப்பில் நன்றாக முடிந்து வைத்துக்கொண்டார்.

## 225

இந்தத் தொந்தத்தின் வீண்விழா வேண்டாம். குரு இல்லை, சீடன் இல்லை. இந்த உலகம் எல்லாம் என்று விரிந்து பரந்ததோ, என்று ஆண்டவன் தனியாக இருந்தாரோ, அன்றிலிருந்து கோரக்கரே நாம் வைராகி. நம் "சுரதி" (கடவுள் நினைவின் தொடர்ந்த இன்பம்) பெயருடன் ஒட்டியது. குல்லாய் வைத்துக்கொண்ட பொழுது பிரமன் இல்லை. பொட்டு இட்டுக் கொண்டபொழுது விஷ்ணு இல்லை. நாம் யோகம் கற்ற அப்பொழுது சிவன் சக்தியும் பிறக்கவில்லை.

சத்திய யுகத்தில்நாம் காலணி அணிந்தோம்; திரேதா யுகத்தில் கொடி ஏந்தினோம்; துவாபர யுகத்தில் நாம் (அட்பந்த்) கோவணம் தரித்துக் கொண்டோம்; கலியில் ஒன்பது கண்டத்தையும் சுற்றி வந்தோம். காசியில் நாம் பிறந்தோம். இராமாநந்தர் விழிப்படையச் செய்தார். "சமர்த்த புருஷ்"னின் உத்தரவைக் கொண்டு வந்திருக்கிறோம். ஆத்மாக்களைக் கரையேற்ற வந்தோம். எவருடைய பக்தி உந்நதமாயிருக்கிறதோ அவருக்கு எளிதாகவே சகஜ நிலை (சமாதி நிலை) கிட்டிவிடும்.

கபீர் சொல்கிறார் : "ஏ கோரக்கரே கேளுங்கள்: சப்தத்துடன் செல்லுங்கள் (சப்தம்ஓம்; சாரத்தொனி அல்லது யோக முறையில் உள்ளிருந்து எழும் நாதம்.)

226

பண்டிதரே, படித்துப் படித்துக் கெட்டிக்காரத்தனம் செய்கிறீரே; தான் முக்தி அடைவது எப்படி? அதைக் கொஞ்சம் புரியும்படி சொல்லும். புருஷன் (இறைவன்) எங்கே வசிக்கிறான்? எது ஊர்? அந்த ஊரை, பண்டிதரே எனக்குச் சொல்லும். பிரமன் நான்கு வேதங்களையும் தமதாக்கிக்கொண்டார். அவருக்கு முக்தியின் ரகசியம் தெரியாது. தானம், புண்ணியம் என்றெல்லாம் பேசுகிறார்கள் அவர்கள். ஆனால் தன் சாவின் செய்தி மட்டும் தெரியாது. அடைய முடியாத ஆழமான பெயர் ஒன்று உண்டு. அங்கே நிலையானது—கபீர் தாஸர்.

## பதினாறு வகை உபசாரங்கள்—சாத்துவிக பூஜை

227

அகில், சந்தனம் தேய்த்துக் கோலம் போடு. நல்ல காரியம். மனம் இன்பமடையும். சாடியில் நிரப்பித் திருவடி நீர் கொண்டேன். அன்னங்களுடன் (சாதுக்களுடன்) உரையாடினேன், முழுமையான உற்சாகத்துடன் சற்குரு காட்டித் தந்த சத்தத்தைப் (ஓம்) பாதுகாத்தேன். கிராம்பு, ஏலம், தேங்காய் ஆரத்தி, ஆடை, கலசம், பூச்சு எல்லாம் ஆனபிறகு அடைய முடியாத பெரிய அழகுகொண்ட வெண்மையான சிங்காசனம் - அதில் அமர்த்தினேன். உலகத்தை விட்டேன். அமுத உடல் பெற்றேன். உலகில் ஜுலாஹா (சேணியன்) என்று சொல்லப் பெற்றேன். எண்பத்து நான்கு (இலட்சம்) வகைப் பிறவிச் சிறையையும் விட்டேன். அழியாத அவன் பெயரைச் சொன்னேன். எல்லாச் சாதுக்களும் சேர்ந்து ஆரத்தி எடுத்துப் பாடினார்கள். நல்ல நைவேத்யம் கொடுத்தார்கள்.

கபீர் சொல்கிறார் : "சப்தம் ஒத்துக்கொண்ட ஆற்றல் உள்ளது. எமனிடமிருந்து உயிரை விடுவித்துவிட்டது.

228

பௌர்ணமி, மங்களம் பாடுங்கள். சற்குருவின் பாதம் தொட்டுப் பரமபதம் அடையுங்கள். முதலில் கோயில் (வீடு)

கூட்டிச் சந்தனம் கொண்டு வாருங்கள். அநேகம் புதுத் துணிகள் கொண்டு (ஆஸ்மானகிரி) மேலே இழுத்துக் கட்டி அழகு செய்யுங்கள். அப்பொழுது "பூரண குரு"வுக்கு ஆசனம் விரியுங்கள். குருவின் திருவடிகளைக் கழுவி அங்கே அமர்த்துங்கள். யானை முத்தினால் கட்டம் நிரப்பி அங்கே கோலம் போடுங்கள். அதன்மேல் தேங்காய் (வேட்டி அல்லது பணம்) சுத்தமான இனிய தின்பண்டங்கள் எடுத்து வையுங்கள், கர்ப்பூரம், வாழைப்பழம் பலவகை கொண்டு வாருங்கள் எட்டு வகை வாசனைப் பொருள்கள், பாக்கு வெற்றிலை வரவழையுங்கள். மாவிலைக் கலசம் தயாரித்து நல்ல சோதி ஏற்றுங்கள். மாணிக்க மிருதங்கம் வாசித்து மங்களம் பாடுங்கள். சாதுக்களுடன் சேர்ந்து அப்பொழுது ஆரத்தி எடுங்கள். ஆரத்தி எடுத்த பிறகு தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்யுங்கள். இறைவனுக்கு நைவேத்தியம் செய்ததும் தோழர்கள் எல்லாம் சேர்ந்து பாடுங்கள். ஊழியூழியாக ஏற்பட்டிருந்த பசி தீர்த்து, அடைந்த இன்பத்தில் திளையுங்கள். மிகவும் மகிழ்ந்து குருவைப் போற்றுங்கள்.

கபீர் சொல்கிறார்: நல்ல உள்ளத்துடன் உலகத்துக்கு எழுந்தருளுங்கள்.

சுபம்



யோகம் என்ற பூமியில் பக்தி என்ற விதை விழ, அதனின்று எழுந்தது கபீரின் இலக்கியம். பதினைந்தாவது நூற்றாண்டில் வடக்கே வாழ்ந்த மகான் கபீர் கடவுட் பக்தி மத எல்லைகளை மீறியது என்பதைத் தம் வாழ்வால் உணர்த்தியவர். சிறந்த கல்விமான் அல்லர்; ஆயினும் அவர் பனுவல்கள் தலைமுறை தலைமுறையாக, பக்தர்கள் நாவில் நடம் புரிந்து வருபவை. பொருள் ஆழமும் கவிதை அழகுக்கு ஏற்பச் சொற் செட்டும் மிக்க அவர் குறட் பாக்கள் (தோஹா) ஹிந்தி இலக்கியத்தில் உயர்ந்த மதிப்பு வாய்ந்தவை.



30/-